# கல்கி






KALKI
10.4.2005
ரூ.6.00

## எங்கிட்ட மோதாதே!

## -சந்திரமுகி சவால்



## ஆசிரியர் பக்கம்

"ஒரு பெண் வேலைக்குப் போவதால் ஓர் ஆணின் வேலைவாய்ப்பு பறிக்கப்படுகிறதே... இது நியாயமா...?" - கேட்டவர் சாமானியரல்ல... ஒரு பத்திரிகையாளர்!

'தார்மிக ரீதியிலும் சரி, அரசியல் சாசனப்படியும் சரி... ஆண் - பெண்களுக்குச் சம வாய்ப்புகள் அவசியம். அது மானுட கௌரவத்தின் அடையாளம்' என்ற பதில் அவருக்கு திருப்தி அளிக்கவில்லை! ஞாயிறு நாளிதழ்களின் மேட்ரிமோனியல் பகுதியில், 'நல்ல வேலையில் உள்ள' பெண்ணைத் தேடுவதாக வெளியாகும் விளம்பரங்களை அவர் படிப்பதே இல்லை போலும்!

மத்தியதர வர்க்க இந்தியப் பெண்கள் கடந்த ஐம்பதாண்டுகளில் முன்னேறியிருப்பதைப் பொதுவாக எல்லோருமே ஒப்புக்கொள்வார்கள் (அந்த முன்னேற்றத்தை ஆண் விரோதமாகக் கருதுவோர் விதிவிலக்கு). ஆனால் நம் பெண்களுக்கு, 'தேர்வு' செய்யும் உரிமை' என்பதைச் சமுதாயம் எவ்வளவு தூரம் அனுமதிக்கிறது?

பணிக்குச் சென்றால் ஆணின் வாய்ப்பு பறிபோகிறது என்று கடுகடுப்பவர்கள் ஒரு புறம்; பணிக்குச் செல்லும் பெண்ணை மணந்தால்தான் குடும்பம் நடத்த முடியும் என்று கணக்கு போடுவோர் மறுபுறம்... இந்த இரு தரப்பினரும் இல்லப் பொறுப்புகளை மனமுவந்து பகிர்ந்துகொள்ள முன்வருவார்களா என்ற கேள்விக்குறி - இவற்றினிடையே பெண்ணின் தேர்வு செய்யும் உரிமை திணறித் திண்டாடுகிறது. சட்டமும் அரசியல் சாசனமும் வழங்கும் உரிமைகளுக்குச் சமுதாய நோக்கும் போக்கும் முட்டுக்கட்டை போட்டுக்கொண்டே இருக்கின்றன. இவற்றினிடையே சிரித்த முகத்துடன் இல்லம் பேணி, மலர்ந்த மனத்துடன் சமுதாயத்துக்குப் பங்களித்தபடி பெண்கள் வளைய வருகிறார்கள்.

நடுத்தர வர்க்கத்துப் பெண்களுக்கே இந்தக் கதியென்றால், அடிமட்டத்துச் சமுதாயத்தைச் சேர்ந்த பெண்களின் நிலை பற்றிச் சொல்லவே வேண்டாம். அவர்களுக்கான வேலைவாய்ப்புகள் பெருகப் பெருக, அந்த ஊதியத்தில் உட்கார்ந்து சாப்பிடும் ஆண்கள் அதிகமாகி வருகிறார்கள். நாகர்கோயில் பகுதி மீனவப் பெண்கள், சுய உதவிக் குழு அமைத்துச் சம்பாதிக்கும் பணத்தைப் பிடுங்கிக்கொண்டு போய் சாராயத்தில் கரைக்கும் ஆண்கள் மிக அதிகம்!



# சமத்துவப் போர்வையில்

இந்நிலையில் பெண்களை இரவுப் பணியில் அமர்த்தும் வண்ணம் தொழிற்சாலை சட்டத்தைத் திருத்தியிருக்கிறது மத்திய அரசு. அதனை அமல்படுத்துவதில் மாநில அரசுகளுக்குச் சில கூடுதல் உரிமைகள் இருக்கும்; ஆனால் சட்டப்படி இனி பெண்களை நைட் ஷிஃப்ட் (மாலை ஆறு மணி முதல் காலை பத்து மணிக்கு உட்பட்ட நேரம்) செய்ய கட்டாயப்படுத்தலாம். பாதுகாப்பான பணிச் சூழலை மட்டும் உத்தரவாதப்படுத்த வேண்டும்!

பெரும்பாலான தொழிற்சாலைகள் பாதுகாப்பையும் போக்குவரத்து வசதியையும் உத்தரவாதம் செய்வதாகவே வைத்துக் கொள்வோம்... அவற்றில் இரவெல்லாம்,

பணியாற்றிவிட்டு வீடு திரும்பும் பெண்களால் வீட்டுப் பொறுப்புகளை ஒதுக்கி வைத்துவிட்டுப் பகலில் தூங்க முடியுமா? பள்ளி செல்லும் பருவத்துக் குழந்தைகள், நான் கணக்கில் அம்மாவுடன் நேரம் செலவிடாமல், அன்பை உணராமல் வளர்வார்களே... அதை எந்தத் தொழிற்சாலை சட்டம் எவ்வாறு' ஈடு செய்யும்...?! அடித்தட்டுச் சமுதாய ஆண்கள் சாராயத்தைத் 'தியாகம்' செய்துவிட்டு, இரவு நேரங்களில் வீட்டையும் குழந்தைகளையும் பார்த்துக்கொள்வார்களா?

இரவுப் பணிக்குச் செல்ல மறுத்தால் பெண்கள் வேலையை இழக்கும் சூழல் ஏற்படுமா...? அவ்வாறாயின் இந்த ஏழைக் குடும்பங்களின் கதி என்ன ஆகும்?

இது நாள் வரை, தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெண்களுக்குச் சமுதாயம் மட்டும்தான் மறுத்து வந்தது. இப்போது அரசாங்கமும் (சட்டமும்) சேர்ந்து அந்த கைங்கர்யத்தைச் செய்யப் போகிறது. இரவுப் பணிக்குச் செல்லலாமா, வேண்டாமா என்ற முடிவை பெண்கள் எடுக்க முடியாது. அரசாங்கமோ தொழிற்சாலை நிர்வாகமோதான் எடுக்க முடியும்...!

இப்படியொரு சட்டத் திருத்தத்தை எதற்காகக் கொண்டுவர வேண்டும்...? பெண்களுக்குச் சம உரிமை அல்லது சம வாய்ப்பு வழங்கும் நோக்கத்தைக் காட்டிலும், தொழிற்சாலை நிர்வாகங்களுக்கு உதவ வேண்டும் என்ற நோக்கமே காரணமாக

# சுரண்டல்!

இருக்க முடியும். இரவுப் பணியில் ஆண்களை அமர்த்துவதற்குப் பதில் பெண்களை அமர்த்தினால், உற்பத்தி கணிசமாகக் கூடும்.

சமத்துவம் என்கிற போர்வையில் நடக்கிற சுரண்டல் அல்லவா இது! ●

**சர்ச்சை சர்வே - 4**

பெண்கள் நைட் ஷிப்டில் வேலைக்குச் செல்ல வலியுறுத்தும் மத்திய அரசின் சட்டத்திருத்தம் சரியா, தவறா? உங்கள் கருத்தை சுருக்கமாக 16.4.05க்குள் தபால் அட்டையில் மட்டும் எழுதி அனுப்புங்கள்.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623
2225 1324
தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



• சச்சின் படத்தில்...

# எங்கிட்ட மோதாதே!

சென்னை கோடம்பாக்கத்தில் இருக்கிறது ராகவேந்திரா திருமண மண்டபம். இதற்கு நேர்பின்புறம் இருப்பது, அகில இந்திய ரஜினிகாந்த் தலைமை ரசிகர் மன்றம். இங்கே ரஜினி காலடி வைத்து மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. மன்றத் தலைவர் சத்திய நாராயணா எப்போதாவது வந்து தலைகாட்டிவிட்டுப் போவதோடு சரி. ஆனால் மாவட்டத் தலைவர்கள், நிர்வாகிகள், ரசிகர்கள் என்று நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறது.

சென்னையில் மட்டும் ரஜினிகாந்துக்கு பன்னிரண்டாயிரம் மன்றங்களாம். இவற்றில் இது வரை ஐயாயிரம் மன்றங்களைச் சேர்ந்த ஐம்பதாயிரம் ரசிகர்களுக்கு, சந்திரமுகி படத்தின் டிக்கெட்டுகளை முன்கூட்டியே வழங்கிவிட்டார்கள். மன்றம் வாரியாக டிக்கெட்டுகளை விநியோகித்துக் கொண்டிருந்த சென்னை மாவட்டத் தலைவர் ஓம் சேகரை நெருங்கினோம்.

“தியேட்டரில் டிக்கெட் விலை எவ்வளவோ, அதற்கு மேல் ஒருபைசா கூட ரசிகரிடமிருந்து வாங்காமல், டிக்கெட் வாங்கிக் கொடுக்கிறோம். இது தலைவர் உத்தரவு” என்றவரிடம் “சந்திரமுகி படத்துக்கு ரசிகர்களிடம் எதிர்பார்ப்பு எப்படியிருக்கிறது?'' என்றோம்.

''பாபாவை விட இரண்டு மடங்கு எதிர்பார்ப்பு இருக்கிறது. மேக் அப், டிரஸ், தோற்றம், கேரக்டர் என்று எல்லாவற்றிலும் பல படி மேலே போய் பட்டையைக் கிளப்பியிருக்கிறார். எங்கள் தலைவருக்கு ஹியூமர் எப்படி வரு



மென்று நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. முத்து, அருணாசலம் போல, குடும்பத்தோடு பார்க்கக்கூடிய படமாக சந்திரமுகி வரப்போகுது. சந்திரமுகிக்கு முன்னால் எந்தப் படமும் நிற்காது'' என்று உற்சாகமாகப் பேசியவரிடம் "கமலின் மும்பை எக்ஸ்பிரஸ் வருகிறதே" என்றோம். "கமல் எங்கள் தலைவருக்கு நண்பர். அவரே மதிக்கிற கலைஞர். அவர் படம் வெளிவருவதை எந்த ரஜினி ரசிகனும் எதிர்க்க மாட்டான்" என்றவரிடம் விஜய்யின் சச்சின் படமும் ரேஸில் பங்குகொள்வதை நினைவுபடுத்த, கொஞ்சம் உஷ்ணமானார்.

''தயவுசெய்து எந்த நடிகருடனும் எங்கள் தலைவரை ஒப்பிடாதீர்கள். தலைவர் ஸ்டைலே ரொம்ப அமைதியா இருந்து சாதிக்கிறதுதான். ரொம்ப அமைதியா நடிச்சு முடிச்சிருக்கார். புயலுக்கு முன்னாலே அமைதி இருக்கும் பாருங்க... அப்படித்தான் தலைவர் இப்போ இருக்கார். புயல் வீச ஆரம்பிச்சதும் விளைவுகளைப் பார்ப்பீங்க!'' என்று கோபமாக ஆட்டோவில் ஏறிப் போய்விட்டார்.


• பிரபு


• பி.வாசு

# சந்திரமுகி சவால்





ஆனால் மாவட்டச் செயலாளர் என்.எஸ். ரமேஷ், பொருளாளர் ராம்தாஸ், துணைத் தலைவர் ரவி தலைமையில் அங்கே இரண்டிருந்த ரசிகர்கள் நம்மைச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள்.

சைதை பகுதியைச் சேர்ந்த எஸ்.குப்புசாமி, "புத்திக்கு ஒரு படையப்பா! பக்திக்கு ஒரு பாபா! சக்திக்கு ஒரு சந்திரமுகி! அந்நியனே அடக்கி வாசிக்கும்போது இந்த சச்சின் எங்க சந்திரமுகிக்கு முன்னாடி ரன் அவுட் ஆயிடுவார். பாம்பைக் கண்டா படையே நடுங்கும்! எங்க பாபாவைப் பார்த்தா அந்தப் பாம்பே நடுங்கும்... ஜுஜுபி!'' என்றதுதான் தாமதம், மயிலை பகுதி மன்ற உறுப்பினர் பா. சங்கர் ஓடி வந்து "என் தலைவர், வாரிசு நடிகர்களைப் போல இரவல் வெளிச்சமல்ல. இறை வெளிச்சம். இன்று ஒரு நடிகரின் தந்தை ஏடாகூடமாக பேட்டி கொடுக்கிறார். மறைமுகமாக தலைவரை விமர்சிக்கிறார். ஆனால் இதற்கெல்லாம்



• ஓம் சேகர்



• ரமேஷ்

அமைதியாக இருந்து, சந்திரமுகி படத்தின் மூலம் பதிலடி தரப் போகிறார்" என்று உணர்ச்சிவசப்பட்டவரை, மாவட்டச் செயலாளர் ரமேஷ் "இப்படியெல்லாம் பேசக்கூடாது" என்று கட்டுப்படுத்தினார்.

ஆனால் மதுரையிலிருந்து வந்திருந்த ரசிகர் ஜி.பாலு "எங்கிட்டே மோதாதேன்னு ராஜாதிராஜா படத்துலேயே தலைவர் சொன்னார். இப்பவும் அவர் சார்பா அதையே சொல்றேன். என் தலைவர் மலை. அவரோட மோத நினைச்சா மடுவாயிடுவீங்க. சரித்திரம் படைக்க வருகிறது சந்திரமுகி. நரித்தனம் கொண்டோருக்கு நெத்தியடி!" என்று சொல்லிவிட்டு "தங்கத் தலைவர் ரஜினி வாழ்க!" என்று உரத்த குரலில் கோஷத்தை எழுப்ப, கூடியிருந்த ரசிகர்கள் "உடல் மண்ணுக்கு உயிர் ரஜினிக்கு" என்று பதில் கோஷம் எழுப்பியதில் அந்தத் தெருவே கிடுகிடுத்தது. அதற்குமேல் அங்கிருந்தால் நல்லதல்ல என்ற உள்ளுணர்வின் வழிகாட்டுதலோடு நழுவி, சந்திரமுகி பட அலுவலகத்துக்கு வந்தோம்.

அங்கே சென்சார் காட்சிக்கான தீவிர ஏற்பாடுகளில் இருந்தார் படத்தின் இயக்குனர் பி. வாசு. "சந்திரமுகி படத்துக்கு சச்சின் படம் பலத்த போட்டி என்று இப்போதே பேச்சு அடிபடுகிறதே" என்று நேரே விஷயத்துக்கு வந்தோம்.

"சச்சின் உட்பட எல்லாப் படங்களும் ஓட வேண்டும். ரசிகர்கள் காசு கொடுத்து டிக்கெட் வாங்கினால் சினிமா உலகமும், அதைச் சார்ந்து வாழும் ஆயிரக்கணக்கான குடும்பங்களின், கலைஞர்களின் ஜீவனமும் நடக்கும். ரஜினி படத்தை வாங்குகிற விநியோகஸ்தர்கள், அதில் கிடைக்கிற லாபத்தை வைத்து பத்து சின்ன படங்களை வாங்கித் திரையிட முடியும். நானே அவரிடம் சொன்னேன்... 'நீங்கள் மூன்று வருடத்துக்கு ஒரு படம் நடிப்பது சரியல்ல. வருடத்துக்கு ஒரு படம் நடித்தால் கூட இந்தத் துறைக்கு உதவியாக இருக்கும் என்று.. அதை அவரும் ஏற்றுக் கொண்டார். சந்திரமுகி, மும்பை எக்ஸ்பிரஸ், சச்சின் மூன்றுமே மூன்றுவிதமான கதைக்களங்களுடன் வருகின்றன. அதனால் ஒரு படத்தின் வெற்றி' இன்னொரு படத்தை பாதிக்காது என்பது என்னுடைய கருத்து. ரசிகர்களுக்குள் ஒரு பொஸசிவ்நெஸ் இருக்கும். அதைத் தவறென்று சொல்ல முடியாது. இந்தப் போட்டியை ஆரோக்கியமாக எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர, சர்ச்சையாக்கக் கூடாது" என்றார்.

அந்நேரம் அங்கே வந்த பிரபுவிடம் "சந்திரமுகியின் தயாரிப்பாளர் என்ற முறையில் உங்கள் மனநிலை எப்படியிருக்கிறது?" என்றோம் "பெருமையாகவும், பூரிப்பாகவும் இருக்கிறது. இப்போதைக்கு வேறு கேள்விகள் வேண்டாம், ப்ளீஸ்" என்று முடித்துக் கொண்டார்.

**ச**ந்திரமுகியில் ஜோதிகாவின் கணவராக நடித்திருக்கிறார் பிரபு. ஜோதிகா ஒரு பரதநாட்டியக் கலைஞர். அவருக்குப் பேய் பிடித்தது போன்ற பிறழ்ந்த மனநிலை அடிக்கடி ஏற்பட, பேய் ஓட்ட வரும் சரவணாவாக ரஜினி! படத்தில் ரஜினி Vs ஜோதிகா என்று சொல்லுமளவுக்கு இருவரும் போட்டி போட்டு நடித்திருக்கிறார்களாம். வழக்கம்போல சந்திரமுகியிலும் தமது அரசியல் ஆசையை, பாடல்கள், பஞ்ச் டயலாக்குகள் மூலம் வெளிப்



• தாமஸ்



• மூர்த்தி



• அமலன்



• செல்வம்

# வானதி பதிப்பகம்



23, (ப.எண்:13), தீனதயாளு தெரு, தியாகராய நகர்,
சென்னை - 600 017, போன்: 2434 2810, 2431 0769

# பொன்விழா அழைப்பிதழ்

நாள்: 10.4.2005 ஞாயிறு நேரம்: மாலை 4.25 மணிக்கு

இடம்: **ஏவி.எம்.ராஜேஸ்வரி திருமண மண்டபம்,**
டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை, மயிலாப்பூர் - சென்னை - 4

*மதிப்பிற்குரிய பத்திரிகை ஆசிரியர்களும், எழுத்தாளர்களும், கவிஞர்களும், சிந்தனைச் செல்வர்களும், பதிப்பக - புத்தக வித்தகர்களும் உரையாற்றுகிறார்கள். நூல் வெளியீடுகளும் வானதி புத்தகக் கண்காட்சி திறப்பு விழாவும் எழுத்தாளர்கள், வாசகர்கள் சந்திப்பு நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.*

**வாசக அன்பர்களையும் பெருமக்களையும் அன்புடன் அழைக்கிறோம்.**

நிகழ்ச்சி நிரல் - 10.4.2005 மாலை - 4.25 : மங்கல இசை

**புத்தகக் கண்காட்சி விற்பனைத் துவக்கம்**

கண்காட்சியைத் துவக்கி வைப்பவர்: கல்கி திரு. கி. ராஜேந்திரன்
முதல் நூல் பெறுபவர்: திரு. மு. வேலாயுதம் (விஜயா பதிப்பகம், கோவை)
எழுத்தாளர்கள் - வாசகர் சந்திப்பு.

*பொன்விழாவை முன்னிட்டு புத்தகக் கண்காட்சியில் வானதி நூல்கள் 10% கழிவுடன் விழா அரங்கில் வாசகர்களுக்கு விற்பனைக்குக் கிடைக்கும்*

மாலை - 6:00

| | |
|---|---|
| இறைவணக்கம் | : திரு டி.கே.எஸ். கலைவாணன் |
| வரவேற்புரை | : வானதி திருநாவுக்கரசு |
| தலைமை | : நீதியரசர் உயர்திரு எம். கற்பகவிநாயகம் |
| நூல் வெளியீடு | : உலகப் பேரறிஞர்களின் பொன்மொழிகள் (தொகுப்பு நூல்) |
| முதல் பிரதி பெறுநர் | : வித்வான் திரு வே. லெட்சுமணன் |
| ஆங்கிலநுல் வெளியீடு | : **STEPS TO SUCCESS**<br>Autobiography of Vanathi Thirunavukkarasu<br>'வெற்றிப்படிகள்' ஆங்கில மொழியாக்கம்:<br>A transcreation by Dr.S.Gopalie Ph.d. |
| முதல் பிரதி பெறுநர் | : திரு ஏவி.எம். சரவணன் |
| மூத்த எழுத்தாளருக்குப் பாராட்டு | : எழுத்தாளர் திரு லா.ச.ராமாமிருதம் (லா.ச.ரா) |
| மூத்த பதிப்பாளருக்குப் பாராட்டு | : திரு எஸ்.எம். பழனியப்ப செட்டியார் (பழனியப்பா பிரதர்ஸ்) |
| வாழ்த்துரைகள் | : டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி,<br>: கவிஞர் திரு. வாலி<br>: திரு ப. லெட்சுமணன் (இலக்கியச் சிந்தனை)<br>: டாக்டர் கு. ஞானசம்பந்தன்,<br>: திருமதி சிவசங்கரி<br>: திருமதி சீதாரவி (ஆசிரியர் - கல்கி) |
| நன்றி உரை | : வானதி டி.ஆர். ராமநாதன் |

**பொன்விழாவுக்கு உங்களை அன்புடன் அழைக்கும்: வானதி ஏ.திருநாவுக்கரசு**



• சைதை பகுதி ரசிகர்களோடு மாவட்ட நிர்வாகிகள்...

படுத்தியிருக்கிறார் ரஜினி என்கிறார்கள்.

சென்னைக்கு வெளியே பிற மாவட்டங்களில் ரஜினி ரசிகர்கள் என்ன நினைக்கிறார்கள்? குமரி மாவட்ட ரஜினி மன்றத் தலைவர் எம்.அமலன், ''ரஜினியின் திரையுலக சகாப்தம் முடிந்துவிட்டது என்று பலர் பகல் கனவு காண்கிறார்கள். அவருடைய ஸ்டைலையே காப்பியடித்துக் கொண்டு அவருக்கு எதிராக காய்களை நகர்த்துகிறவர்களின் கணக்கை தகர்ப்பதற்கு, ஒவ்வொரு ரஜினி ரசிகனும் தயாராகிக் கொண்டிருக்கிறான். சந்திரமுகி வெள்ளிவிழா காண்பது உறுதி'' என்கிறார். நாகர்கோவிலைச் சேர்ந்த சினிமா ரசிகர் தாமஸ் சொல்லும் கருத்து வேறு மாதிரி இருக்கிறது. ''பாபாவின் தோல்விக்குப் பின் ரஜினி ரசிகர்கள் மத்தியில் ஒரு மகிழ்ச்சியின்மை நிலவுகிறது. அவரது படங்களின் நீண்ட கால இடைவெளி, அவர்கள் பொறுமையைச் சோதித்து விட்டது. இதனால் சந்திரமுகி படத்துக்கு அவரது ரசிகர்கள் மத்தியில் பெரிய எதிர்பார்ப்பு இல்லை'' என்கிறார்.

திருச்சியைச் சேர்ந்த சினிமா ரசிகர் மூர்த்தி, ''பாபா தோல்வியால, எங்கே தலைவர் சினிமாவை விட்டு ஒதுங்கிடுவாரோன்னு அவரது ரசிகர்கள் மனசொடிஞ்சு போயிருந்தாங்க. அவங்க மனசுல மழை பொழிஞ்ச மாதிரி சந்திரமுகி ஒரே மூச்சுல தயாராயிடுச்சு. இங்கே ரஜினி ரசிகர்கள் உற்சாகத்தை பார்க்கிறப்போ, இன்னமும் அவர் சிரஞ்சீவிதான்னு தோணுது'' என்கிறார். ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்த ரஜினி ரசிகர் செல்வம், ''பாஷா மாதிரி சந்திரமுகி இருக்கும் பாருங்க! எங்களுக்குத் தீபாவளி, பொங்கல்லாம் கிடையாதுங்க. சந்திரமுகி வெளிவர நாள்தான் பண்டிகை. தமிழ்ப் புத்தாண்டை கொண்டாடுறோமோ இல்லியோ... சந்திரமுகி பார்த்தே ஆகணுங்க'' என்கிறார்.

கட்டுரை, படங்கள் :
**ஜெய், திரு, தாகூர்**

# திக்...திக்...திக்!

**'உங்களால் மறக்க முடியாத திகில் அனுபவம் எது?' என்று வி.ஐ.பி.கள் சிலரிடம் கேட்டோம். முதலில் மனம் திறந்தவர் கவிஞர் வெண்ணிலா...**

''என்னுடைய இரண்டாவது பிரசவம் ரொம்பவே திகிலான பிரசவம். டாக்டரோ தாய், சேய் இருவரில் ஒருவரைத்தான் பிழைக்க வைக்க முடியும் என்று முதலில் கூறிவிட்டார். அந்த வார்த்தைகள் என்னை ரொம்பவும் பதறச் செய்துவிட்டன. ஒரு வழியாக சுகப்பிரசவம் மூலம் ஒரு குழந்தையை எடுத்த பிறகுதான் டாக்டர்களுக்குத் தெரிந்ததாம் இன்னொரு குழந்தை வயிற்றில் இருக்கிறதென்று. எனக்கு எப்படியிருக்கும்! சப்த நாடியும் அடங்கிவிட்டது போல இருந்தது. அந்த இரட்டைக் குழந்தை பிரசவம் தான் என்னைப் பொறுத்தவரை திகிலான விஷயம்.''



# வட்டமேஜை



கல்கி அவர்களின் மகன் ஆனந்தியின் வாழ்க்கையைச் சுற்றி எத்தனை ஆனந்தங்கள்! அவரது இறப்பு சோகத்தைக் கொடுத்தாலும், அலையின் ஓசை ஆனந்தியை எப்போதும் ஞாபகப்படுத்திக் கொண்டே இருக்கும்.

- ஜெயந்தி சிவக்குமார், ஏற்காடு.

புகழின் உச்சியில் நின்று, பின்பு அதள பாதாளத்தில் விழுந்து, மீண்டும் தன்னம்பிக்கையோடு முயற்சி செய்யும் ராமராஜன், திரை உலகில் மீண்டும் வலம் வரட்டும்!

- மதி.அசோக், ஈரோடு.

## புதுமை... அருமை!

புதுவை ரா.ரஜனி எழுதிய 'ஒரு எலியின் கதை' மிகவும் அருமையாக இருந்தது.

- மா.மோகனராசன், காமநாயக்கன்பாளையம்.

நடுப்பக்கத்தில் வெளியான சந்தியாவின் படம் கொள்ளை அழகு!

- வே.முருகேசன், சென்னை.

### வாரம் ஒரு வாசகர்!

கவிஞர் நா.முத்துக்குமாரின் கிராமத்து ஆட்டோகிராஃப் மிக ரம்யமாய் இருந்தது. என்றாலும் கட்டுரையின் முடிவில், கவிஞர் தமது நாவலை ஆங்கிலத்தில் எழுத விருப்பதாய் கூறியதும் வருத்தம் ஏற்பட்டது. தமிழை மறத்தல் தகுமா?



- ஆர். முரளி, சென்னை.

சிறுகதைகளுக்கு ஓவியங்களுக்கு பதில் புகைப் படங்களை வெளியிட்டது வித்தியாசமாய் ரசிக்கும்படி இருந்தது.

- எஸ்.எம்.பாலசுப்ரமணியன், போடிநாயக்கனூர்.

'சோம்நாத் சாட்டர்ஜியின் பிடிவாதம்' தலையங்கம் நச்! நாட்டின் நிலையை நன்கறிந்தவருக்கு உச்சநீதிமன்றத்தின் உரிமை புரியாதா என்ன? மக்களவைத் தலைவராகவே இருந்தவருக்கு திடீரென அரசியல் நினைப்பு வரவேதான் இந்தப் பிரச்னை!

- எம்.வி.குமார், மதுராந்தகம்.

இலக்கியத்தரம் வாய்ந்த பட்டிமன்றமொன்றில் பார்வையாளராகக் கலந்து கொண்ட நிறைவை ஏற்படுத்தியது, எழுத்தாளர்களான சோ. தர்மன், பி.கே.பி. இருவரின் காரசாரமான உரையாடல்.

- நாகை சந்திரா,பொழிச்சலூர்.

கலைஞர் மீது வைகோ மரியாதை, பாசம் கொள்ளட்டும், தவறில்லை. ஆனால் இந்தளவு குழைந்து போவது தனிக் கட்சி நடத்தும் அவருக்கு அழகல்ல. தொண்டர்கள் சோர்ந்து போகப் போவது உறுதி!

- ஆர்.பிரகாஷ், பொன்மலை.

வாரம் ஒரு வாசகரைத் தேர்வு செய்து வட்டமேஜையில் புகைப்படத்துடன் வெளியிடுவது, யாரும் செய்யாத புதுமையான, வரவேற்கத்தகுந்த காரியம்!

- பி.ராஜசேகரன், மதுரை.

'கல்கி ஜோக்கு'கள் என்றாலே ஒரு தனி முத்திரை இருக்கும்! அதை நிரூபிக்கும் வகையில் ஜோக்குகளுக்கு தலைப்புகள் கொடுத்து அமர்க்களப்படுத்தி விட்டீர்கள்! சபாஷ்!

- இ.முகம்மது உசேன், திருச்சி - 20.

# கோடை தாகத்துக்கு



## உங்கள் குழந்தைகளின் அறிவுத் தாகத்துக்கு




# கோகுலம்

சிறுவர் மாத இதழ்

47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை-6000 32




# பாகிஸ்தானுக்கு ஆடை;
# இந்தியாவுக்கு பருத்தி!

சொல்லிச் சொல்லி அடித்திருக்கிறது அமெரிக்கா! இந்தியப் பிரதமருடன் நிகழ்த்திய டெலிபோன் உரையாடலினூடே, அதிபர் புஷ், பாகிஸ்தானுக்குத் தாங்கள் எஃப் - 16 விமானங்கள் 'விற்க' இருப்பதை திடீரென்று அறிவித்திருக்கிறார்! இந்த அதிநவீன போர் விமானங்களை பாகிஸ்தான், அமெரிக்காவிடமிருந்து விலை கொடுத்து வாங்கப் போவதாக அறிவிக்கப்பட்டாலும் அது வெறும் கண் துடைப்பே! அத்துணை நவீன விமானங்களை ஏராள எண்ணிக்கையில் வாங்கி, தனது விமானப்படையை பலப்படுத்தும் அளவுக்கு பாகிஸ்தான் ஒரு பணக்கார நாடு அல்ல. இந்தியாவைக் காட்டிலும் மிகப் பின்தங்கிய பொருளாதாரம் பாகிஸ்தானுடையது. ஆஃப்கானிஸ்தானைத் தாக்குவதற்காகவும் அச்சுறுத்துவதற்காகவும் அமெரிக்கா பாகிஸ்தானுக்குள் விமானத் தளம் அமைத்து இயக்கிக் கொண்டிருக்கிறது. இந்த நன்றிக் கடனைத் தீர்க்கும் முகமாகத்தான் எஃப் - 16 விமானப் படையொன்றை பாகிஸ்தானுக்குத் தந்திருக்கிறது. அதற்கான முழு விலையையோ, சலுகை விலையையோ பாகிஸ்தான் கொடுக்கப் போகிறதா இல்லையா என்பது, அவ்விருநாட்டு அரசாங்கங்களுக்கு மட்டுமே வெளிச்சம்!

மனித உரிமைக்கும், ஜனநாயக மரபுகளைக் காப்பதற்கும் உலகளாவிய குரலெழுப்பி வரும் அமெரிக்கா, அந்தக் கோட்



**கல்கி**



2005 ஏப்ரல் 10
தாரண பங்குனி 28
மலர் : 63
இதழ் : 37

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




பாடுகளைத் துளியும் மதியாமல் ராணுவ ஆட்சி (அல்லது கண் துடைப்பு ஜனநாயகம்) நடத்தும் பாகிஸ்தானுக்கு - இந்தியாவுக்குள் பயங்கரவாதிகளை அனுப்பித் தாக்கும் பாகிஸ்தானுக்கு, இவ்வாறு சலுகையும் ஆதரவும் அளிக்கக் காரணம் என்ன? தனது போர் விமானத் தளத்தை பாக். எல்லைக்குள் நிறுவ அனுமதி பெற்றிருப்பது ஒரு காரணம்தான். அதனினும் முக்கியமான காரணம், ஆசிய துணைக் கண்டத்தில் அதிகாரச் சமநிலையைத் தகர்ப்பதுதான்!

நம் நாட்டுக்கு வந்து தேன்போல் பேசிவிட்டுச் சென்ற அமெரிக்க முதன்மைச் செயலர் காண்டலீஸா ரைஸ், அடுத்த நாளே பாகிஸ்தானுக்குப் போய், அதே மூச்சில் இந்தியாவைக் கடுமையாக விமர்சித்தார். பாகிஸ்தானை மகிழ்விக்க எஃப் -16 விமானங்களைத் தூக்கித் தந்துவிட்டு, "இந்தியாவுக்கு நாங்கள் விமானத் தயாரிப்பில் நவீன தொழில்நுட்பத்தை விற்கத் தயார்" என்று இப்போது வலை விரிக்கிறார்.

அதாவது, பாகிஸ்தானுக்கு ஆயத்த ஆடைகள்; இந்தியாவுக்குக் கொட்டைப் பருத்தி! அதைச் சுத்திகரித்து, நூலாக்கி, நெய்து, ஆடை தயாரிக்க ஆகக்கூடிய காலமும் செலவும் என்ன?

பாகிஸ்தானின் ஆயுதப் பெருக்கத்தைக் கண்டு அஞ்சி, இந்தியா வேறு வழியின்றி அமெரிக்கத் தொழில் நுட்பத்தை விலைக்கு வாங்கும் என்று அமெரிக்கா எதிர்பார்க்கிறது. இப்படியே பாக் - இந்தியாவுக்கிடையேயான ஆயுதக் குவிப்புப் போட்டி பெருகப் பெருக, தான் தயாரிக்கும் ஆயுதங்களையும் தொழில் நுட்பத்தையும் மேலும் மேலும் இந் நாடுகளிடம் விற்பது... இந்த விற்பனை மூலம், சரிந்து கிடக்கும் தனது பொருளாதாரத்தைத் தூக்கி நிறுத்துவது என்பது அமெரிக்காவின் உள்நோக்கம்.

அமெரிக்க முடிவு குறித்து வருத்தம் தெரிவித்த பிரதமர் மன்மோகன் சிங், அதோடு நிறுத்திவிடக் கூடாது. அமெரிக்காவை அடக்குவதற்கான மாற்று வியூகமொன்றை அவர் சிந்தித்து, திட்டமிட்டுச் செயல்படுத்த வேண்டும்.

முதல் காரியமாக, பாகிஸ்தானுடன் நல்லுறவு ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும்.




வெறும் கிரிக்கெட் - கலாசார ஒப்பந்தமல்ல, அமைதி ஒப்பந்தம்; அணு ஆயுதப் பிரயோகத் தடை ஒப்பந்தம் என்று உண்மையிலேயே நம்பிக்கையூட்டும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

இதைச் செய்த கையோடு, ரஷ்யாவுடன் ஒரு பாதுகாப்பு ஒப்பந்தமும் செய்துகொள்ள வேண்டும். அமெரிக்கத் தூண்டுதலாலோ, சுயமாகவோ பாகிஸ்தான் இந்தியா மீது படையெடுத்தால், ரஷ்யா நமக்கு உடனடியாக உதவும் வகையில் அவ்வொப்பந்தம் அமைய வேண்டும். இது மட்டுமே அமெரிக்காவையும் பாகிஸ்தானையும் கட்டுப்பாட்டில் வைக்க உதவும். இந்தியாவின் ராணுவச் செலவையும் கணிசமாகக் குறைக்கும்.

ஆனால், பிரதமர் இதற்கு நேர் மாறாகச் செயல்பட்டிருக்கிறார். 3820 கோடி ரூபாய் மதிப்புள்ள ராணுவத் தளவாடங்களை உடனே வாங்க உத்தரவு பிறப்பித்துள்ளார். ஃப்ரெஞ்சு, பிரிட்டிஷ் தயாரிப்பான போர் விமானங்கள், நம் விமானப் படையை பலப்படுத்தப் போகின்றன. அதே நேரத்தில் நமது பொருளாதாரத்தைச் சோதனைக்குள்ளாக்கப் போகின்றன.

இதெல்லாம் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு ஆகாது. ராணுவச் செலவுதான் அதிகரிக்கும். பாகிஸ்தான் சிறிய நாடு. அதற்கேற்ப பாதுகாப்புச் செலவு குறையும். நமது நாட்டு விஸ்தீரணத்தைக் காக்க மேலும் பல மடங்கு செலவாகும். நமது பொருளாதாரம், அரசாங்கம் சித்திரித்து வருவதுபோல் உயிரோட்டமாக இல்லை. தொழிற்பெருக்கமும் வேலைவாய்ப்புப் பெருக்கமும் தேங்கிக் கிடக்கின்றன. இந்நிலையில் ராணுவச் செலவு அதிகரிப்பது, நாட்டைப் பொருளாதார ரீதியில் பலவீனப்படுத்தும்.

இந்தோ - பாக் நல்லுறவுக்கு இணையான தீர்வு வேறு இல்லை. இதனை எதிர்க்கட்சியான பா.ஜ.க ஆதரிக்காது; அரசியலாக்கி ஆதாயம் தேடிக்கொள்ளும் என்கிற அச்சுறுத்தலையும் மீறி, இந்தியப் பிரதமர் இயங்க வேண்டும். நல்லுறவுகளை வளர்த்துக்கொண்டு, சாணக்கியத்தால் அதிகாரச் சமநிலையையும், அமைதியையும் காக்க வேண்டும். ○

பெய்து கொண்டிருந்த ஐப்பசி அடைமழையில் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது அந்த பைக். கரித்தூளைக் கொட்டிய தினுசில் எல்லாத் திசைகளிலும் இருட்டு கெட்டியாய் பரவியிருக்க, பைக்கின் ஹெட்லைட் அந்த இருட்டை ஓரளவுக்கு சாப்பிட்டு வழிகாட்டிக் கொண்டிருந்தது.

பைக்கை ஓட்டிக் கொண்டிருந்த சுபாஷும், பின்னால் உட்கார்ந்திருந்த திவ்யாவும் தெப்பலாய் நனைந்து போயிருந்தார்கள். புதுமணத் தம்பதி.

ஆனைக்கட்டி ஃபாரஸ்ட்டுக்குள் இருந்த குலதெய்வக் கோயிலான குடல் வாங்கி மாரியம்மன் கோயிலுக்குப் போய்விட்டுத் திரும்பும்போது வானம் பொத்துக் கொண்டுவிட்டது.

முகத்தில் மோதிய மழைநீரை இரண்டு கைகளாலும் வழித்துவிட்டுக் கொண்டே திவ்யா கேட்டாள்.

"மணி என்னங்க...?"

"சரியா பத்தரை...."

"வர்ற வழியில் நாம அழிச்சான் பாறை ஸ்பாட்டுக்குப் போயிருக்கக்கூடாது. அங்கே போய் ரெண்டு மணி நேரம் வேஸ்ட். நான் சொன்னேன். நீங்க கேட்கலை. இப்பப் பாருங்க. வாயை மூடாம வானம் ஊத்துது. இந்த வனாந்திரப் பகுதியில் வசமா மாட்டிக்கிட்டோம்... ரோடு வேற குண்டும் குழியுமா இருக்கு... பைக் பஞ்சர் ஆயிட்டா என்ன பண்றது?" - திவ்யா சொல்லிக் கொண்டிருக்கும் போதே, அதுவரைக்கும் பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்த பைக்கின் ஹெட்லைட் சட்டென்று கண்ணை மூடியது. அக்கம் பக்கம் காத்திருந்த இருள் வேகமாய் வந்து அவர்களை மொய்த்துக் கொண்டது.

"அய்யய்யோ... என்னங்க இது...?"

"டென்ஷன் ஆகாதே திவ்யா... என்னான்னு பார்க்கிறேன்..." சுபாஷ் கொட்டும் மழையில் பைக்கை நிறுத்தி ஸ்டாண்ட் போட்டான். இருட்டில் ஹெட்லைட்டோடு சில நிமிஷங்கள் போராடிவிட்டு நிமிர்ந்தான்.

"திவ்யா...! இருட்டுல ஒண்ணும் தெரியலை. மெயின் ரோட்டுக்கு இன்னும் ரெண்டு கிலோ மீட்டர் தூரம்தான் இருக்கு. பைக்கை அப்படியே தள்ளிட்டுப் போயிடலாமா?"



ராஜேஷ்குமார்

"என்னது... தள்ளிட்டுப் போறதா...? ரெண்டடி தூரத்துல என்ன இருக்குன்னு தெரியாத இந்த இருட்டுல, பைக்கைத் தள்ளிட்டு எப்படிங்க நடக்க முடியும்...? மழை இல்லேன்னாலும் பரவாயில்லை. அது வேற இந்தப் போடு போடுதே. ஹெட் லைட்டை நல்லாத் தட்டிப் பாருங்க... வயர் ஏதாவது லூஸ் கான்டாக்ட்ல இருந்தாலும் இருக்கும்."



"இல்ல திவ்யா. அதையும் பார்த்துட்டேன்!" சுபாஷ் சொல்லிக் கொண்டே சுற்றும் முற்றும் பார்த்த விநாடி - மின்னல்



# மூங்கில் காட்டு பூக்களா

ஒன்று தன்னுடைய கையை மூத்தை அவசர அவசர மாய் கறுப்பு வானத்தில் வெளிச்சமாய் போட்டுக்காட்ட, அந்த மைக்ரோ விநாடி ஒளியில் அந்த மூங்கில் காட்டுப் பகுதியும் உள்ளே தள்ளியிருந்த பாழடைந்த கட்டடமும் பார்வைக்கு கிடைத்தது.

"திவ்யா..!"

"ம்..."

"எனக்கு இடதுகைப் பக்கமா நூறு அடி தூரத்துல ஒரு வீடு இருக்கிறதை மின்னல் வெளிச்சத்துல பார்த்தேன்..."

"வீடா...?"

"ம்...."

''இந்த காட்டுக்குள்ளே வீடா...?''

''ஆமா திவ்யா. பழைய கட்டடம். அங்கே ஃபாரஸ்ட் டிபார்ட்மெண்ட்டைச் சேர்ந்த யாராவது தங்கியிருக்கலாம். வா... போய்ப் பார்க்கலாம்..''

"வழி தெரியலையே..?"

"என் கையைப் பிடிச்சுக்கிட்டே வா.." சுபாஷ் திவ்யாவின் கையைப் பற்றிக்கொண்டு மெல்ல நடந்தான்.

பெய்கிற மழையில் பத்து நிமிஷ நிதான நடைக்குப் பின் அந்தப் பாழடைந்த கட்டடம் பார்வைக்குப் புலப்பட்டது. கட்டடத்துக்குள்ளே ஓர் அழுக்கான மஞ்சள் வெளிச்சம் பரவியிருந்தது.

"திவ்யா, உள்ளே யாரோ இருக்காங்க."

"என்னங்க, எனக்கு பயமாயிருக்கு."

"நான் இருக்கும்போது என்ன பயம்..?"

சுபாஷ் சொல்லிக் கொண்டே சிதிலமான கட்டடப் படிக்கட்டுகளில் ஏறினான். கறுப்புக் காகிதங்களை தாறுமாறாய் மடித்த தினுசில் நான்கைந்து வௌவால்கள் கட்டட சீலிங் கட்டுகளிலிருந்து தலைகீழாய்த் தொங்கிக் கொண்டிருந்தன. நாசிக்குப் பிடிக்காத ஒரு வீச்சம் மூச்சுக் காற்றில் கலந்து அடி வயிறு வரைக்கும் அவஸ்தையாய்ப் பாய்ந்து புரட்டியது.

''என்னங்க! வெளியே பெய்யற மழையே பெட்டர். இங்கே நிக்க முடியலை...''

''உள்ளே யார் இருக்காங்கன்னு

பார்த்துட்டுப் போயிடலாமே..?" சுபாஷ் சொல்லிக் கொண்டே கதவை நோக்கி நடக்க முயன்ற விநாடி -

பக்கவாட்டிலிருந்து அந்தக் குரல் கேட்டது. உப்புக் காகிதத்தை உரசின தினுசில் தொனி.

"வாங்க..."

இருவரும் திடுக்கிட்டுப் போய் திரும் பிப் பார்த்தார்கள்.

ஒரு கிழவி நின்றிருந்தாள்.

எண்பது வயது இருக்கலாம். பரட் டைத் தலை. சிவப்புச் சேலை. மூக்கில் பெரிதாய் ஒரு வெள்ளி மூக்குத்தி. கழுத் தில் கனமாய் பாசிமணி மாலை. "மழைக்கு ஒதுங்க வந்தீங்களா?" என்று கேட்டுச் சிரித்தபோது, பல்வரிசையில் பாதிப் பற் கள் காணாமல் போயிருந்தது தெரிந்தது.

திவ்யா சுபாஷின் தோளோடு ஒண்டிக் கொண்டு அந்தக் கிழவியை பயத்துடன் பார்த்தாள். கிழவி பக்கத்தில் வந்தாள்.

"ரெண்டு பேரும் தெப்பலா நனைஞ் சுட்டீங்க போலிருக்கு. உள்ளே வாங்க. வந்து மொதல்ல தலையைத் துவட்டுங்க."

கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனாள் கிழவி. ஒரு காலத்தில் பெரிய ஹாலாய், தூண்களோடு இருந்த இடம் இப்போது தட்டு முட்டுச் சாமான்களோடு அடைசலாய்த் தெரிந்தது. ஓர் இரும்புக் கொக்கியில் தொங்கியபடி சிம்னி விளக் கொன்று மண்ணெண்ணெய் வாசனை யோடு எரிந்துகொண்டிருந்தது. வெள வால் ஒன்று வீட்டுக்குள்ளேயே பறந்தது.

"ரெண்டு பேரும் உள்ளே வாங்க. கழுத் துல இருக்கிற தாலியைப் பார்த்தா புதுசா கல்யாணமானவங்க மாதிரி தெரியுது. எப்படி இங்கே வந்து மழையில மாட்டிக் கிட்டீங்க?"

சுபாஷ் சொன்னான்.

"குலதெய்வக் கோயிலுக்கு வந்தோம்."

"சின்னஞ்சிறுசுங்க இப்படி வரலாமா? போய் மொதல்ல தலையைத் துவட்டுங்க." சொன்ன கிழவி, ஹாலின் குறுக்கே ஓடிய கயிற்றில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு ஈரிழைத் துண்டை எடுத்துக் கொடுத்தாள்.

"பரவாயில்ல பாட்டி. இதெல்லாம் வேண்டாம். நாங்க மழை நிக்கிறவரை இருந்துட்டு கிளம்பறோம்."

"தாராளமா இருங்க தம்பி. ராத்திரி இங்கேயே வேணும்னாலும் படுத்துத் தூங்கிட்டுப் போங்க. மழையில உடம்பு நனையலாம். ஆனா தலை நனையக் கூடாது. ம்... இந்தாங்க... துண்டு..."

சுபாஷ் துண்டை வாங்கிக் கொண்டே கேட்டான். "பாட்டி! இந்த வீட்ல நீங்க மட்டும்தான் இருக்கீங்களா..?"

சுபாஷ் கேட்ட அந்தக் கேள்விக்கு கிழவி தேவையில்லாமல் சிரித்தாள். "ம்.. நான் மட்டுந்தான் இருக்கேன்! ஒரு காலத் துல இது ஜமீன் பங்களா. மிருகங்களை வேட்டையாட வரும்போது அவங்க தங் கறதுக்காக கட்டிக்கிட்ட பங்களா. நான் அப்ப சமையல்காரியா இருந்தேன். அவங்க காலமெல்லாம் முடிஞ்சு போச்சு. இப்ப நான் மட்டும் இருக்கேன்."

## பேய் பயம்!

அப்போ எனக்கு பதினாலு வயசு இருக்கும். சாயந்தரம் ஸ்கூல் விட்டவுடன் பசங்க எல்லாரும் ஒண்ணா சேர்ந்து புதுக்கோட்டை மெயின் ரோட்ல ஹாயா பேசிக்கிட்டே நடந்து வர்றதுண்டு... அந்த ரோடு ரொம்ப கும்மிருட் டான ரோடு. ஒருநாள் அப்படி நாங்க நடந்து வர்றப்போ கொஞ்ச தூரத்துல பனை மரம் உயரத்துக்கு தூண் மாதிரி ஒரு புகை மண்டலம் தெரிஞ்சது. கிட்ட போனா நகருது. ஆஹா.. சத்தியமா பேய்தான்னு முடிவு பண்

சுபாஷ், திவ்யா இருவரும் தலை களைத் துவட்டிக் கொண்டே சுற்றும் முற்றும் பார்க்க, கிழவி சொன்னாள்.

"பக்கத்து ரூம்ல ஒரு கயித்துக்கட்டில் இருக்கு. தூசு அழுக்கு இல்லாம சுத்தமாய் இருக்கும். போய் உட்காருங்க. ஏதாவது சாப்பிடறீங்களா...?"

"அதெல்லாம் வேண்டாம் பாட்டி. நாங்க கொஞ்ச நேரம் இருந்துட்டு கிளம் பறோம்."

"ஏதாவது சாப்பிடுங்க. பழமாவது கொண்டு வர்றேன்." சொன்ன கிழவி, மறு படியும் தேவையில்லாமல் சிரித்துக் கொண்டே ஹாலைக் கடந்து போய்

கோடியில் இருந்த ஓர் இருட்டான அறைக்குள் நுழைந்தாள்.

ஹாலில் ஒரு நிமிஷத்திற்கு நிசப்தம்.

திவ்யா சுபாஷின் தோள்பட்டையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். "என்னங்க! எனக்கு பயமாயிருக்கு."

"எதுக்குப் பயம்."

"அந்தக் கிழவி சரியில்லை. இந்த இடம் சரியில்லை."

"எதை வெச்சு சொல்றே?"

"என் மனசுல படுது, சொல்றேன். வாங்க போயிடல ம்."

"என்ன திவ்யா நீ.." என்று கேட்டுக் கொண்டே தலையைத் திருப்பின சுபாஷின் பார்வை பக்கத்துத் தூணில் தொங்கிக் கொண்டிருந்த போட்டோவின் மேல் திகிலோடு நிலைத்தது.

போட்டோவில் வாடின மாலையோடு கிழவி சிரித்தாள். அதே பரட்டைத் தலை. சிவப்புச் சேலை. மூக்கில் பெரிதாய் வெள்ளி மூக்குத்தி. கழுத்தில் கனமாய் பாசிமணி மாலை. போட்டோவுக்கு கீழே தோற்றம் 6.2.1904. மறைவு 4.11.1988 என்ற தேதிகள்.

போட்டோவைப் பார்த்த சுபாஷ், திவ்யாவின் முதுகுத் தண்டுவடங்களில் ஐஸ் வாட்டர் ஓடுவது போன்ற உணர்ச்சி.



ணிட்டோம். எங்க எல்லாருக்கும் பயத்துல வியர்வை கொட்டுது. மனசை தைரியப்படுத்திக்கிட்டு... புகை மண்டலத்துக்குள்ள புகுந்துடலாம்னு முடிவு பண்ணி புகுந்தா... முகத்துல, உடம்புல, எல்லாம் ஏகப்பட்ட கொசுக்கள் ஒட்டிக்கிச்சு. என்னன்னு பார்த்தா எங்க மேல ஒட்டினது 'மொலுங்கு'ன்னு சொல்வோமே... அந்த வயல் கொசு. ஆயிரக்கணக்குல ஒண்ணா சேர்ந்து பேய் மாதிரி எங்களை பயமுறுத்தியிருக்கு.

**- ஓவியர் மாருதி**

முகங்கள் உடனே வியர்த்து சொத சொதத்தன.

எக்கச்சக்கமாய் எகிறுகிற இதயத் துடிப்போடு சுபாஷ் பார்வையைத் திருப்பி கிழவி சென்ற திசையைப் பார்த்தான்.

இருட்டு. நிசப்தம்.

"வா... வாங்க... போயிடலாம்..."

வேக வேகமாய் வாசல் கதவை நோக்கி இருவரும் நடக்க, சுபாஷின் பார்வை எதேச்சையாய் இடது பக்கத் தூணுக்குப் போயிற்று.

கிழவி தூண் மறைவில் நின்றபடி அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

சுபாஷ் வீறிட்டான்.

"திவ்யா! சீக்கிரமா ஓடி வா..."

**"ஸா**ர்! இவங்க ரெண்டு பேரும் காட்டுக்குள்ளிருந்து ஓடி வந்துக்கிட்டு இருந்தாங்க. மடக்கி விசாரிச்சப்ப கிழவி, பேய்ன்னு ஏதோ கதை சொல்றாங்க. எதுவுமே நம்பற மாதிரியில்லை ஸார். அதான் ஸ்டேஷனுக்குக் கூட்டிட்டு வந்தேன்."

கான்ஸ்டபிள் சொன்னதைக் கேட்டு காட்டுப் பகுதியின் எல்லையில் இருந்த ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர், தனக்கு எதிரே நின்றிருந்த சுபாஷையும் திவ்யாவையும் ஏறிட்டார்.

"உண்மையைச் சொல்லுங்க."

சுபாஷ் பதற்றமாய்ப் பேசினான்.

"ஸார்... நாங்க உண்மையைத்தான் சொல்லிக்கிட்டிருக்கோம். குல தெய்வக் கோயிலுக்கு போய்ட்டு வரும் போது மழையில் மாட்டிக்கிட்டோம். பைக்ல ஹெட்லைட் எரியலை. பைக்கை அங்கேயே நிறுத்திட்டு மூங்கில் காட்டில இருந்த அந்த பாழடைந்த பங்களாவில் ஒதுங்கினோம். அந்த பங்களாவில் தான் கிழவி இருந்தா ஸார். செத்துப் போன கிழவி ஸார். அவ போட்டோவுக்கு மாலையெல்லாம் போட்டு..."

கான்ஸ்டபிள் சலித்துக் கொண்டார். "அரைமணி நேரமாய் இதைத்தான் ஸார் சொல்றான்."

இன்ஸ்பெக்டர் எழுந்தார்.

"ஜீப்பை ரெடி பண்ணுய்யா... போய்ப் பார்த்துடலாம். இவங்களைப் பார்த்தா பொய் சொல்றவங்க மாதிரி தெரியலை..."

அடுத்த ஐந்து நிமிடத்தில் ஜீப்



## வீரப்பன் வந்தான்!

ஒரு தடவை சீரியல் ஷூட் பண்றதுக்காக சத்தியமங்கலம் காட்டுப் பகுதிக்கு யூனிட்டோட போயிருந்தோம். குறிப்பிட்ட தூரத்துக்கு மேல காட்டுக்குள்ள போயிட்டோம். திடீர்னு நாலஞ்சு பேரு நேரா எங்களை நோக்கி வந்து, 'இதுக்கு மேல காட்டுக்குள்ள போகக்கூடாது... உடனே கிளம்புங்க'ன்னு விரட்டாத குறையா சொன்னாங்க. எங்களுக்குத் திரும்பி வர இஷ்டமில்லைன்னாலும் அவங்க மிரட்டற தொனியில பேசினதால திரும்பி வந்துட்டோம்... பின்னாடி அந்த ஏரியா ஆளுங்க சொன்ன பிறகுதான் தெரிஞ்சுது, எங்களை மிரட்டினது சந்தனக் கடத்தல் வீரப்பன்தான்னு. வீரப்பன் பெயரைக் கேட்டதுதான் தாமதம், எங்க யூனிட்டே அலறிடுச்சு... அன்னிக்கு ராத்திரி முழுக்க யாருக்கும் தூக்கம் வரல... அவன் எங்களைத் தூக்கியிருந்தா, இல்ல கடத்தியிருந்தா என்ன ஆகியிருக்கும்னு நினைச்சி நினைச்சி பயந்துட்டே இருந்தோம். அந்த இரவு எங்களுக்கு ஒரு திகில் இரவு.

**- குட்டி பத்மினி**

தயாராகி கிளம்பியது. பைக் நின்றிருந்த இடம் வர,

"இந்த இடம்தான் ஸார்..."

ஜீப் நின்றது. இன்ஸ்பெக்டரும் இரண்டு கான்ஸ்டபிள்களும் பெரிய டார்ச் லைட்களோடு இறங்க, சுபாஷும் திவ்யாவும் வழி காட்டிக் கொண்டு போனார்கள்.

பாழடைந்த பங்களா வந்தது.

"இதுதான் ஸார்..." சுபாஷ் சொல்ல, இன்ஸ்பெக்டர் படிகளில் ஏறி சாத்தியிருந்த கதவைத் தள்ளினார்.

கதவு கிரீச்சென்ற பெரிய சத்தத்துடன் திறந்து கொண்டது. உள்ளே நுழைந்தார்கள். சிம்னி விளக்கு எரிந்து கொண்டிருக்க -

இன்ஸ்பெக்டர் குரல் கொடுத்தார்.

"யாரு உள்ளே..."

சில விநாடிகள் நிசப்தத்திற்குப் பிறகு -

மெதுவாய் பக்கத்து அறையிலிருந்து அந்தக் கிழவி வெளிப்பட்டாள். நடுங்கும் குரலில் கேட்டாள்.

"யாரு...?"

சுபாஷிடம் இன்ஸ்பெக்டர் கேட்டார்.

"இந்தக் கிழவியா?"

"ஆமா... ஸார்"

"போட்டோ பார்த்ததாய் சொன்னீங்களே...?"

சுபாஷ் பக்கத்துத் தூணில் தொங்கிக் கொண்டிருந்த போட்டோவைக் காட்டினான். இன்ஸ்பெக்டர் பார்த்தார்.

அச்சு அசலாய் அப்படியே கிழவியின் போட்டோ. வாடின மாலையொன்று போட்டோவை அலங்கரிக்க, கீழே பிறந்த - இறந்த தேதிகள்.

இன்ஸ்பெக்டர் கிழவியிடம் திரும்பினார். "ஏய்... என்ன இது... உன்னோட போட்டோவை நீயே மாட்டி... மாலை போட்டு..."

அவர் கோபமாய்ப் பேசப் பேச, கிழவி குறுக்கிட்டாள்.

"அ...அய்யா...! அந்தப் போட்டோவில் இருக்கிறது நான் இல்லீங்க..."

"நீ இல்லையா... பின்னே யாரு...?"

"என் கூடப் பொறந்தவளுங்க. நானும் இவளும் எங்க ஆத்தாளுக்கு ரெட்டைக் குழந்தைகளாய் பொறந்தோம். என் மேல ரொம்பவும் பாசமா இருப்பாளுங்க. அதான் போட்டோவை மாட்டி வெச்சேன். இந்தத் தம்பியும் பொண்ணும் போட்டோவைப் பார்த்துட்டு இருந்தப்ப விவரத்தைச் சொல்லலாம்னு வந்தேன். அவங்க பயந்து போய் பெய்யற மழையில இறங்கி ஓடிட்டாங்க.. ஏன் தம்பி, அப்படியா ஓடறது...?" ●

● வி. துளசி,
சென்னை - 61

? திரைப்படத்துக்குத் தமிழில் பெயர் வைத்தால் மட்டும் போதுமா? அதில் வரும் பாடல், நடனம், உரையாடல் தமிழ்க் கொலை போன்றவை இருக்க, தமிழ் எங்கிருந்து செம்மொழியாகும்?

! பெயர் மட்டும் தமிழில் என்று போராடுவது வெறும் அரசியலே... படங்களில் தமிழ் மட்டுமல்ல... தமிழக பண்பாடும், கலை - கலாசாரமும் படுகொலை செய்யப்படுவதை எதிர்க்க எந்த அரசியல்வாதியும் முன் வர மாட்டார். அது ஹீரோ, ஹீரோயினுடன் மோதுகிற சமாசாரமாகி விடுமே!



● நேசமா நேசமா!

● ஜோ. ஜெயக்குமார்,
நாட்டரசன்கோட்டை.

? பெங்களூர் டெஸ்ட்டில் தராசுக்குப் பிடித்தது எது...?

! இந்தியாவுக்கு 383 இலக்கு நிர்ணயித்து டிக்ளேர் செய்த இன்ஸமாமின் வெற்றிக் கணிப்பு, வெற்றிக் கனிப் பாக முடிந்தது. இதனால் ஷேவாக்கின் டபுள் செஞ்சுரி பின்னணிக்குத் தள்ளப் பட்டாலும், பாராட்டுக்கும் பெருமைக் கும் உரியதே. இந்திய வீரர்கள் இரண்டாவது இன்னிங்ஸில் லொட்டு வைக்காமல், ஆடித் தோற்றதில் இன்ஸமாமுக்கு அவரது நூறாவது டெஸ்ட் பெரிய வெற்றியாக அமைந்தது. வாழ்த்துக்கள்.

● பெருமைக்குரிய பாராட்டு!

● விமலா வரதராஜன்,
ஹைதராபாத்.

? பிரபல ஜான்சன் அண்ட் ஜான்சன் தயாரிப்புகள் (குழந்தைகளுக்கானவை) குறித்து சர்ச்சை எழுந்துள்ளதே...? எதை நம்புவது...?

! அந்நிறுவனம் உற்பத்தி செய்யும் குழந்தைகளுக் கான சோப்பு, எண்ணெய் போன்றவற்றில், ஒவ்வாமை விளைவிக்கக் கூடிய ரசாயனப் பொருள்கள் இருப்



● கனிப்பான கணிப்பு!

# இலவச பாடப் புத்தகத் திட்டம் எப்படி...?



நீங்கள் கேட்டவை

பதாகக் கண்டுபிடித்ததால், எதிர்ப்பு தோன்றியுள்ளது. இதுவாவது பரவா யில்லை; குழந்தைகளுக்கான டயபெர் களை விற்பதில் நடந்துள்ள ஊழல் மகா கோரம். பிரபல நிறுவன தயாரிப்புகள், உபயோகத்துக்குப் பிறகு தூக்கியெறியப் பட, அவற்றைக் 'காய வைத்து' மீண்டும் 'பேக்' செய்து விற்கும் பித்தலாட்டம் அம் பலமாகியிருக்கிறது! பாவம் பாப்பாக்கள்!

● அ.ப. ஜெயபால், பரங்கிப்பேட்டை.

? விஜயகாந்த் தமிழக காங்கிரஸில் சேர்ந் தால் ஏதாவது பலன் கிடைக்குமா...?

! பலன் கிட்டுமா, கிட்டாதா தெரியாது... இன்னொரு கோஷ்டி உருவாவது சர்வ நிச்சயம்.

● பி.எல். பரமசிவம், மதுரை - 9.

? சமீபத்தில் எந்த அரசியல்வாதியின் பேச்சு உங்களைச் சிந்திக்க வைத்தது...?

! 'கட்சியை வளர்க்க, கையையும் வெட் டிக் கொள்ளத் தயார்" என்ற வைகோ வின் பேச்சுதான்! தலைவரே இப்படி உணர்ச்சிவசப்பட்டுப் பேசினால், சாதா தொண்டர்களின் நிலை என்னவென்று யோசிக்க வைத்தது.

● எச். ஆண்டனி தமிழரசன், மும்பை - 17.

? யானைகளுக்கு ஆண்டுதோறும் புத்துணர்வு முகாம் நடத்துவது போல் எம்.எல்.ஏக்களுக்கும் புத்தாக்கப் பயிற்சி தர வேண்டும் என்கிறாரே காங். உறுப்பினர் எஸ்.ஜி. விநாயகமூர்த்தி?

! ரொம்ப நல்ல யோசனை. அந்தப் பயிற்சி முகாமில் சட்டசபை விதிமுறைகள், மர புகள் பற்றி எடுத்துச் சொல்லி, மக்கள் பிரதிநிதிகள் எப்படிச் செயல்பட வேண் டும் என்று தக்கவர்களைக் கொண்டு விளக்கலாம். விதி விலக்கின்றி அத்தனை உறுப்பினர்களும் பங்கேற்பது அவசியம். ஆனால் இப்படியெல்லாம் நல்ல காரியம் நடந்து விடுமா என்ன!

● எல். வெங்கட்ராமன், கும்பகோணம்.

? பத்தாம் வகுப்பு வரை படிப்பவர் களுக்குப் புத்தகங்கள் இலவசமாகத் தரப்படுவது குறித்து...?

! என்னைக் கேட்டால்... (என்னைக் கேட்டு யாரும் செயல்படப் போவ தில்லை என்பது வேறு விஷயம்!) பள்ளி ஆசிரியர்களுக்கு மட்டும் இலவச பாட நூல்கள் கொடுத்தால் போதும்! அவர்கள் சிறப்பாகப் பாடம் நடத்தினால், மாண வர்களுக்குப் பாட நூல்களே தேவைப் படாது! இப்போது பாருங்கள், இல வசங்களிலேயே குழந்தைகளின் வாழ்க்கை தொடங் குகிறது. மதிய உணவு, சீருடை, பள்ளிக் கட்டணம், பஸ் பாஸ், பாடப் புத்தகம், காலணி... நல்லதா!?



● உணர்ச்சியும் வளர்ச்சியும்!

● குட்டி பிரசன்னா, கரூர் ★

? இந்தியாவுக்கு எதிராக முரளிதரன் பந்து வீசும்போது அவருடைய மனைவி என்ன வேண்டிக் கொள்வார்...? - இந் தியா ஜெயிக்க வேண்டும் என்றா? கண வருக்கு விக்கெட் விழ வேண்டும் என்றா...?

! என்ன வேண்டுவார் என்பதை அறி யோம். ஆனால் எப்படி வேண்ட வேண் டும் என்பதை அறிவோம்:

May the best team win.

● எஸ்.டி. புருஷோத்தமராஜன், பரமக்குடி.

? 'வரதராஜ பெருமாளே சாட்சி' என் றார் ஒரு போலீஸ் அதிகாரி. 'பழனி முரு கன் பார்த்துப்பான்' என்கிறார் ஒரு பிர முகர். 'சேலம் மாரியம்மன் இருக்க பய மேன்?' என்று தர்மபுரி பஸ் எரிப்பு வழக்கு குற்றவாளிகள் கூறுவார்கள் போலிருக்கிறது... இந்த தெய்வங்களுக்கு வந்த சோதனையைப் பார்த்தீங்களா, தராசு...?

! தெய்வங்கள் சோதனைகளுக்கு அப் பாற்பட்டவர்கள் புருஷோத்தம்! அவர் களை வம்புக்கு இழுக்கிறவங்களுக் குத்தான் இது சோதனைக் காலம்.

● அ. சுகுமார், காட்டுக்கானூர்.

? சமீபத்திய அதிர்ச்சி செய்தி...?

❐ ரூ 100 பரிசு பெறுபவர்
வி. துளசி,
(3), 17, ஆறாவது தெரு,
சரவணா ஃபிளாட், ராம்நகர்,
நங்கநல்லூர்,
சென்னை 600 061

! இந்தோனேஷியாவில் சொல்லிச் சொல்லித் தாக்கிய நில நடுக்கம்தான்... அதன் அச்ச அதிர்வுகள் நம் நாட்டையும் விட்டு வைக்கவில்லையே!

● கோ. சதாசிவம், நெல்லை - 1.

? கல்கி வெளியிட்ட 'குட்டித் தலைவர்' ஸ்டாலின் கட்டுரைக்கு முரசொலி சீறியுள்ளதே... நீங்கள் பணிந்து, வழக்குகளை நீர்த்துப் போகச் செய்வதாக முரசொலித் திருப்பது பற்றி...?

! கல்கி பேரிலிருந்த வழக்குகள், இதர பத்திரிகைகள் பேரிலிருந்த வழக்குகளுடன் சேர்ந்து ஏற்கெனவே வாபஸ் பெறப்பட்டு விட்டன. முரசொலியின் குற்றச்சாட்டுதான் நீர்த்துக் கிடக்கிறது.



● யானை பல யோசனை!



● காங்கிரஸ் கைங்கர்யம்!

● வே.ந. கதிர்வேல், வேலூர்.

? "தேர்தலுக்குப் பிறகு 'குதிரை வியாபாரம்' மூலம் 'ஆதரவு' திரட்டி ஆட்சி அமைப்பதென்பது மக்களுக்கு ஜனநாயகத்தின் பேரில் உள்ள நம்பிக்கையைக் குலைக்கும். அரசியலே இது போன்ற செயல்களால் அழிவுப்பாதையில் திரும்பும்" என்று அப்துல் கலாம் எச்சரித்துள்ளாரே?

! எச்சரிப்பதோடு நில்லாமல், இந்நிலை மாறுவதற்கும் தேர்தல் சீர்திருத்தங்களுக்கும் ஏதாவது வழி உண்டா என்று யோசித்துச் செயல்படுவது நல்லது. இதன் மூலம் ஜனாதிபதி தமது அதிகார எல்லைகளை மீறியவராகிவிட மாட்டார்.

● ஆர். பாரதி, சென்னை - 73.

? "காவல்துறையினருக்கு இதுவரை யாரும் வழங்கியிராத சலுகைகளை நான் தாராளமாக வழங்கியுள்ளேன்" என்று ஜெயலலிதா சொல்கிறாரே...?

! நல்ல காரியங்களே இந்த ஆட்சியில் நடக்கவில்லை என்று யாரும் கூறிவிட முடியாது. ஆனால் 'நான் செய்தேன்'; 'நான் ஆணையிட்டிருக்கிறேன்'; 'என்னுடைய அரசு செய்துள்ளது' என்றெல்லாம் பேசுவதை முதல்வர் நிறுத்திக் கொள்வது நல்லது. நடப்பது மக்களாட்சி; தனிநபர் ஆட்சி அல்ல.

● நித்ய சுகன்யா, சென்னை - 61.

? கோயில்களில் கற்பூரம் ஏற்றக் கூடாது; நெய் தீபம்தான் என்கிறார்களே...? (பட்டணத்தில்தான் இது அதிகம்...) இது பட்டணத்தின் வளர்ச்சியா? கிராமப்புறத்தின் அறியாமையா...? அல்லது சுற்றுச்சூழல் விழிப்புணர்ச்சியா...?

! கற்பூரத்தில் கலப்படம் நிறைய இருப்பதால், பிராகாரச் சுவர்களிலும் விக்ரஹங்களிலும் ஏராளமாகக் கரி படிகிறது. இதைத் தவிர்க்கவே நெய் தீபம் என்று மாற்றியிருக்கிறார்கள். ஆகவே விழிப்புணர்ச்சிதான்.

● வீ. உதயக்குமாரன், ஜாம்புவானோடை.

? மோசமான சினிமாப் படங்களுக்கு சென்சார்; மோசமான பத்திரிகைகளுக்கு...?

!(சு)தந்திரம்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? அகத்தின் அழகு முகத்தில் எப்போது தெரியும் சார்...?

! புற அழகு அல்லது அழகின்மையைக் கண்டு நீங்கள் ஏமாறாமல் இருக்கும் போது, அகத்தின் அழகு அல்லது அழகின்மை தெரிய வரும். ○

* ரூ 50 பரிசு பெறுபவர்:
குட்டி பிரசன்னா,
E.L, 19, டி.என்.எச்.பி,
காந்தி கிராமம்,
கரூர் -
639 004

# உள்ளம் துறந்தவன்

**வி**ஜி எந்தவித முகமாறுதலும் காட்டாதது மஞ்சரிக்கு ஆச்சரியமாக இருந்தது. அமெரிக்க நாக்குகளுக்கு ஏற்ப விஜே என்றும், இந்தியாவுக்கு வந்ததும் விஜி என்றும் அழைக்கப்பட்ட விஜயராகவன் (தாத்தா பெயர்) பிறந்து வளர்ந்து, படித்தது எல்லாம் அமெரிக்காவில்தான். அந்த சமூகத்தின் சுதந்திரங்களுடன் வீட்டில் ஒரு கலாசாரம், வெளியே ஒரு கலாசாரம் என்ற முரண்பாடுகளையும் தன் இரண்டும் கெட்டான் சரும நிறத்தின் சங்கடங்களையும் சமாளிக்க, வளரும் பருவத்தில் ரொம்பத் திணறினான். கேர்ள் ஃப்ரெண்ட் இல்லாவிட்டால் 'கே' என்றும் 'ஃப்ரூட்' என்றும் கேலி செய்யும் நண்பர்கள், 'யாரையாவது பெண்ணை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வந்தே... காலை ஒடிப்பேன்' என்ற தாய் புவனா, வாரம் ஒரு முறை அந்நியனைப் போல் தரிசனம் தரும் தந்தை டாக்டர் பாலா, இவர்களுக்கு இடையில் அவனுக்கு ஒரே ஒரு விஷயம் தெளிவாக இருந்தது. என்ன ஆனாலும் டாக்டருக்குப் படிக்கப் போவதில்லை. அப்பாதான் ராப்பகலாக உழைத்து, நாள் முழுவதும் ஆஸ்பத்திரி பச்சை கவுனைக் கழற்றாமல் சம்பாதிக்கிறார். அதை யாராவது செலவழிக்க வேண்டாமா என்று, பதினெட்டாவது வயது நிரம்பிய அதே தினத்தில் கார் வாங்கிக் கொண்டான். அதை வருஷா வருஷம் மாற்றினான். தாய் தந்தையரிடமிருந்து பிரிந்து மேன்ஹாட்டனில் அபார்ட்மெண்ட் எடுத்துத் தங்கினான். நண்பர்களோடு குடித்தான், புகைத்தான், எல்லா ஆர்வங்களையும் தணித்துக் கொண்டு திரிந்துவிட்டு, ஏதோ ஒரு கட்டத்தில் நேராகிவிட்டான். சுயமாக சம்பாதிக்க வேண்டும் என்கிற ஞானோதயம் ஏற்பட்டு, இன்டர்நேஷனல் லா, எம்.பி.ஏ. என்று படித்துத் தேர்ந்து, ஒரு வால்ஸ்ட்ரீட் கம்பெனியில் சேர்ந்து கொண்டான். கம்பெனி மாறினான். போர்ட்டோரிக்கன் சினேகிதியுடன் கல்யாணத்திலிருந்தும், அதனால் கைகால் உடைவதிலிருந்தும் தப்பினான். அப்போதுதான் இன்சாஃப் சாம்ராஜ்யத்தின் மாப்பிள்ளையானால் என்னவெல்லாம் நன்மைகள் வரும் என்பதை அதன் வருடாந்திர ரிப்போர்ட்டைப் படித்த போது உணர்ந்து பிரமித்துப் போனான். அமெரிக்கத் தரத்தின்படியே அது ஒரு பெரிய கம்பெனி. உலகின் ஃபார்ச்சூன் 500 அருகில் இருந்த கம்பெனி. உடனே அவனது எம்.பி.ஏ. ஞானம் இயங்க, 'அமெரிக்காவில் ஒரு ஹோல்டிங் கம்பெனியை அமைத்து, கலிஃபோர்னியாவில் ஒரு ப்ரி ஐ.பி.ஓ. சாஃப்ட்வேர் கம்பெனியை வாங்கினால், ஒரு வருஷத்தில் முந்நூறு மில்லியன் டாலர் பண்ணிவிடலாம்..' இவ்வாறான யோசனைகளின் மத்தியில் மஞ்சரி அவனை இரண்டு மூன்று தடவை கூப்பிட்டு, அவன் முன் கை சொடுக்க வேண்டியிருந்தது.

"என்ன சொன்னே? அழகேசன்...?"

"அவனைக் கல்யாணம் பண்ணிக்கிறதா வாக்குக் கொடுத்திருக்கேன்"

"ட்ராப் ஹிம்! என்னைக் கல்யாணம் பண்ணிக்க. நம்ம கம்பெனியை ஃபார்ச்சூன் 500க்குள்ள கொண்டு வந்துருவேன், உங்கிட்ட எத்தனை ஷேர் இருக்கு?"

"எனக்கு ஷேர்னா என்னன்னே தெரியாது"

"உங்க ஊர் டி மேட் ஸ்டேட்மெண்ட் எதும் பார்த்ததில்லை?"

"ஏதோ ஐயர் 'ஜெனரல் பாடி'ம்பாரு. கையெழுத்து வாங்கிட்டுப் போவார். பாரு விஜி, எனக்கு இதிலெல்லாம் இன்ட்

பளீர் இளமைத் தொடர் 14

ரஸ்டே இல்லை. அழகேசனை மனப்பூர்வமா காதலிக்கிறேன்"

"உங்க மூவிஸ்ல வர்ற மாதிரி பேசறே"

"நீ டமில் மூவிஸ் பாப்பியா?"

"எங்கம்மா விடாம பார்ப்பாங்க. நான் எட்டிப் பார்ப்பேன். மெயின்லி பெல்லி பட்டன்ஸ் பத்து நிமிஷம். அதுக்கு மேல தாங்காது"

''உங்க ஹாலிவுட் மூவிஸ் எனக்கு அஞ்சு நிமிஷத்துக்கு மேல தாங்காது''

"நோ ப்ராப்ளம். ஐ வில் டேக் கேர் ஆஃப் அழகேசன். அவனை பி.ஆர்.ல நல்ல சம்பளம் போட்டு கலிஃபோர்னியாவுக்கு அனுப்பிரலாம்''

"விஜி! இது இவ்வளவு லைட்டா எடுத்துக்கற விஷயம் இல்லை"

''இதெல்லாம் அமெரிக்காவில சாதாரணம் மஞ்சு. வாரா வாரம் பாய் ஃப்ரெண்ட், கேர்ள் ஃப்ரெண்ட் மாத்துவோம். அது வேற. கல்யாணம் வேற. கல்யாணம் சீரியஸ் மேட்டர். நான்கூட ஒரு போர்ட்டோரிக்கன் பெண்கூட சுத்திக்கிட்டிருந்தேன், ஈவன் ஸ்டீவன்!"

''இங்க அப்படி



இல்லை. ஒருத்தனை காதலிச்சா, வாழ் நாள் முழுக்க..."

அவன் வசீகரமாகச் சிரித்தான். "நான்சென்ஸ். எனிவே, உன்னை அவ்வளவு தூரம் கவர்ந்த இந்த கேரக்டரை சந்திச்சே ஆகணும்" என்று செல்போனை எடுத்து "பரமேஸ்வரன் மாமா, நான் விஜி பேசறேன். ராகவேந்தர்ஸ் கிராண்ட் ஸன், சௌக்கியமா? ஹவ் இஸ் யுர் டாட்டர்... ஓ! ஸாரி டு ஹியர் தட். ஒண்ணுமில்லை, அழகேசன் தெரியுமா? மஞ்சு வோட பாய் ஃப்ரெண்ட்'' கொஞ்ச நேரம் கேட்டுவிட்டு "டு மி எ ஃபேவர். கார் அனுப்பி அவனைத் தேடி எப்படியாவது ட்ரேஸ் பண்ணி, உடனே பார்க் ஓட்டலுக்குக் கூட்டி வாங்க. அடுத்த அரை மணியில'' இப்போதே முதலாளிபோல ஆணையிட்டான்.

மஞ்சரி "வரமாட்டான்" என்றாள்.

''லெட்ஸ் ஸீ. கலிஃபோர்னியா ஆபீஸ்ல ஒரு வேலை கொடுத்தா, அத்தனையும் மறந்துருவான்"

"இப்ப அழகேசனை பத்திப் பேச வேண்டாம்"

"யூ மீன் அவனை மறந்துருவியா?"

"பாரு, எனக்கு சரவணனை கல்யாணம் பண்ணி வெக்கணும்னு நாகு மாமா ஒத்தைக் கால்ல நிக்கிறார்"

"சரவணனா? தட் இடியட் கஸின் ஆஃப் மைன்? நிஜமாவே சொல்லு. யு வாண்ட் டு மேரி தட் க்ரீச்சர்?"

"இல்லை, உன்னையும்..."

"தாத்தாகிட்ட சொல்லிடு. சரவணன் இஸ் நாட் மை சாய்ஸ்னு"

"இப்ப அண்யாவுடைய ஹெல்த்தான் முக்கியம்"

"டோண்ட் ஒர்ரி. டாடி அமெரிக்காவில லீடிங் சர்ஜன். தினம் ரெண்டு ஹார்ட் ஆபரேஷன் பண்றவர். சரி பண்ணிடுவார். அப்பறம் தாத்தா ரெஸ்ட் எடுத்துக்கிட்டே ஆகணும். பிரமாதமான கம்பெனி. எல்லா நம்பரும் சரியா இருக்கு. டெட் ஈக்விட்டி ரேஷியோ க்ராஸ்ப்ளாக், ப்ராஃபிட் க்வார்ட்டர்லி ரிசல்ட்ஸ், க்ரோத் சர்ப்ளஸ் எல்லாம், கம்பெனியை தைரியமா எடுத்து நடத்தலாம்" அவன் கண்கள் அலைந்தன. "தேர் கம்ஸ் தி ஜோக்கர்"

சரவணன் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு அவர்களை நோக்கி வந்தான்.

"ஏய் சரு, எப்படிரா இருக்கே?"

"இங்க இருக்கிங்களா? நான் ஆபீஸ்ல இருக்காங்காட்டியும்னு அங்க கேட்டேன்! விசி, நல்லதாயிருச்சு நீ வந்தது. மஞ்சு, நமக்கு நாளைக்கு தட்டு மாத்திக்கிடறாப்பல. கத்திரிப்பூ கலர் உனக்குப் பிடிக்கும்னு மரகதம் ஆச்சி சொல்லிச்சு. அமிர்தா, ரோகிணி எல்லாம் கோவைல புறப்பட்டு வராங்க. நாளைக்கு வூடே கலகலன்னு ஆயிரும். எல்லாரும் வந்தாச்சில்லை. உங்கம்மா வரலியா? அதென்ன உன் தங்கச்சிக்கு சேரான்னு பேரு?"

"என்ன சொல்றே சரவணன்? வாட் இஸ் திஸ் தட்டு பிசினஸ்?"

"நிச்சயதார்த்தம். பழம், பாக்கு, வெத்தலை, தெரியாது? எனக்கும் மஞ்சரிக்கும் கல்யாணம்"

"தெரியாது"

"வீட்டுக்கு வா, கல்யாணி அக்கா சொல்வாங்க"

விஜி அடக்க முடியாமல் சிரித்தான். "திஸ் இஸ், திஸ் இஸ் ஃபன்னியர் தேன் எ டமில் மூவி. தாத்தாவுக்கு உடம்பு சரியில்லாத போது, பொண்ணுக்குத் தெரியாம வாட்ஸ் தி ஹர்ரி சரவணன்?"

"பாரு விசி, சொல்லிப்போட்டேன், நம்ம ப்ளானுக்கு குறுக்க வராதீங்க, சொல்லிட்டேன்" என்றான்.

விஜி இன்னமும் சிரித்துக் கொண்டிருந்தான்.

சரவணன் மேஜையில் உட்கார்ந்து சூப்புக்கு வைத்திருந்த ரொட்டிக்குச்சியைக் கடித்தான். கிண்ணத்திலிருந்த பாதாம் பருப்புகளை அப்படியே கையில் கொட்டிக்கொண்டு, வாயில் அடித்துக் கொண்டான்.

## லாக் அப்!

**91**-96ல சட்டசபையில் நடந்த ஒரு பிரச்சனைக்காக சபாநாயகர் என்னை சபையிலிருந்து வெளியேற்ற உத்தரவிட்டுட்டாரு. அப்போ சபைக் காவலர்கள் என்னை வெளியே இழுத்து வர்றப்போ கொஞ்சம் தள்ளுமுள்ளு ஆகிப்போச்சு. அப்புறம் வீட்டுக்கு வந்துட்டேன். திடீர்னு ராத்திரி ஒரு மணிக்கு வீட்டு வாசல்ல

"யக்கி" என்றான் விஜி.

"இந்த ஓட்டலும் தாத்தாவுடையதா? இல்லைன்னா வாங்கிரலாம்" என்றான். அவன் மற்றவர்களது அபிப்ராயங்களுக்கோ, உணர்ச்சிகளுக்கோ சங்கடப் படுபவனாகத் தெரியவில்லை. கோவையின் வெளிப்புறத்தில் செல்லமாக வளர்க்கப்பட்டு, ஒவ்வொரு வகுப்பிலும் நிதானமாக இரண்டிரண்டு வருஷம் படித்து, இப்போது தபாலில் பாகல்பூர் பல்கலைக் கழகத்தில் பி.ஏ. பண்ணுகிறதாக பேச்சு. மஞ்சரியை அவன் பார்த்த பார்வையிலேயே இச்சை தெரிந்தது. நெருக்கமான, அடர்த்தியான புருவங்கள். சற்றே தூக்கலான பற்கள். நெற்றியில் பொட்டு, கையில் தங்கத் தோடா. விரலெல்லாம் மோதிரம். அவனிடம் வசீகரமானது அவனது எளிய கோயமுத்தூர் தமிழ் மட்டுமே.

"அனிமூனுக்கு ஸ்விஸ் போயிரலாமா? அது என்ன படம்? ரயில்ல பாடிக்கிட்டே போவானுங்கோ, என்னமோ ஸ்டாரு"

"பாரு சரவணன், நான் சொல்றதைக் கொஞ்சம் காது கொடுத்துக் கேளு. நானும் என் தந்தையும் வந்திருக்கிறது தாத்தாவுக்கு வைத்தியம் பார்க்க. இந்த சமயத்தில் கல்யாணம் பேசினா, ரொம்ப குழப்பமாயிரும்"

"பின்ன எங்கப்பாதான் சொன்னார், தாத்தா செத்துட்டா சொத்து வெளிய போவக்கூடாது, மஞ்சரியைக் கட்டிக்கிடுன்னு"

அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள, கோபத்தில் மஞ்சரியின் முகம் சிவந்தது.

"சரவணன், என்னை எப்பவாவது யாராவது சம்மதம் கேட்டாங்களா?"

"அப்பாருதான் கேட்டாச்சு பொன்னான்னாரு"

"பொன்னா யாரு?"

"வீட்ல என்னை பொன்னான்னு கூப்பிடுவாங்க"

"பொன்னா, என்னானாலும் இப்ப கல்யாணம் இல்லை. யாரும் அதுக்குத் தயாரா இல்லை. வா, ரெண்டு பேரும் தாத்தாவை போய் பாத்துரலாம். ஃபர் யுர் இன்ஃபர்மேஷன், மஞ்சு என்னைத்தான் கட்டிக்கப்போறா."

"மஞ்சு, அப்படியாங்கொன்னா?"

மஞ்சரி தாற்காலிகமாக அவன் தொந்தரவு தாங்காமல் "அப்படித்தான்" என்றாள். சரவணனின் முகம் உடனே ஏமாற்றத்தைக் காட்டியது. அவன் மனசுக்குள் எதையும் வைத்துக்கொள்ள மாட்டான் என்பது தெரிந்தது.

மஞ்சரிக்குச் சிரிப்பு வந்தது.

அதே சமயம் மினர்வா ஆஸ்பத்திரியில் சிரிப்பில்லை. பாலா பிரதான கார்டியாலஜிஸ்ட், தொராஸிக் சர்ஜன் இருவருடனும் க்ளீவ்லண்டில் மற்றொரு நிபுணர் டாக்டர் ரீவ்ஸ் என்பவருடன் கான்ஃபரன்ஸ் காலில் இருந்தார்.

"பதினெட்டு பர்செண்டில் எப்படி உயிர் வாழ்கிறார் என்பதே ஆச்சரியமாக இருக்கிறது. இரண்டு பெரிய குழாய்கள் அடைத்திருக்கின்றன. இதயத்தின் இடது அறை திணறுகிறது. இந்த நிலையில் மூன்று மாதம் கூடத் தாங்கமாட்டார். லெட்ஸ் டூ எ ஸிஏபிஜி" என்றார் பாலா.

"மாற்று இதயம்தான் அவரைக் காப்பாற்றும்" என்றார் டாக்டர் ரீவ்ஸ்.

(தொடரும்)

போலீஸ். சபைக் காவலர்களை தாக்கின வழக்குல என்னை கைது செய்யறதா சொல்லி ஜீப்புல ஏத்திட்டாங்க. வண்டி ஏதாவது ஒரு ஸ்டேஷனுக்கு போகும்னு நினைச்சா, வண்டி சிட்டியையே சுத்துது. ஒவ்வொரு ஸ்டேஷனுக்கும் போகுது. கொஞ்ச நேரத்துல வேற ஸ்டேஷனுக்கு போகுது. நேரம் ஆக ஆக எனக்கு ரொம்ப படபடப்பாயிடிச்சி. இந்த அர்த்த ராத்திரில என்ன செய்யப் போறாங்களோன்னு நினைச்சி மனசு பதறுது. கடைசில வண்டி நேரா கோட்டைக்குள்ள வந்து அங்க இருக்குற லாக்அப்ல வச்சிட்டாங்க. நானோ தனி ஆள். ராத்திரி நேரம். நாலு ஜீப்ல போலீஸ். உயிர் பயத்துல ரெண்டு மணி நேரம் தவிச்சிருக்கேன் பாருங்க. அப்பப்பா...!



- பரிதி இளம்வழுதி

"கோடம்பாக்கம் ரயில்வே லைன்ல காதல் தோல்வியால ஒரு பொண்ணு அடிபட்டு இறந்துடுச்சு. தினமும் ராத்திரியானா ஆவியா அங்க வருதுன்னு பேசிக்கிறாங்க"

"டிஃபென்ஸ் காலனி மெயின் ரோட்ல புருஷன் கொடுமை தாங்காம ஒரு பொம்பள, மரத்துல தூக்கு மாட்டி தொங்கிட்டா. நைட்டான போதும், வந்து அட்டகாசம் பண்ணுது"

"ரோட்டை க்ராஸ் பண்ணப்போ காசி தியேட்டர் பிரிட்ஜ்ல ஒரு ஆளு லாரில அடிபட்டு செத்துட்டான். எப்பவும் ராத்திரி பன்னிரண்டு மணிக்கு மேல அவன் பாலத்துலதான் சுத்திட்டிருக்கான்"

- காற்று வாக்கில் நாம் கேள்விப்பட்ட மேற்கண்ட மூன்று தகவல்களும் உண்மைதானா என்றறிய, ஒரு நடுராத்திரி களத்தில் இறங்கினோம்.

நேரம் : இரவு 12 மணி, ஸ்பாட்: கோடம்பாக்கம் ரயில்வே லைன். பகலில் வறுத்தெடுத்த வெயிலின் கொடுமையைத் தணிக்கும் விதமாக, காற்று இதமாக வீசிக் கொண்டிருந்தது. சிக்னல்கள் மட்டும் வெளிச்சத்தை உமிழ்ந்தபடி இருக்க, மற்ற எல்லா இடங்களிலும் இருட்டு வியாபித்திருந்தது. நேரம் நகர்ந்து கொண்டிருக்க, அமானுஷ்ய அமைதி. இருட்டுக்கு கண்களைப் பழக்கியபடி ஒரு மூலையில் உட்கார்ந்து, ஏதாவது தட்டுப்படுகிறதா என்று உற்றுப் பார்த்தோம். தூரத்தில் தண்டவாளத்தை ஒட்டியிருந்த செடிகளில் சிறு அசைவு. நாம் சுறுசுறுப்பாகி டார்ச் அடித்துப் பார்க்க, சட்டென்று ஒரு உருவம் எழுந்து நின்றது.

"யாருப்பா அது, வயிறு வலிக்குதுன்னு ஓரமா உட்கார்ந்தா, லைட் அடிச்சுப் பாக்கறது?"

பெரியவர் ஒருவர் வெறுத்துப்போய் கேட்க, ஸாரி சொல்லிவிட்டு நாம் வேறிடம் நகர்ந்தோம். ஐந்து நிமிடம் கடந்திருக்கும்... காற்றில் ஒருவித நறுமணத்தை உணர முடிந்தது. ஆம்... அது மல்லிகை வாசம்! நெஞ்சம் திடுக், திடுக்கென அடித்துக்கொள்ள, சுற்றும் முற்றும் பார்வையை அலைய விட்டோம். ம்ஹூம்... யாரையுமே காணோம். நாலடி நடந்திருப்போம்... கால்களில் ஏதோ தட்டுப்பட்டது. குனிந்து எடுத்துப் பார்க்க, பாலிதீன் பையில் சுற்றப்பட்ட மல்லிகைச் சரம். நடுக்கத்தோடு நின்று கொண்டிருந்த நம் தோள் மீது சட்டென்று ஒரு கை விழ, அதிர்ந்து திரும்பினோம்.

* அந்த மரம்...

# இரவு... இருட்டு...


* பாலிதீன் கவரில் மல்லிகை...

"யார் நீங்க, இந்நேரத்துல இங்க என்ன பண்றீங்க?" என்றார் அந்த ரயில்வே அதிகாரி.

"ஒ... ஒண்ணுமில்ல சார், சும்மா காத்து வாங்கலாம்னு வந்தோம்"

"இது காத்து கருப்பு சுத்தற நேரம்... ஒழுங்கா வீடு போய்ச் சேருங்க"

"சரிங்க சார்" என்று கூறிவிட்டு, சற்று தூரம் சென்று திரும்பிப் பார்க்க, அந்த அதிகாரியைக் காணவில்லை.

அடுத்து நாம் சென்றது டிஃபென்ஸ் காலனிக்கு. மணி நள்ளிரவு 1.00 மணி. அந்த

பாவம் பசங்க... நம்மள பார்க்க ரொம்ப கஷ்டப்பட்டு றாங்க!

கவலைப்படாதே, நைட்டு வீட்டுக்குப் போயிடுவோம்!

# பதற்றம்!

மெயின் ரோடு முழுக்கவும் மரங்கள் வரிசையாக நின்ருந்தன. ஊதக் காற்று இலைகளை உலுருவி சலசலக்க வைத்துக் கொண்டிருந்தது. ஒவ்வொரு மரமாய் பார்த்துக் கொண்டே வந்து, குறிப்பிட்ட மரத்தின் முன் நின்றோம். ஒரு பெண் உயிர் துறக்க கிளை தந்த எந்த அறிகுறியுமற்று, சலனமற்றிருந்தது அந்த மரம். நெடுநெடுவென வளர்ந்திருந்த அதன் கிளைகள் கைநீட்டி நம்மை அழைப்பது போல் அசைந்தன. ஒரு வித அச்சத்தோடு அண்ணாந்திருந்த நம் காதுக்கு சட்டென்று பிடிபட்டது அந்தச் சத்தம். 'உம்...ம்...ம்..' என்று யாரோ மூச்சிரைக்கிற சத்தம். திடுக்கிட்டுப் போய் திரும்ப, ஐயோ... நமக்கு மிக மிக அருகில், நம்மையே பார்த்தபடி நின்றிருந்தது அந்த நாய். அதன் கண்கள் மிகக் கூர்மையாக, அடுத்து நாம் செய்யப்போவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தன.

• லொல்... லொல்...!

என்ன நினைத்ததோ, திடீரென்று பின் வாங்கி நம்மை விட்டு விட்டு, மரத்தைப் பார்த்துக் குரைத்தபடி ஓடிவிட்டது. நமக்கு திகில் இன்னும் அதிகமாக, மரத்தை விட்டு கொஞ்ச தூரம் தள்ளிவந்து நின்று அதை கவனித்தோம். அடுத்த பத்து நிமிடங்கள் அமைதியாகக் கழிய, பதினொன்றாவது நிமிட ஆரம்பத்தில் தூரத்தில் ஒரு வெளிச்சப் புள்ளி தெரிந்தது. அருகே வர, வர... அதுவொரு போலீஸ் பேட்ரோல் வேன். எங்கே நம்மைப் பார்த்தால் கேள்விகளால் துளைத்தெடுத்துவிடுவார்களோ என்ற பயத்தில், நாம் கொஞ்ச நேரத்துக்கு எஸ்கேப் ஆனோம். வண்டி அந்த சுற்று வட்டாரத்தை விட்டு அகன்றதும் மறுபடி மரத்தின் முன்பு ஆஜராக, இந்த முறை நிஜமாகவே திகிலை உணர்ந்தோம். காரணம், மரத்தின் பின்னே கசிந்த மெல்லிய புகை.



• மேம்பாலம்

'அகால மரணமடைந்தவர்கள் இறந்த இடத்திலேயே ஆவியாய் சுற்றிக் கொண்டிருப்பார்களா?' என்று மனநல மருத்துவர் நம்பியிடம் கேட்டோம்.

"அந்தக் காலத்தில் நம் வீட்டுப் பிள்ளைகள் வெளியில் சுற்றிவிட்டு வீட்டுக்கு இரவு நேரங்களில் தாமதமாக வருவதைத் தடுப்பதற்காகவும், தவறான இடங்களுக்குச் செல்லாமல் தடுப்பதற்காகவும், விபத்து நடக்கும் பகுதிகளை அனுபவ ரீதியாக உணர்ந்ததன் காரணமாகவும் பெரியோர்கள் சொன்ன கட்டுக் கதைகளில் இருந்து உருவானவையே இத்தகைய மூடநம்பிக்கைகள். இந்தக் கருத்துகளை நேரடியாகச் சொல்லாமல் 'இங்கு போனால் பேய் பிடித்துவிடும். அங்கு போனால் ஆவி அடித்து விடும்' என்று சொல்லி, நம்மை சரியான பாதைக்கு அழைத்துச் செல்வதாக நினைத்து தவறான மூட நம்பிக்கைகளை வளர்த்து விட்டதன் விளைவுதான் இத்தகைய கேள்வி எழக் காரணம். இந்த விஷயத்தில் அனைவருக்கும் தேவை விழிப்புணர்வு தான்."

- வளவன்



அதைக் கண்ட மாத்திரத்தில் நம் கால்கள் பின்ன ஆரம்பித்துவிட்டன. கைகளில் நடுக்கத்தை உணர்ந்தோம். இருந்தும் மனதில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, புகைப் படக்காரரிடம் அந்தக் காட்சியை படம் பிடிக்கச் சொல்ல, அவரோ, "பேயெல்லாம் போட்டோல விழுமா சார்?" என்று அப்பாவியாய்க் கேட்டார்.

அவரிடம் பேசிக் கொண்டிருக்கும் போதே சட்டென்று புகை வருவது நின்றது. அடுத்து பேய் வருமா என்று பார்க்க, மரத்தின் பின்னாலிருந்து ஒரு பிச்சைக்காரர் லுங்கியை சரி செய்தபடியே வந்தார். பீடியை மரத்தில் தேய்த்து அணைத்துவிட்டு, நம்மை விநோதமாய்ப் பார்த்தபடி நகர்ந்தார். 'அடச்சே!' என்றபடி நாமும் கிளம்பினோம்.

ஈக்காடுதாங்கல் பாலத்திலாவது விபத்தில் இறந்தவர் கண்ணுக்குத் தென்படுகிறாரா என்று நாம் போனபோது மணி 1.30. சோடியம் வேப்பர் விளக்கு வெளிச்சம் சாலையைக் கழுவிக் கொண்டிருக்க, அவ்வப்போது லாரிகளும் கார்களும், பேய்த்தனமாய் விரைந்து கொண்டிருந்தன. "இந்த வெளிச்சம், சத்தத்தில் நிச்சயம் ஆவி வராது. இந்த இடமும் வேஸ்ட்தான்" என்று புகைப்படக்காரர் சலித்துக் கொள்ள, அவரை சமாதானப்படுத்த பெரும்பாடு பட வேண்டியிருந்தது. 'இந்த இடத்துலதான் லாரியில அடிபட்டான்.' என்று நேற்று பகலில் நண்பரொருவர் காட்டியிருந்த இடத்தையே கழுகாய் வட்டமிட்டு காத்திருந்தோம். திடீரென்று பக்கத்துக் கூவத்தில் 'டமால்' என்று சத்தம். எட்டிப் பார்க்க, தண்ணீரில் ஏதோ அமிழ்வது தெரிந்தது. ஆனால் என்னவென்று கண்ணுக்குப் புலப்படவில்லை. புகைப் படக்காரர் 'ஆஹா..' என்று கேமராவைத் தயார் செய்ய, தொடர்ந்து கொலுசு சத்தம் நம் காதை எட்டியது. திரும்பிப் பார்க்க, காசி தியேட்டரில் படம் முடிந்து ஒரு தம்பதி நடந்து போய்க் கொண்டிருந்தனர். கூவத்தை பார்த்த நம்மை பார்த்தவர்கள் "என்னாச்சு, யாராச்சும் விழுந்துட்டாங்களா?" என்று விசாரிக்க, "ஏதோ விழுந்த மாதிரி சத்தம் கேட்டுச்சு, அதான் பார்த்தோம்" என்றோம்.

"ஏதாவது எருமை குளிச்ச சத்தமாயிருக்கும்" என்று சொல்லிவிட்டு மனைவியை அணைத்துக் கொண்டு கணவர் நடக்க ஆரம்பிக்க, கொலுசொலி தேய்ந்து மறைந்தது.

அடுத்து வந்த நிமிடங்கள் அகவாரஸ்யமாய்க் கழிய, எதுவுமே நம் கண்களுக்குத் தட்டுப்படவில்லை.

அதிகாலை நான்கு மணி வரை பாலத்திலேயே குளிர் காய்ந்துவிட்டு புறப்பட்டோம். களைப்பைப் போக்க, அருகிலிருந்த டீக்கடை ஒன்றில் சென்றமர, கடைசியில் மாஸ்டர் எடுத்து வந்து கொடுத்த சூடான தேநீரில்தான் தென்பட்டது, ராத்திரி முழுக்க நாம் தேடி அலைந்த ஆவி!

- மு.மாறன்

படங்கள் : ஸ்ரீஹரி







## Entertainment Sets



More than 10 Models

# Quality. Trust. Excellence.

# Sathya

# Furniture World

**Since 1968**

## Lifetime Investment

*One of India's Biggest Furniture Showroom*

| | |
|---|---|
| **H.O : Mylapore**<br>**( 20,000 sq.ft )**<br>139, R H Road,<br>Next to Sanskrit College,<br>Ch-4. **Ph : 24982930 / 31** | **Anna Nagar ( West )**<br>DABC Bldg.,<br>6, M T H Road, Padi,<br>Opp. TVS, Padi, Ch-50.<br>**Ph : 52155929** |
| **Velachery**<br>Paramount Park,<br>358, Velachery-Tambaram<br>Main Rd, Ch-42.<br>**Ph : 52144929** | **Coimbatore**<br>266, Mettupalayam Road,<br>Near Saibaba Temple<br>Bus Stop, Cbe - 43.<br>**Ph : 2452929 / 30** |

## Almirahs



More than 25 Models

## Wardrobes



More than 10 Models

## Sofa-cum-Beds



More than 10 Models

## Computer Tables



More than 25 Models

## Also Available

Diwans
Recliner Chairs
Pooja Cabinets
Computer Tables/Chairs
& Office / Institutional Furniture

**SUNDAY OPEN**

Exchange Option available for Old Furniture
Major Credit Cards accepted






# "ஹீரோக்களுக்கு

**அமீர்! தமிழ் சினிமாவுக்கு புதிய முகம் தர முயலும் இளைய தலைமுறை இயக்குனர். ''தமிழ் பார்வையாளனை, அவனது ரசனையை யாரும் மேம்படுத்த வேண்டிய அவசியமில்லை.'' என்று சொல்லும் இவரது 'ராம்' திரைப்படம், வழக்கமான கதை சொல்லும் மரபுக்கு எதிர்த் திசையில் நீச்சலடித்து, வெற்றியின் கரையைத் தொட்டிருக்கிறது. அவருடன் ஒரு சந்திப்பு!**

**சஸ்பென்ஸ் என்றால் க்ரைம் கதை அல்லது பேய்க் கதையில் இருக்கும். உங்கள் முதல் படமோ ஒரு காதல் கதை. ரொமான்ஸுடன் சஸ்பென்ஸை துணிச்சலாகக் கலந்துவிட்டீர்கள். இப்போது 'ராம்' படத்துக்கு முழுமையான த்ரில்லர் என்ற பாராட்டு. சஸ்பென்ஸ் எலிமெண்ட் மீது அப்படியென்ன காதல்?**

"காதல் என்பதைவிட, தமிழ் ரசிகர்கள் மீதுள்ள நம்பிக்கை என்பதுதான் சரி! தமிழ் ரசிகர்கள் மீது இயக்குனர்கள் வைக்கும் நம்பிக்கை என்றைக்குமே தோற்றதில்லை. மகேந்திரன் ஒரு நம்பிக்கை வைத்தார். பாலுமகேந்திரா வைத்த நம்பிக்கை வேறு. 'இந்தப் படத்தின் பாடல்கள், லண்டன், ஜப்பான், சீனா ஆகிய நாடுகளில் படமாக்கப்பட்டது' என்று விளம்பரம் போடுவார்கள். அப்போதுதான் படம் ஓடும் என்றிருந்த காலகட்டம். அந்த மாதிரி நேரத்தில் பாரதிராஜா வைத்தது அபார நம்பிக்கை. சப்பாத்திக் கள்ளிகள் நிறைந்த, செங்காற்று வீசும், வறண்ட கிராமங்களை தமிழ் சினிமாவுக்கு அறிமுகப்படுத்தினார். ரசிகர்கள் வாரி அணைத்துக் கொண்டார்கள். அடுத்து அவரே சிவப்பு ரோஜாக்கள் என்றொரு படம் கொடுத்தார். அதற்கும் மிகப்பெரிய வரவேற்பு. அதன்பிறகு யாருமே அதுபோன்று முயற்சிக்கவில்லை. ஆனால் எனக்கு சஸ்பென்ஸ் கதை பண்ண வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஆனால் ஹீரோக்களையே சுற்றிச் சுற்றி வந்து அவர்களுக்கு மட்டும் வாலாட்டுகிற விசுவாசியாக, தமிழ் சினிமா தடம் புரண்டு விட்டது."

**நீங்களும்கூட ஹீரோவை வைத்துத் தான் முதல் படம் எடுத்தீர்கள்! தயாரிப்பாளரோ, ஹீரோவோ உங்களுக்கு நெருக்கடிகள் தரவில்லையா?**

"மௌனம் பேசியதே படத்தின் திரைக்கதை எழுத உட்காரும் முன்பு, எனக்கு நானே எட்டுக் கேள்விகள் கேட்டுக் கொண்டேன். காதல் கதைதான் ஓடுகிறது என்கிறார்கள். காரணம் இளைஞர்கள் மட்டும் தான் படம் பார்க்க வருகிறார்கள். யூத் ஃபிலிம் என்று வர்த்தக முத்திரை வேறு. அதே சமயம் ஒரு யூத் படத்தைப் பார்க்க குடும்பத்தோடு ரசிகர்கள் ஏன் வருவதில்லை என்று ஆராய்ந்தபோது, அதிலிருக்கும் பச்சையான பாலியல் வக்கிரங்கள், ஆபாசம் எனக்குப் புலப்பட்டது. எனவே காதல் படம் எடுப்போம், அதில் சஸ்பென்ஸ் வைப்போம். ஆனால் கடுகளவுகூட கவர்ச்சியோ ஆபாசமோ இருக்கக் கூடாது என்று முடிவு செய்தேன். படத்தில் மூன்று கதாநாயகிகள். ஒரு டூயட் கூட இருக்கக் கூடாது என்று முடிவு செய்தேன். ஆனால் எட்டுப் பாடல்கள் வைத்தேன். ரசிகர்கள் எழுந்து போய்விடாத வண்ணம், கதையோட்டத்தில்

# வாலாட்டும் தமிழ் சினிமா!”

–அமீர்

சரியான இடத்தில் இடம் பெறச் செய்ய வேண்டும் என்பதில் தீர்மானமாக இருந்தேன். சேது படத்தில் பணியாற்றிய அனுபவம் மட்டும்தான். ஆனால் ஸ்கிரிப்டைக் கேட்டுவிட்டு ஒப்புக்கொண்ட தயாரிப்பாளர்களை நான் தெய்வங்களாக மதிக்கிறேன். அவர்கள் மறுத்திருந்தால் சமரசங்களுக்கு நான் உடன்பட்டிருக்கலாம். அல்லது சண்டை போட்டு வெளியேறி இருக்கலாம். என்மீது நம்பிக்கை வைத்து ஏற்றுக்கொண்ட இன்னொரு இளைஞர் சூர்யா. இரண்டு பேருக்குமே நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்.”



**ராம் படத்தின் கதைக்கான இன்ஸ்பிரேஷன் எங்கிருந்து கிடைத்தது?**

“நந்தா படப்பிடிப்பு சமயத்தில் நானும் சூர்யாவும் திருச்சிக்குப் போயிருந்தோம். அங்கே கேபிள் டி.வி.யில் உள்ளூர் செய்திகளை விஷுவலோடு காட்டிக் கொண்டிருந்தார்கள். இருபது வயது மதிக்கத்தக்க ஓர் இளைஞன், தன் அம்மாவின் பிணத்திற்கு அருகில் அமர்ந்து அழுதுகொண்டிருந்தான். அவன் கைகளில் ரத்தம். கொஞ்சம் போதையோடு வந்து 'மது அருந்த பணம் கொடு' என்று கேட்டிருக்கிறான். அம்மா ஒரு பைசா கூட தரமுடியாது என்று மறுத்துவிட, அந்த ஒரு நொடியில் தலைக்கேறிய கோபத்தில், அரிவாள்மணையை எடுத்து அம்மாவை வெட்டிக் கொன்றுவிட்டு, வீட்டிலிருந்த பணத்தை எடுத்துப்போய் மது அருந்திவிட்டு திரும்பி வந்திருக்கிறான். வந்தவன் 'அவசரப்பட்டு அம்மாவை நாமே கொன்றுவிட்டோமே' என்று பிணத்திற்குப் பக்கத்திலேயே அமர்ந்து அழுகிறான். இந்த நிஜக் காட்சி என்னை ஒரு கணம் உலுக்கிவிட்டது. படத்தில் அம்மா பிணத்திற்கு அருகில் மகன் படுத்திருந்தாலும், கொலையாளியை மகனாகக் காட்ட என் மனம் ஒப்பவில்லை.”

**தயாரிப்பாளர்களும், விநியோகஸ்தர்களும் நிர்ணயம் செய்கிற வர்த்தக அம்சங்கள் ஒன்றுகூட இல்லாமல் நம்மால் வெற்றிப்படம் தர முடியும் என்கிற உங்களது துணிச்சலின் பின்னணி என்ன? நிஜ வாழ்க்கையிலும் கூட துணிந்து ரிஸ்க் எடுக்கிற ஆள்தானா நீங்கள்?**

“நான் ரொம்ப சீரியஸான ஆள்! எந்த வேலை செய்தாலும் ஒழுங்காகச் செய்ய வேண்டும். ஏனோ தானோ என்று செய்வது எனக்குப் பிடிக்காது. காதலையும்கூட அப்படித்தான் எடுத்துக் கொண்டேன். நான் காதலித்த பெண் திடீரென்று என்னோடு பேசுவதை நிறுத்திவிட்டாள். காரணத்தை விசாரித்தபோது எங்கள் காதல், அவள் வீட்டுக்கு தெரிந்து என்னோடு பேசக் கூடாது என்று மிரட்டியிருக்கிறார்கள். நான் கெஞ்சினேன். 'விஷயம் என்னவென்று சொல், தீர்க்க முடியுமா பார்க்கலாம்' என்றேன். ஆனால் அவள் வாய் திறக்கவில்லை. அவள் பேசமாட்டாள் என்று உறுதியாகத் தெரிந்துவிட்டது. பேச வைக்க என்ன செய்யலாம். சரி, தற்கொலை முயற்சி செய்து பார்க்கலாம். நமது சினிமாக்களில்தான் காட்டுகிறார்களே, விஷம் குடித்துவிட்டு உயிருக்குப் போராடும்போது, படுக்கைக்குப் பக்கத்தில் வந்து நின்றுகொண்டு “அய்யோ, தப்பு பண்ணிட்டேனே?” என்று டயலாக் பேசுவார்கள். அது மாதிரி வரவழைக்க வேண்டும் என்று முடிவெடுத்துவிட்டேன். அந்தப் பெண்ணை கடைசியாக அவள் கல்லூரி வாசலில் பார்த்துச் சொன்னேன்

# அலறல் பயணம்!

**1981**-82ல டெல்லியில நடக்கவிருந்த காலேஜ் காம்படிஷன்ல கலந்துக்க கும்பலா தமிழ்நாடு எக்ஸ்பிரஸ்ல போனோம். நாங்க போயிட்டிருந்த ரயில் தடம் புரண்டுடிச்சு... அந்தக் கொடூர விபத்துல ஏகப்பட்ட பேர் இறந்துட்டாங்க. எங்க கம்பார்ட்மெண்ட்டுக்கு முன்னால, பின்னால இருந்த ரெண்டு கம்பார்ட்மெண்ட்டும் தடம் புரண்டுடிச்சி. எங்களோடது மட்டும் தப்பிச்சிடிச்சி... ஒருவேளை விழுந்திருந்தா என்ன ஆகியிருக்கும்னு எங்க கம்பார்ட்மெண்ட்ல இருந்தவங்க பேசினது வேற ரொம்ப பயத்தை உண்டாக்கிடிச்சி... ஒருவழியா இன்னொரு டிரெயின்ல ஏறி டெல்லி போனோம். இந்த விபத்தோட தாக்கமோ என்னவோ, வழியில ஒரு சின்ன சத்தம் கேட்டாலும் டிரெயின்ல இருக்குற எல்லாருமே அலறுவாங்க... வண்டி நின்னுடும்... கடைசில டெல்லி போய் சேர்ந்தாச்சு. இந்த அலறல் பயணம் என் வாழ்க்கைல மறக்க முடியாத திகில் பயணம்.

**- இயக்குனர் நாகா**



'நாளை நீ என்னை வந்து பார்த்தே ஆக வேண்டும். என்னோடு நீ கட்டாயம் பேசுவாய்' என்று சொல்லிவிட்டு, வரும் வழியில் உரக்கடையில் பூச்சி மருந்து வாங்கிக் கொண்டேன். ஒரு வீட்டில் தண்ணீர் கேட்டு வாங்கி அதில் கலந்து குடித்துவிட்டேன். வரும்போது 'செம்பை நன்றாக கழுவி விடுங்கள்' என்று சொல்லிவிட்டு நடையைக் கட்டினேன். நான் ஏன் அப்படிச் சொல்கிறேன் என்று தெரியாமல் தண்ணீர் கொடுத்த சகோதரி குழம்பி, செம்பை முகர்ந்து பார்த்துவிட்டு, விஷயத்தைப் புரிந்துகொண்டு கொஞ்ச நேரத்தில் என்னைத் தேடிக்கொண்டு கடை வீதிக்கே வந்து விட்டார். நான் மயங்கி விழவிருந்த நேரத்தில் சரியாக என்னை அடையாளங் கண்டு, அந்த சகோதரி அலறி, சினிமாவில் வருவது போலவே அடுத்த சில நிமிடங்களில் மருத்துவமனையில் சேர்த்துவிட்டார்கள். நினைத்த மாதிரியே காதலி வந்து கண்ணீர் விட்டாள். "வர வச்சுரு வேன்னு சொன்னே! ஆனா இப்படித்தான்னு எனக்குத் தெரியாது! இத்தனை மோசமானவனை நான் பார்த்ததே இல்லை" என்றாள். உண்மையில் நான் அத்தனை மோசமானவன் இல்லை. அத்தனை உறுதியானவன். மற்றபடி என்னால் யாருக்கும் துளி துயரமும் வந்துவிடக் கூடாது என்று நினைக்கிறவன்."

**இஸ்லாமிய சமுதாயத்தில் பிறந்து வளர்ந்த நீங்கள், இந்து மதக் கருத்துக்களை ஆழ்ந்த ஈடுபாட்டுடன் படத்தில் பயன் படுத்தியிருக்கிறீர்களே...?**

"என்னுடைய சொந்த அனுபவமே மிகவும் கசப்பானது. மதுரையில் நாங்கள் பலருக்கு வாடகைக்கு வீடு கொடுத்திருக்கிறோம். ஒரு கட்டத்தில் வாடகை வீட்டிற்குக் குடிபோக வேண்டிய நிலை. வாடகை வீடு தேடிப்போனபோது, பல இடங்களில் 'நீங்கள் முஸ்லீமா? உங்களுக்கு வீடு தர முடியாது' என்றார்கள். இன்னும் பல இடங்களில் 'உங்களுக்கு வீடு கொடுத்தால், குண்டு அல்லவா வைப்பீர்கள்?' என்று முகத்துக்கு நேராகச் சொன்னார்கள். அப்போதுதான் சூழ்நிலையின் தீவிரத்தை உணர முடிந்தது. பதினைந்து வருடங்களுக்கு முன்பு வரை இஸ்லாமிய மக்களை சிறுபான்மையினராகப் பார்த்தார்கள். இன்று அந்நியராகப் பார்க்கிற மனோபாவம் வளர்ந்துவிட்டிருக்கிறது. இந்த வேற்றுமையை, பகைமையை, மதங்கள் போதிக்கின்றனவா என்று தெரிந்துகொள்ள வேண்டும் என மனம் அரித்தது. அப்படித்தான் எல்லா மதங்களைப் பற்றியும் படித்தேன். எந்த மதமும் மனித வேற்றுமையை சொல்லித் தரவில்லை. கொலை செய் என்று வன்முறையை போதிக்கவில்லை. அனைத்து மதங்களின் சாரமும் ஒன்றுதான். அன்பு, சகோதரத்துவம், சமாதானம். இவ்வளவுதான். எனவே நான் எல்லா மதங்களையும் ஏற்றுக் கொள்கிறேன்."

**- ஜெய்**



மிகவும் சந்தோஷமாகத்தான் அந்த வீட்டை வாங்கினார் சிவராமன். ஆனால் இப்படியெல்லாம்கூட பிரச்னை வரும் என்று அவர் எதிர் பார்க்கவில்லை.

தனி வீடு, பார்க்க லட்சணமாய் இருந்தது. சௌகரியமான வசதிகள் அமைந்திருந்தன. ஐந்து நிமிட நடையில் டவுன் பஸ் நிறுத்தம். ஏழு நிமிட நடையில் இரயில்வே நிலையம்.

தரகர் விலையைச் சொன்னதும் நம்ப முடியாமல் பார்த்தார். வளர்ந்து வரும் இந்த நகரத்தில், இத்தனை சல்லிசான விலையில் வீடா?

“இந்த வீடு கட்டி பதினைஞ்சு வருஷம் ஆச்சுங்க. வீட்டு சொந்தக்காரங்க அயல்நாட்டுக்குப் போய் செட்டிலாகப் போறாங்களாம். நல்ல மனுஷங்களாய்ப் பாருங்கன்னு சொன்னாங்க. அதான் உங்களைத் தேடி வந்தேன்” என்றார் தரகர்.

உச்சி குளிர்ந்து போய், உடனடியாய் வீட்டை வாங்கி, பெயிண்ட் அடித்து மனைவியும் அவரும் குடிபோனார்கள்.

அன்று இரவே மழை பெய்தது.

# டெக்னிக்

“நல்ல சகுனம், இப்படி மழை பெய்தால்” என்று சந்தோஷப்பட்டார். ஆனால் அது நிலைக்கவில்லை.

பெயரளவில் ஐந்து நிமிடம் மட்டுமே பெய்த மழையின் விளைவு பயங்கரமாயிருந்தது.

ஒரே துர்நாற்றம். மல நாற்றம். சாப்பிட்ட சாப்பாடு புரட்டிக் கொண்டு வெளியே வந்தது. காரணம் புரிந்துவிட்டது.

அவரது வீட்டின் இடதுபுறம் ஒரு பத்தடி அகல முடிவு பெற்ற சந்து உள்ளது. அங்கு நிறைய அசுத்தம் பண்ணப் பட்டிருந்ததை வீடு பார்க்க வந்தபோதே கவனித்திருந்தார்.

“சார், கிட்டத்தட்ட ஒரு மாசமாய் வீட்டுச் சொந்தக்காரங்க இல்லை. வீடு பூட்டிக் கிடக்குது. அதனாலதான் இப்படி. நீங்க குடி வந்துட்டீங்கன்னா சரியாயிடும்” என்று தரகர் சொன்னது நினைவுக்கு வந்தது.

புது வீட்டில் முதல் நாள் இரவே சிவராத்திரியானது. வீடு முழுக்க ஊதுபத்தி, சாம்பிராணி, சென்ட் என்று மணக்க வைப்பதிலேயே இரவு ஓடிப் போனது.

விடிந்ததும், கோலம் போடப் போன அவர் மனைவி சுந்தரி, எதிர் வீட்டு மாமியிடம் புலம்ப,

“அப்ப விஷயம் தெரியாமத்தான் இந்த வீட்டை வாங்கினீங்களா? நம்ம தெருவுக்கு எதுத்தாப்பல இருக்கற சேரி ஆட்கள்தான் இங்க வந்து அசுத்தம் பண்றாங்க. அதனாலதானே வீடு பூட்டியே கிடந்தது” என்று மாமி சொல்ல, சுந்தரியின் கோபம், சிவராமன் மேல் பாய்ந்தது.

“என்னத்தை விசாரிச்சீங்க. பத்து ரூபாய்க்குப் பழம் வாங்கும்போதே ஆயிரம் தடவை முழிப்பீங்க. இப்படி ஏமாந்துட்டீங்களே?” என்று இடித்தாள்.

தெருவை அசுத்தம் செய்பவர்களை எப்படியாவது தடுத்து நிறுத்தியே ஆக வேண்டும் என்று முடிவெடுத்த சிவராமன், என்னென்னவோ செய்து பார்த்தார்.



முதலில் நகராட்சிக்கு நேரில் சென்று மனு கொடுத்தார். தினமும் ஆள் அனுப்பி சத்தம் செய்தார்கள். வருகிறவர்களுக்கு தண்டம் அழுது சிவராமனுக்கு மாளவில்லை. பகலில் சுத்தமான சந்து, ராத்திரியில் அசுத்தத்தால் நிரம்பி வழிந்தது. இரண்டு ட்யூப்லைட் பொருத்தி இரவெல்லாம் எரியவிட்டார். இரண்டு நாளில் உடைத்து விட்டார்கள். அடுத்து செக்யூரிட்டி ஒருவரைப் போட்டு காவல் காக்க வைத்தார். பாவம், அந்த நபர் சேரிவாசிகளால் கெரோ செய்யப்பட்டு விரட்டியடிக்கப்பட்டார். முள்ளை வெட்டி சந்தில் போட்டார். அடுப்பெரிக்க எடுத்துப் போய்விட்டனர். கடைசியில் சேரி மக்களிடமே சென்று முறையிட, அவர்கள் பெரிதாகக் கண்டு கொள்ளவில்லை.

நொந்துபோய் வீட்டை தனக்கு விற்ற தரகரிடமே சரணடைந்தார்.

"வீட்ல பொண்டாட்டி திட்டுறாய்யா. பேசாம யாருக்காவது வித்துக் கொடுத்துடு. உனக்கு புண்ணியமாப் போகும்" என்று கைகூப்பினார். அவரும் ஆளைக் கூட்டி வந்தார். வீட்டை ஆர்வமாய்ப் பார்த்தவர்கள், விஷயம் அறிந்து பின் வாங்கினார்கள். கடைசியாக, ஒரு ஆள் வந்தான். சிவராமன் வாங்கிய விலையைவிட ஒரு லட்ச ரூபாய் குறைத்துக் கேட்டான். முடிவெடுக்க முடியாமல் திணறி, பணமா, நிம்மதியா என்று பட்டிமன்றம் நடத்தி, நிம்மதிக்கு வோட்டுப் போட்டார் சிவராமன். வீடு கை மாறியது.

ஆறு மாதம் கழிந்திருக்கும். ஒருநாள் அந்த வீட்டைப் போய்ப் பார்க்க ஆவல் வந்தது சிவராமனுக்கு. தான் திண்டாடியது போல, அந்த ஆளும் நாற்றம் பொறுக்காமல் திண்டாடிப் புலம்புவதைக் கேட்கும் ஒரு குரூர ஆசை எழுந்தது. புறப்பட்டார்.

சென்ற இடத்தில் சிவராமனுக்கு உற்சாகமான வரவேற்பு. "சௌகரியமான வீடு சார். பஸ் ஸ்டாப், ரயில்வே நிலையம், கோயில் எல்லாமே பக்கம். உங்களுக்குத்தான் நன்றி சொல்லணும்" என்றான் வீடு வாங்கியவன்.

சிவராமனின் மனதுக்குள் ஏமாற்றம் படர்ந்தது. அதை மறைத்துக் கேட்டார்.

"இடதுபக்கத் தெருவுல, சந்துல... நாற்றம்..."

"அதுவா..." என்று அழைத்துப் போய் காண்பித்தான். பளிச்சென இருந்தது. சிவராமனுக்கு ஆச்சர்யம். தான் எப்படியெல்லாம் முயன்றும் முடியாததை, இவன் எப்படி முடித்தான்? அவரின் எண்ணத்தைப் புரிந்துகொண்டது போல் அவனே பேசினான்...

"தரகர் என்கிட்ட இந்தப் பிரச்னையை சொல்லித்தான் வீட்டை வித்தார். அதான் உங்ககிட்ட ஒரு லட்சம் குறைச்சுக் கேட்டேன். உங்ககிட்ட சேவ் பண்ணி, அந்தப் பணத்தைக் கொண்டு சேரி மக்களுக்கு பொதுகழிப்பிடம் கட்டிக் கொடுத்தேன். நகராட்சியும் எனக்கு உதவி பண்ணுச்சு. பிரச்னை தீர்ந்துச்சு!" என்று சிரித்தான்.

சிவராமன் கண்களில் பிரமிப்பு அகலவில்லை. ○

**கிருஷ்ணா**

# அருள்வாக்கு

எல்லாவற்றுக்கும் ஒரு குறுக்கு வழி இருக்கிறதே, அந்த மாதிரி ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு short-cut இல்லையா?

ஒன்றே ஒன்று இருக்கிற மாதிரி பகவானே சொல்லியிருக்கிறார். 'ஒருத்தன் செத்துப் போகிற சமயத்தில் எதை நினைத்துக்கொண்டு உடலை விடுகிறானோ, அதையே மறு ஜன்மாவில் அடைகிறான். என்னையே ஸ்மரித்துக்கொண்டு எவன் சரீரத்தை விடுகிறானோ, அவன் என்னை அடைந்து விடுகிறான்' என்று சொல்லி ''நாஸ்தி அத்ர ஸம்சய:'' - ''இதில் ஸந்தேஹமே இல்லை'' என்று 'காரண்டி' கொடுத்திருக்கிறார்.

'ரொம்ப ஸுலபமான வழியாக இருக்கே; வாழ்க்கை முழுக்க எப்படி குட்டிச்சுவராக நடத்தினாலும் அந்திம ஸமயத்தில் மட்டும் பகவானை நினைத்துக் கொண்டால் போதுமாமே! அதனாலேயே இந்த ஜனன- மரணச் சக்கரத்திலிருந்து தப்பித்துக் கொண்டு விட முடியுமாமே!' என்று தோன்றுகிறது.



ஆனால் பகவான் இங்கே 'பொடி' வைத்துப் பேசுகிறார். 'கடைசி காலத்தில் என்னை நினைத்துக்கொண்டு என்பதற்கு **'அந்தகாலே மாம் ஸ்மரன்'** என்று சொன்னால் போதும். ஆனால் பகவான் அப்படிச் சொல்லவில்லை. 'அந்த காலே 'ச' மாம் ஏவ ஸ்மரன் என்று ஒரு 'ச'வும் 'ஏவ'வும் போட்டு, ஸம்ஸார நிவ்ருத்தி இத்தனை ஸுலபமில்லையப்பா என்று ஆக்கிவிட்டார். இந்த 'ச'வுக்கும் 'ஏவ'வுக்கும் என்ன அர்த்தம்? 'அந்த காலே ச' என்றால் 'சாகிற சமயத்திலும்' என்று அர்த்தம். 'மாம் ஏவ' என்றால் 'என்னை' என்று மட்டும் அர்த்தமில்லை; 'என்னை மட்டுமே' என்று அர்த்தம்.

அவரை மட்டுமே அந்தியத்திலும் 'ஸ்டெடி'யாக ஸ்மரிக்க வேண்டும். அப்போதுதான் மோக்ஷம்.

**- ஜகத்குரு**
**காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர**
**சரஸ்வதி சங்கராச்சார்ய**
**சுவாமிகள்**




* கார்த்திகேயன்

பரீட்சார்த்த முயற்சிகளில் ஈடுபடும் விஜய் டி.வியின் லேட்டஸ்ட் அசத்தல் 'காத்து கறுப்பு'. திங்கள் டு வியாழன் இரவு பத்தரை மணிக்கு ஒளிப்பரப்பாகும் இந்த அமானுஷ்ய தொடரில், எது மாதிரியும் இல் லாத புது மாதிரியாக வாரம் ஒரு திகில் கதையை கையிலெடுத்துக் கொண்டு, பிசிறின்றி கையாளு கிறார்கள். அதனால்தானோ என்னமோ, விஜய்யின் டாப் டென் ப்ரோக்ராமில் முதலிடத் தைத் தொட்டிருக்கிறது 'காத்து கறுப்பு.'



* ராம்ஜி

"ரசிகர்களை மிரட்டி பயமுறுத் தவும் செய்யாமல், அதற்காக அவர்களை அழவும் விடாமல், வித்தியாசமான ஒரு சீரியலை ஏன் தரக்கூடாது என்று சிந்தித்ததன் விளைவுதான் 'காத்து - கறுப்பு.' இதில் வருகின்ற சம்பவங்கள், கருத்துகள் என்று எதுவாக இருந்தாலும், அவை இயற்கைக்கு முரண்பட்ட விஷயங்களாகவே இருக்கும். பேய் - பிசாசு போன்ற விஷயங்களில் நம்மில் பலருக்கு நம்பிக்கை இருக்காது அல்லது வெறுமனே நம்பிக்கை இல்லை யென்று சொல்லிக்கொள்வார்கள். ஆனால் உண்மையில் அவர்களுக்கும் ஒரு சில அமானுஷ்ய அனுபவங்கள் கண்டிப்பாக இருக்கும். அத்தகைய அனுபவங்களை, சம் பவங்களாகக் கோத்து, சின்னஞ்சிறு கதை களாக்கி, ஒரு கதைசொல்லியைக் கொண்டு கதையைத் துவக்கி, பின்னர் கதையின் தொடர்ச்சியை காட்சிப்படுத்துகிறோம். மற்ற சீரியல்களிலிருந்து இதுபோன்ற பல விஷயங்களில் காத்து கறுப்பு வேறுபடுவதால், இதற்கு நல்ல வரவேற்பு இருக்கிறது" என்று கூறும் கிரியேட்டிவ் டைரக்டர் ராம்ஜி, "குழந்தைகள் இத்தொடரை 'த்ரில்லர்' என நினைத்து ஒதுக்கி விடாமல், அவர்களும் பார்க்கும் வண்ணம் சீரியலில் ரத்த வாடையோ, வன்முறையோ இருக்கக் கூடாது என்பதில் மிகக் கவனமாக இருக்கிறோம்" என்றார்.

'அண்ணாமலை'யில் சூதாடிச் சித்த னாக கோவண காஸ்ட்யூமில் கலக் கிய கார்த்திகேயன்தான் 'காத்து கறுப் பில்' கோட்-சூட் போட்ட கதை சொல்லி.

"ஸ்டோரி டெல்லர்ங்கற கான்செப்ட் புதுசில்லை. ஆனா லும் இப்போது யாரும் பயன் படுத்தாத கான்செப்ட். நம்ம எல்லோரும் தாத்தா - பாட்டி சொல்லி கதை கேட்டோம். அது மாதிரி இப்போ வித்தியாசமா கோட் - சூட் போட வைச்சு, என்னை கதை சொல்ல வைத் திருக்கிறார்கள். வெறுமனே கதை சொல்லியா இருந்தாலும் கூட குரலில் ஏற்ற இறக்கம், தொனி எல்லாமே பர்ஃபெக்டா இருக்கணும்... எனக்கு நவீன நாடகத் துறையில் போதிய அனு பவம் இருப்பதால், இந்தக் கதை சொல்லி கேரக்டர் செய்ய எளி தாகவே இருக்கிறது. தொடர்ந்து ஏன் ஒரே மாதிரியான கேரக் டரில் நடிக்கிறீர்கள் என்று என்னிடம் பலர் கேட்கிறார் கள். உண்மையில் சொல்லப் போனால் என்னால் எந்த கேரக்டரையும் எளிதாக, அழகாகச் செய்ய முடியும். வாய்ப்புகள் வரும்போது இதனை நிரூபிப்பேன்" என் கிறார் இந்த 'நம்பிக்'கேயன்!

- முராரி

# கலகல தொடர்-13

மடித்துக் கட்டிய வேஷ்டி, ஜிப்பா, ஒரு மேல் துண்டு... இந்த உடையலங்காரத்தோடு, 'டலாஸ்' நகர விமான நிலையத்துக்கு வந்திறங்கிய ஒரே ஆத்மா பரமேஸ்வரன்தான்.

மடித்துக் கட்டிய வேஷ்டியைப் பிரித்துத் தொங்கவிட வேண்டும் என்கிற பிரக்ஞைகூட இல்லை. தோளில் ஒரேயொரு தொங்கும் பை. அது ஒன்றுதான் லக்கேஜ்!

பரக்கப் பரக்க விழித்துக் கொண்டே, என்னமோ சுனாமியில் தொலைந்த சமையற்காரர் மாதிரி வந்தவரை,

"அப்பா...." என்று

பிரியம்வதா பாய்ந்து வந்து கட்டிக் கொண்டாள்.

"அரே பரம்ஜீ... ஆவோஜீ..."

பல்பீர் சிங், பரமேஸ்வரனை, பிரியம்வதாவிடமிருந்து பிடுங்கி, தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டார். கிஷோர், சொல்லவும் முடியாத, மெல்லவும் முடியாத தவிப்புடன் மாமனாரைப் பார்த்தான்.

அப்பொழுதுதான் பிரியாவும் கவனித்தாள்.

பரமேஸ்வரனைச் சுற்றிலும் அமெரிக்க போலீஸ்.

"என்னப்பா இது?"

"ஆமாம்மா. உங்கம்மாவைக் கடத்தினவங்க என்னையும் கடத்திடக் கூடாதுன்னு இந்திய அரசும், அமெரிக்க அரசும் பேசி, எடுத்திருக்கற ஒப்பந்தம் இது. சென்னை ஏர்போர்ட்ல இருந்தே பலத்த பாதுகாப்பு எனக்கு. ஃப்ளைட் டாய்லட் உள்ளே கூட என்னைத் தனியா விட மாட்டேனுட்டாங்க."



பரமேஸ்வரன் துக்கம் தாளாமல், விமான நிலையத்தில், தரையில், பக்கப் பதிய சப்பணம் போட்டு அமர்ந்து 'ஓ' என அழ—

இங்கேயும் கேமராக்கள் பளிச்சிட்டன. 'மைக்'கைப் பிடித்துக் கொண்டு, நிருபர்கள் முண்டியடித்தனர்.

கிஷோரும், போலீசும் பரமேஸ்வரனை எப்படியாவது காருக்குள் கொண்டு போக முயற்சிக்க, பல்பீர் 'சடா'ரெனக் குனிந்து, பரமேஸ்வரனை அலாக்காகத் தூக்கிக் கொண்டு கிளம்பி விட்டார். இதெல்லாம் அவருக்கு ஜுஜுபி. ராஷ்மியையே தூக்கிக் கொண்டு பாங்க்ரா நடனமாடுபவராயிற்றே!

இப்படியொரு அமெரிக்க விஜயம் தனக்குக் கிட்டும் என்பதை கனவிலும் நினைத்துப் பார்த்ததில்லை பரமு.

ஆனால் -

'உங்கள் மனைவியைத் தேடிக் கண்டுபிடிக்க, உங்களது உதவியும் தேவைப்படுகிறது. ஆதலால், உடனே புறப்படவும். அமெரிக்கத் தூதரகம் உங்களது விசாவுக்கு ஏற்பாடு செய்யும்..'

- இப்படி அமெரிக்க ஜனாதிபதியிடமிருந்தே கடிதம்... டிக்கெட்

# மாம் ஃப்ரம் இண்டியா



கூட கையில் வந்துவிட்டது.

தினசரி செய்தித்தாள்களையும், பத்திரிகைகளையும் பிரித்தால் சுகந்தா கடத்தப்பட்ட செய்திகள்தான்.

சென்னை விமான நிலையத்திலேயே, பரமுவை வழியனுப்ப வரலாறு காணாத கூட்டம்.

முதலமைச்சர் ஜெயலலிதா சார்பில், பரமுவுக்கு சால்வை போர்த்தி, மலர்க் கொத்து அணிவித்தார்கள் அமைச்சர்கள் ஓ.பன்னீர் செல்வமும், சி.பொன்னையனும்...

''தமது வாழ்த்துக்களைச் சொல்லச் சொன்னார் புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள். உங்கள் மனைவி கிடைக்கும் வரையில் தமிழகத்தின் எல்லாக் கோயில்களிலும் சிறப்பு பூஜைக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது...''

## ரத்தக் கடிதம்!

ஒரு தடவை எங்கேயோ வெளியூர் போனப்போ வீட்டுக்கு நிறைய முக மூடிகள் வாங்கிட்டு வந்தேன். அந்த முகமூடிகளை ஒரு தனி ரூம்ல அழகா அடுக்கி வச்சிருப்பேன். என் வீட்டுக்கு வர்றவங்க யாருமே அந்த ரூமுக்குள்ள போக மாட்டாங்க... அவ்வளவு கொடூரமான முகமூடிகள். ஒருநாள் எங்க வீட்ல திடீர்னு ஒரு பெரிய சத்தத்தோட கரண்ட் போயிடிச்சி... என்ன ஏதுன்னு பார்த்தா... அந்த முகமூடி ரூமோட சுவர் அப்படியே ரெண்டா பிளந்து இருந்தது. அங்கிருந்த ஒரு முகமூடியில ஏகப்பட்ட லெட்டர்ஸ் இருந்தது. அதுல முழுக்க ரத்தக் கையெழுத்து. எல்லாரும் சொன்னாங்க... உங்களை மிரட்டறதுக்கு யாரோ செஞ்ச வேலை இதுன்னு... சில பேர் சொன்னாங்க.. ரத்தக் காட்டேரி

அவர்கள் சொல்லி முடித்து நகரும் வரை காத்திருந்த எதிர்க்கட்சியைச் சேர்ந்த மு.க. ஸ்டாலினும், ஆற்காட்டாரும் பரமேஸ்வரனுக்கு மாலை அணிவித்து, "வெற்றியுடன் திரும்பி வாருங்கள். மறத்தமிழ் மீது ஆணையாக, தங்கள் மனைவி கிடைப்பாள் என்று கலைஞர் தங்களிடம் கூறச் சொன்னார்" என முழங்க...

நடுவில் தயாநிதி மாறன் விறுவிறுவென வந்து, பரமுவின் கரத்தில் ஒரு செல் ஃபோனைத் திணித்து...

"என்ன வேணுமானாலும் ஃபோன் செய்யுங்க. இதுல 'இன்டர்நேஷனல் ரோமிங்' வசதி இருக்கு" எனச் சொல்லி பரமேஸ்வரனின் கரத்தைப் பிடித்துக் குலுக்கினார்.

இன்னும் வைகோ, இல.கணேசன், வீரமணி, நல்லகண்ணு, ஜி.கே.வாசன்... இப்படி மிகப்பெரிய கும்பலே நெருக்கியடிக்க...

இடையில் ராமதாஸ், பரமேஸ்வரனின் கன்னத்தில் வழிந்த கண்ணீரை, தமது மேல் துண்டால் ஒற்றி, பரிவுடன் கூறினார்.

"எப்படியும் தாங்கள் மனைவியுடன் திரும்பி வருவீர்கள். வந்தவுடன் பரமேஸ்வரன் என்கிற உங்கள் பெயரை அகில உலகநாதன் என்றும், தங்கள் மனைவி சுகந்தா அம்மையாரின் பெயரை, நறுமண நாயகி என்றும் மாற்றிக் கொள்ளுங்கள். இது என் அன்புக் கட்டளை."

அவர் இப்படிக் கூறியதும், அவருடன் வந்திருந்த பத்து பேர், 'செம்மொழி வாழ்க; நறுமண நாயகியைத் தேடிச் செல்லும் அண்ணன் அகில உலகநாதன் வாழ்க... வைத்தியர் அய்யா வாழ்க..' என்று கோஷமிட்டனர்.

பரமேஸ்வரனுக்கு அப்பொழுதே வயிற்றைக் கலக்கியது.

'செக்கிங்'குக்காக உள்ளே போகும்போது கூட, நாலைந்து பேர் வியர்க்க, விறுவிறுக்க இவர் பின்னால் ஓடி வந்தனர்.

"சார்... சார்..."

"நீங்கள்லாம்..."

"தொலைக்காட்சி ஸீரியல் ப்ரொடியூசர் சார். இவர் டைரக்டர். திரைக்கதை, வசனம் இதோ.. இவர்தான் சார், உங்க கைய, காலா நினைச்சு கும்பிடறோம். உங்க மனைவி கடத்தப்பட்ட சம்பவத்தை மெகா சீரியலா எடுக்கலாம்னு இருக்கோம். வேற யாருக்கும் நீங்க கொடுக்கக் கூடாது."

ஸ்தம்பித்து நின்றார் பரமேஸ்வரன்.

"என் பெண்டாட்டி தொலைஞ்சு பத்து நாள்தாம்பா ஆறது. எப்படியும் சீக்கிரம் கிடைச்சுடணும்னு பகவானைப் பிரார்த்தனை செய்யறேன். இதை வச்சு, மெகா ஸீரியல்னா.."

"அதெல்லாம் பின்னிடுவோம் சார். ஸ்டோரி அழுத்தமா இருக்கணும். அவ்வளவுதான். அமெரிக்காவுலேயே கூட வந்து ஷூட் பண்ணத் தயாரா இருக்கோம். ஹீரோயின் தொலைஞ்சிடுவா இல்லையா? அப்ப, அப்படியே ஹீரோ, தன் கேர்ள் ஃபிரண்டோட..."

"எனக்கு அப்படி யாரும் கிடையாதே.. என் சுகந்து ஒருத்திதான் என்னோட கேர்ள் ஃபிரண்ட்..."

"நோ பிராப்ளம் சார். ஹீரோயினுக்கு டூயல் ரோல் கொடுத்துடலாம். ஒண்ணு தொலைஞ்சு போன மனைவி. இன்னொருத்தி ஹீரோவோட கேர்ள் ஃபிரண்ட். அது ஏன் அப்படின்னா, அமெரிக்கா வரைக்கும் வந்து ஷூட் பண்ணப் போறோம். வெறுமே ஒத்தை ஆம்பிளைய மாத்திரம் தெருவுல நடக்கறாப்பல காட்டினா இன்ட்ரஸ்டிங்கா இருக்காது சார். கூட ஒரு பொண்ணும் சுத்தணும். நடுநடுவே அழணும்; சண்டை போடணும். லேகூஸ்



உங்க வீட்டுக்குள்ள இருக்குன்னு... இந்தச் சம்பவம் நடந்த புதுசுல ராத்திரி நேரம் ரொம்ப திகிலான நேரமா இருந்தது. அப்புறம் பழகிடுச்சு. ஆனா இதுவரைக்கும் அந்த சுவர் ஏன் வெடிச்சது, யார் ரத்தத்தால எழுதுன லெட்டர்ஸை அங்க வைச்ச துங்கறது தெரியல...

- கராத்தே ஹுசைனி

சென்டிமென்ட்.." கொஞ்சம் விட்டால் அவர்கள் அங்கேயே தேங்காய் உடைத்து, பூஜையை ஆரம்பித்து விடுவார்கள் போல..

இதில் டைரக்டர் சமிக்ஞை காட்ட, ப்ரொடியூசர் தமது தோல் பையைத் திறந்து, ஆயிரத்து ஒரு ரூபாய்க்கு செக் எழுதி நீட்டினார்.

"அக்ரிமெண்ட்டை தயாரிச்சு, ஈமெயில்லே அனுப்பறோம். உங்க மெயில் ஐடி..."

அவர்களிடமிருந்து பிய்த்துக் கொண்டு வருவதற்குள் பரமேஸ்வரனுக்கு, அவரது அம்மா புகட்டிய செவ்வெண்ணெய் வெளியே வந்து விடும் போல...

விமானத்தில் வேறு விதமான பிரச்னை.

பரமேஸ்வரனுக்கு இருபுறமும் அமெரிக்கக் காவல் படையைச் சேர்ந்தவர்கள்.

அவருக்கென்று வந்த உணவு வகைகளையும், காபி, டீ ஏன், தண்ணீரைக் கூட இந்த அதிகாரிகள் கொஞ்சம் சாப்பிட்டுப் பார்த்து விட்டுத்தான் கொடுத்தனர்.

பரமுவுக்கு யார் எச்சில் பண்ணினாலும் பிடிக்காது. இங்கே, இவர்கள் சபரி மாதிரி, கடித்து, கடித்துப் பார்த்துவிட்டு, ஓ.கே. புரொஸீட் என்றால்...

"திஸ் இஸ் இன்டாலரபிள்..."

பரமு அழமாட்டாக் குறையாய்ச் சொல்ல, விமானப் பணிப்பெண் ஒருத்தி, செல்லமாய் அவரது முதுகைத் தட்டிக் கூறினாள்.

"எல்லாம் உங்க பாதுகாப்புக்காகத்தான் மிஸ்டர் பினம் பேஷ்வர். உங்க மனைவியக் கடத்தினவங்க யாரு, எங்கேயிருக்காங்கன்னு தெரியற மட்டும் உங்களை பத்திரமாப் பாதுகாக்க வேண்டியது எங்க கடமை. நீங்க இப்ப அமெரிக்க விருந்தாளி. சந்தோஷமா இருங்க."

கண்களைத் துடைத்தபடி, இந்தப் பக்க அதிகாரி கடித்துத் தரும் ரொட்டியை மென்று, அந்தப் பக்கமுள்ளவர் குடித்து விட்டுத் தரும் தண்ணீரைக் குடித்து...

"சுகந்தி... எத்தனை நாளைக்கு, தட்டு சரியா அலம்பலேன்னு உன்னை விரட்டியிருக்கேன். தம்ளர் தண்ணியில விரல் பட்டுடுத்துன்னு கானிங்க நர்த்தனமே ஆடியிருக்கேன். கோவிச்சுக்காதேடி கண்ணே.. நான் திருந்திட்டேன். நீ திரும்பி வா..."

இப்படி நொந்து, நூலாய் அமெரிக்காவில் கால் பதித்த அப்பாவைப் பார்த்து, அப்பொழுதுதான் ப்ரியா கேட்டாள்.

"என்னப்பா இது. கட்டின வேஷ்டியோட வந்து இறங்கறேள். எப்படி ஃப்ராங்பர்ட் குளிரைத் தாங்க முடிஞ்சுது. ஒரு செட் பேண்ட், ஒரு கோட் கொண்டு வந்திருக்கலாமே.."

பரமேஸ்வரன் தேவதாஸ் கணக்கில் சிரித்தார்.

"ரிடையரானதுக்கு அப்புறம் பேண்ட், கோட், டை இதெல்லாம் எதுக்குன்னு உங்கம்மா, எவர்சில்வர்காரன்கிட்ட போட்டு நாலு சிந்தாமணி டப்பா வாங்கி, உன் கல்யாணத்துல சீரா வச்சாளா. அதுக்கு அப்புறம் வேஷ்டி, ஜிப்பாதான். அதுகூட எங்கே போகணுமானாலும் அவதானே எனக்காகப் பார்த்துப் பார்த்து எடுத்து வைப்பா..."

அவர் மீண்டும் புலம்ப, பல்பீர் அவரைத் தோளோடு தோள் சேர்த்தணைத்துக் கொண்டு, மருமகனிடம் விஷயத்தைக் கேட்டுத் தெரிந்துகொண்டு குதிக்கிறார்.

"அரே பையா கிஷோர். வண்டிய எடு. நீயும் நானுமாப் போய் பரம்ஜிக்கு டிரஸ் வாங்கிட்டு வருவோம்..."

அவரது வார்த்தைகளில் புல்லரித்துப் போய் அழுகிறாள் பிரியா.

'அடடா... இந்த அருமையான காட்சியைப் பார்க்க அம்மா கொடுத்து வைக்கவில்லையே...'



## ஆவிப் பெண்!

நான் 'ஷாக்' படம் பண்ணினதே ஒரு திகிலான அனுபவம்தான். அந்தப் படத்துல வர்ற 'ஆவி புகுந்த பெண்' கேரக்டரை மோல்டு பண்றதுக்காக பல கிராமப் பகுதிகளுக்குப் போய், அந்த மாதிரி ரியல் கேரக்டர்ஸை வாட்ச் பண்ண வேண்டியிருந்தது. அப்போ அந்த மாதிரி கேரக்டர்ஸ் பண்ற சேஷ்டைகள், நடவடிக்கைகள் எல்லாவற்றையும் பார்த்து ரொம்பவே மிரண்டு போயிருந்தேன். அப்போ உடுமலைப்பேட்டைல ஷூட்டிங் நடந்துட்டு இருந்தது. அந்த ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு திடீர்னு ஒரு பெண் ஓடிவந்து பயங்கரச் சத்தத்தோட அலறுது... ஊளையிடுது... கீழே விழுந்து புரளுது... இதைப் பார்த்து யூனிட்டே மிரண்டுடிச்சி... என்னன்னு விசாரிச்சா அந்தப் பெண்ணுக்குள்ள ஏதோ ஒரு ஆவி புகுந்து இருக்காம்... அந்தப் பெண்ணோட சத்தமும், அலறலும் இப்போ நினைச்சாலும் மனசு திக்திக்னு அடிக்குது.

- நடிகர் பிரஷாந்த்

பரமேஸ்வரனுக்கு அமெரிக்கா வந்து இறங்கியதிலிருந்து நின்று ஒரு தம்ளர் காபி குடிக்க முடியவில்லை.

போலீஸ், அவரை ஜீப்பில் ஏற்றிக் கொண்டு ஏரியா ஏரியாவாகச் சுற்றியது. கூடவே நகமும் சதையும் மாதிரி பல்பீரும்.

"கவலையேபடாதே. உன் மனைவி கிடைத்த பிறகுதான் நான் மறுபடி தாடியை எண்ணெய் போட்டு சீவப் போகிறேன். அதுவரைக்கும் தொடமாட்டேன்."

பல்பீர்சிங் பாஞ்சாலி மாதிரி சபதமிட்டார். போதாக்குறைக்கு வீட்டில் இருந்த நேரமெல்லாம் பரமேஸ்வரனைப் பாடச் சொல்லி வற்புறுத்தினார்.

"இந்த சோகத்துல நான் எப்படி சம்பந்தி பாடுவேன்.."

"நோ... நோ... இப்பத்தான் பாடணும்... நான் வேணுமானா ஆர்மோனியம் வாசிக்கறேன்.".

பரமேஸ்வரன் துக்கம் தொண்டையை அடைக்க, அடிக் குரலில் சோகத்தைப் பிழிந்து பாட....

பல்பீர்சிங் அவ்வப்போது பரமேஸ்வரனின் முகாரியையும், சுப பந்துவராளியையும் எட்டிப் பிடிக்க முயன்று, அது முடியாமல் போகும்போதெல்லாம், ஒரு கையால் தன் காதையே பொத்திக் கொண்டு பஞ்சாபியில் கத்த...

அது ஓர் அபூர்வக் கலவையாக இருக்க... காவலுக்கு நிற்கும் போலீசும், பரமேஸ்வரனைப் பேட்டி எடுக்க வந்த தொலைக்காட்சியாளர்களும், இந்த சோகத்தில் உருகிப் போய் அழத் தொடங்கி விட்டார்கள்.

அத்தனை ஏன், ஒரு சேனல், இதை மிக அழகாக ஒளிபரப்பவும் செய்தது.

'காதலை இதுவரையில் யாரும் இப்படி வெளிப்படுத்தவில்லை...'

'ஓர் இந்தியரின் காதல் சோகம்...'

'இந்த வருடத்தின் மிகச் சிறந்த காதல் இசைக்கு ஓர் இந்தியர் சிபாரிசு செய்யப் பட்டிருக்கிறார்...'

பரமேஸ்வரனின் புகழ் மானாவாரியாய்ப் பரவி, அன்று தொலைக்காட்சிக்கென்றே, பிரத்யேகமாய் அவர் பாட....

ஜெனட்டின் தலையில், காய்ச்சிய எண்ணெயை வைத்துப் 'பரபர'வெனத் தேய்த்துக் கொண்டிருந்த சுகந்தா, தனக்கு மிகவும் பரிச்சயமான குரல் கேட்டு, குலுங்கி நிமிர்ந்தாள்.

டி.வி.யில் ஏதோ ஒரு மியூசிக் சேனலில் வட்ட வடிவ மேடையில், ஏகப்பட்ட வாத்தியக்காரர்களுக்கு நடுவில், முழு சூட் கோட் அணிந்து, பரமேஸ்வரன் பாடிக் கொண்டிருந்தார்!

"ராதே உனக்கு கோபம் ஆகாதடீ... காதலியே தவறேது செய்தேன்..."

சுகந்தா விழிகள் வியப்பில் விரிய, டீ.வி.யையே உற்றுப் பார்த்தாள். அவளையுமறியாமல் கண்களில் காதலும் கண்ணீரும் போட்டியிட்டு, சின்னத் திரையையே மறைத்தது.

(தொடரும்)





# ஆவிகளுக்கு கால் உண்டு!

லேட்டஸ்டாக நடந்த தொடர் கொலைகள், மர்மமான இறப்புகள், பெரிய கிரிமினல்களின் ஜாதகம், பிரபலமானவர்கள் கொலை செய்யப்பட்ட பின்னணி... இப்படிப் பல க்ரைம் கதைகளின் என்சைக்ளோபீடியாவாக இருக்கும் தளம் crimelibrary.com. பல சர்வதேச கிரிமினல் வழக்குகளின் லேட்டஸ்ட் நிலவரம் சுடச்சுட கிடைக்கிறது. ஆராய்ச்சியாளர்களுக்கும், மாணவர்களுக்கும் மிக உபயோகமான தளம். (ஒரு பக்கத்தில், காணாமல் போன குழந்தைகள், புகைப் படங்களில் வெள்ளந்தியாய் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள்).

பேய்களைப் பற்றி, பேய்த்தனமாக ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்கிறது ghostresearch.org 'நான் என் ஃப்ரெண்டு கூட போட்டோ எடுக்கறப்போ எங்ககூட இந்தப் பேயும் சேர்ந்து போஸ் கொடுத்துச்சு', 'நான் ஆத்துல குளிக்கறப்போ இந்தப் பேயும் நீராடுச்சு', 'அன்னிக்கு கோர்ட்டுக்கு கோட் போட்டுட்டு இந்த கோஸ்ட் வந்துச்சு'ன்னு சொல்லி, புகையா, ஆவி தெரியற புகைப்படங்களை பலர் அனுப்பி வைச்சிருக்காங்க இங்க. இத்தளம் மூலமா நமக்கு ஒரு உண்மை (?) தெளிவாகுது. அதாவது சில ஆவிகளுக்கு கால் உண்டு.

'உங்களின் பிறந்த தேதியைக் கூறுங்கள். நீங்கள் இறக்கப் போகும் தேதியைத் தருகிறோம்' என்று திகிலைக் கிளப்பும் தளம் www.deathclock.com 'உங்களுக்கான இறப்பு எங்கோ வாழ்ந்து கொண்டிருக்கிறது. இந்த பூமி உங்கள் இறப்பிற்கான பிறப்பைத் தரும்' என தத்துவங்களை வேறு தருகிறார்கள். இதில் நடத்தப்பட்ட ஒரு சர்வே... 'நீங்கள் எப்படிப்பட்ட மரணத்தை விரும்புகிறீர்கள்?' பதிவான எண்ணங்கள் : 10,24,288. அதில் ஹார்ட் அட்டாக்கும், விபத்தும் இரண்டாவது, மூன்றாவது இடங்களைப் பிடித்திருக்கின்றன. கேன்சர், ஹெச்.ஐ.வி., ஸ்ட்ரோக் எல்லாம் கூட பட்டியலில் இருக்கின்றன. ஆனால் முதலிடம் என்னவோ, இவை தவிர வேறு எப்படியாவது இறக்க வேண்டும் என்பதற்குத்தான்!

- ப்ரௌஸர்

**வலைபாயுதே**



## அமரர் கல்கி

# நிலவறை திகில்!

**வ**ந்தியத்தேவன் அந்த நிலவறையைச் சுற்றிச் சுற்றி வந்தான். ஒரு மூலையில் கிடந்த மணி மகுடங்களைத் தொட்டுப் பார்த்தான். இன்னொரு பக்கத்தில் கிடந்த ரத்தின ஹாரங்களைக் கையில் எடுத்துப் பார்த்தான். அவற்றைப் போட்டுவிட்டு இன்னொரு பக்கம் சென்று செப்புப் பானையில் நிறைந்திருந்த முத்துக்களில் கைகளை விட்டு அளைந்தான். வேறொரு பானையில் கையை விட்டுப் பொற்காசுகளை அள்ளிச் சொரிந்தான். ஒரு மூலையில் தரையில் பளபளவென்று ஏதோ பரவலாக ஜொலிப்பதைக் கண்டு அங்கே சென்றான். முதலில் என்னவென்று தெரியவில்லை. பிறகு, குனிந்து உற்றுப் பார்த்தான். ஐயோ! ஆண்டவனே! அது ஓர் எலும்புக் கூடு! ஒரு காலத்தில் சதையும் இரத்தமும் தோலும் ரோமமும் மூக்கும் முகமும் கண்ணுங் காதுமாக இருந்த மனித உடலின் எலும்புக் கூடு!

'ஆ! இந்த எலும்புக் கூடு அசைகிறதே! உயிர் பெற்று எழுகிறதே! பொற்காசுகளைப் போலவே சத்தமிடுகிறதே! நமக்கு ஏதோ சேதி சொல்ல எழுந்திருப்பதாய்க் காண்கிறதே...' வல்லவரையனுடைய உடம்பிலிருந்த ஒவ்வொரு ரோமமும் குத்திட்டு நின்றது. தனக்குப் பைத்தியந்தான் பிடித்துவிட்டது என்று நினைத்தான். 'சீச்சீ! எலும்புக்கூடு எழுந்திருக்கவில்லை. அதற்குள்ளேயிருந்து ஒரு பெருச்சாளி ஓடி வருகிறது! நம் கால்மீது விழுந்து ஓடுகிறது. ஆம்; இப்போது பார்த்தால் எலும்புக் கூடு தரையிலேதான் விழுந்து கிடக்கிறது. ஆனால் அது நமக்கு ஒரு சேதி சொல்லுகிறது என்பது உண்மை. 'ஓடிப்போ! இங்கே தாமதியாதே! நானும் உன்னைப்போல் உடல் படைத்த மனிதனாயிருந்தேன். இங்கு வந்து அகப்பட்டுக் கொண்டேன். இங்கேயே மாண்டு மடிந்தேன். இப்போது எலும்புக் கூடாகக் கிடக்கிறேன். ஓடிப்போ!' என்று அது நம்மை எச்சரிக்கிறது. இங்கிருந்து உடனே தப்பிச் சென்றோமோ, பிழைத்தோம். இல்லாவிட்டால் அதோகதிதான்; அந்த மனிதனுக்கு ஏற்பட்ட கதிதான்.'

வந்தியத்தேவன் அந்த நிலவறையிலிருந்து வெளியேற எண்ணினான். ஆனால் வெளியேறும் வழிதான் தெரியவில்லை. வந்த வழியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நிலவறையின் ஓரமாக எங்கே போனாலும் இருள் என்னும் பூதம் வாயைப் பிளந்து கொண்டிருந்தது. கீழே பார்த்தால் அதல பாதாளப் படுகுழியாகத் தோன்றியது. ஏறி வந்த படிக்கட்டு எங்கேயோ ஓரிடத்தில் இருக்கத்தான் வேண்டும். அதைக் கண்டு பிடிக்க வந்தியத்தேவன் மேலும் முயன்றான். தேடித் தேடி அலைந்தான்.

எப்படியாவது இந்த நிலவறையை விட்டு இப்போது வெளியேறிவிட்டால் போதும்; பிறகு இந்த இருள் மாளிகையையும் இந்தத் தஞ்சாவூர்க் கோட்டையையும் விட்டு வெளியேறிவிட வேண்டும். பின்னர் இத்தகைய தொல்லைகளில் அகப்பட்டுக் கொள்ளவே கூடாது.



ஆகா! கதவு திறந்து விடும் ஓசை! மறுபடியும் காலடி ஓசை. இன்றைய இரவின் அதிசயங்களுக்கு முடிவே கிடையாது போலும்! அதிசயங்களுக்கு அளவில்லை. பயங்கரங்களுக்கும் எல்லையில்லை. இம்முறை வெகுதூரத்திலிருந்து அந்தக் காலடிச் சத்தங்கள் கேட்டன. இரண்டு பக்கங்களிலிருந்தும் வருவதாகத் தோன்றியது. வந்தியத்தேவன் காது கொடுத்துக் கவனமாகக் கேட்டான். பொக்கிஷ நிலவறைக்கு நாலு புறமும் சூழ்ந்திருந்த இருளைக் கிழித்துக் கொண்டு பார்ப்பவனைப்போல் உற்றுப் பார்த்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் எதிர்பார்த்தது போலவே அபூர்வமான காட்சியைக் கண்டான்.

- பொன்னியின்
செல்வனிலிருந்து....
வானதி பதிப்பகம்



நடிகை அசினை ஹீரோக்கள் அனைவரும் 'மலபார்' என்றுதான் அழைக்கின்றனர். அவரும் ஒவ்வொரு நடிகருக்கும் மலையாளத்தில் தனித்தனி பட்டப் பெயர் வைத்தே கூப்பிடுகிறார்.

'ஆட்டோகிராப்' படம் மாதிரி தான் நடித்து வரும் 'கனா கண்டேன்' படமும் வெள்ளி விழா கொண்டாட வேண்டுமென்று, தங்களது குலதெய்வமான குருவாயூரப்ப னுக்கு நேர்ந்து கொண்டிருக்கிறார் கோபிகா. இதனை படப்பிடிப்பில் அனைவரிடமும் சொல்லிச் சொல்லி பூரித்துப் போகிறார்.

மணிரத்னம் அடுத்த படத்துக்குத் தயாராகிவிட்டார்; ஹீரோ விஜய்.

அந்நியனுக்குப் பிறகு சதா தனது சம்பளத்தை முப்பது லட்சமாக உயர்த்தி விட்டார். கதை, டெக்னீஷியன்கள் என்று எல்லா விஷயங்களும் அவருக்குத் திருப்தி தந்தால் மட்டுமே கால்ஷீட்.



* ஸ்கூல்



* குருவாயூர்

சிநேகா பார்வையற்றவர்களுக்கான பள்ளி ஒன்றைத் திறக்கும் முயற்சியில் தீவிரமாக இறங்கி யிருக்கிறார்.

சந்திரமுகிக்குப் பிறகு நயன் தாராவின் ரேஞ்ச் உயர்ந்து விடும் என்பதால், தயாரிப்பாளர்கள் இப்போதே அவரை மொய்க்கத் தொடங்கிவிட்டனர். இது தான் சமயமென்று அவரும் வருகின்ற அட் வான்ஸையெல்லாம் வாங்கிப் போட்டு வருகிறார்.



* அடுத்த ஜோடி!

ஏ.எம். ரத்னம் தனது மகன் ரவிகிருஷ்ணா விடம் 'இனி எக்காரணம் கொண்டும் டபுள் ஹீரோ சப்ஜெக்டில் நடிக்கக் கூடாது' என்று கண்டிஷன் போட்டுள்ளார்.

ரஜினியின் அடுத்த படத்தில் எப்படியாவது



* மலபார்



* முப்பது லட்சம்



* அட்வான்ஸ்

ஜோடி சேர்ந்துவிட வேண்டுமென்று விரும்புகிறார் த்ரிஷா. அதற்கான முயற்சிகளில் இப்போதே தீவிரமாகவும் இறங்கிவிட்டார்.

டி.வி. சீரியல் நடிகையாகி விட்ட சுகன்யா, விரைவில் இசையமைப்பாளராக அவதாரமெடுக்கிறார். அதற்கான ஆரம்ப கட்ட பேச்சுவார்த்தை நடந்து வருகிறது.

குரு சிஷ்யர்களான பாலா, அமீர் இருவரும் தொடர்ந்து ஒரே மாதிரியான மனநலம் சம்பந்தப்பட்ட சப்ஜெக்ட்டுகளையே தொடுவது கோலிவுட்டில் பேச்சாகிவிட, தங்களது பாணியை மாற்றிக் கொள்ள முடிவெடுத்திருக்கின்றனர்.

- மதுமிதா

# த்ரிஷாவின் தீவிரம்!

இந்திரா சௌந்தர்ராஜன்... திகில், அமானுஷ்யத்தை அடிப்படையாகக் கொண்டு கதைகள் எழுதுவதில் எக்ஸ் பர்ட். மாத நாவல்கள், டீ.வி சீரியல் என்று பிசியாக இருப்பவரிடம் பேசி னோம்...

**பேய்க் கதைகளை மக்கள் விரும் பிப் படிப்பதற்கு என்ன காரணம்?**

"ஒளித்து வைக்கும் ஒரு பொரு ளைத் தெரிந்துகொள்ளத் துடிப்பது மனிதனின் இயல்பு. அந்த வகையில் நம் புலன்களுக்கு அகப்படாத பேய், பிசாசு போன்றவற்றைப் பற்றி ஒருவன் தெரிந்துகொள்ள ஆசைப்படுவது இயல்பே. அடிப்படையில் மனிதன் உணர்ச்சிபூர்வமானவன். அவனது உணர்ச்சிகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று தைரியம், மற் றொன்று பயம். தைரியம் மட்டுமே முழுமையாகக் கொண்ட மனி தனையோ அல்லது பயம் மட்டுமே முழுமையாகக் கொண்ட மனி தனையோ பார்க்க முடியாது..."



# "பேய் இருக்கிறது!"

**உங்களுடைய கதைகளில் ஆன் மிகமும், திகிலும் இணைகின்றன. இது எப்படி சாத்தியமாகிறது?**

"உண்மைதான். எனது கதைகளைப் பொறுத்தவரையில் பயத்தையும் ஆன் மிகத்தையும் கலந்தே எழுதுகிறேன். பயத்தை ஒரு பாஸிட்டிவ் உணர்ச்சி யாக மாற்றிக் காட்ட நான் முயற்சி செய்கிறேன். இப்படிச் செய்வதன் மூலம் கதையில் ஒருவித நெகிழ்ச்சியைக் கொண்டு வருவது சாத்தியமாகும். 'ருத்ர வீணை', 'விடாது கருப்பு' போன்ற கதை களில் ஆன்மிகம் ஒரு முக்கிய அங்க மாக இருப்பதை நீங்கள் பார்க்கலாம். ஒருவேளை இதனைப் படிப்பவர்கள் நாத்திகர்களாக இருந்தால்கூட 'அட இப்படி இருந்திருந்தால் நன்றாக இருக் குமே' என்று யோசிக்கும்படிச் செய்ய வேண்டும்."

**சமூக நாவல்களைப் போல பேய்க் கதைகளுக்கு அங்கீகாரம் கிடைக்கிறதா?**

"சமூக நாவல்கள் உணர்ச்சிபூர்வமாக எழுதப்படுபவை. இத் தகைய நாவல்கள்தான் இலக்கியமாக அங்கீகரிக்கப்படுகின்றன. நான் அவற்றை ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் அதற்காக பேய்க் கதை எழுத்தாளன் என்று ஒரு வரை இளக்காரமாகச் சொல்வது தவறு."

**பொதுவாக, திகில் நாவல்களில் கதா பாத்திரங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில்லை என்கிற குற்றச் சாட்டு குறித்து...?**

"ஹிட்ச்காக்கின் திகில் படங்களை எடுத்துக்கொள்ளுங்கள். அந்தப் படங் களில் நடித்த கதாபாத்திரங்கள் நம் நினை வில் தங்காவிட்டாலும் அவற்றை உரு வாக்கிய ஹிட்ச்காக் இப்பொழுதும் நினைக்கப்படுகிறார், போற்றப்படுகிறார். இது எப்படி? அவருக்கு எப்படி ஒரு

பொருளை ஒளித்து வைப்பது. எப்படி பயத்தை ஏற்படுத்துவது என்று தெரிந்திருந்தது. திகில் நாவல்களிலும் வலுவான கதாபாத்திரங்களை உருவாக்க முடியும்."

**திகில் கதைகள் மக்கள் மனத்தில் நீண்ட காலம் தங்கியிருக்குமா?**

"கட்டாயம். 'அரசியல் ஒரே மர்மதேசமாக மாறிவிட்டது' என்று மக்கள் வெகு இயல்பாக உதாரணப்படுத்திச் சொல்லி வருகிறார்கள். அப்படியானால் அந்தக் கதை மக்களிடம் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது என்றுதானே அர்த்தம்?"

**சரி, உங்களுக்கு ஆவி நம்பிக்கை இருக்கிறதா?**

"இதற்கு விடையாக ஒரு சிறிய சம்பவத்தைச் சொல்கிறேன். ஒருநாள் நான் உறக்கத்தில் இருந்தபொழுது நடுஇரவில் என் மனைவி என்னை எழுப்பிவிட்டார். 'உங்க பாட்டி வந்திருந்தாங்க. இங்கேதான் உட்கார்ந்திருந்தாங்க. திடீர்னு காணலை' என்று சொன்னார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் என் பாட்டி இறந்துவிட்டதாக எனக்குத் தொலைபேசி அழைப்பு வந்தது. இந்தச் சம்பவத்தை என்னால் தற்செயலாக எடுத்துக் கொள்ள முடியவில்லை."

**உண்மையில் பேய் இருக்கிறதா?**

"இருக்கிறது. ஆனால் நாம் கதைகளில் படிப்பதுபோல், திரைப்படங்களில் பார்ப்பதுபோல் இருக்குமா அல்லது வேறுவிதமாக இருக்குமா என்று இட்டவட்டமாகச் சொல்ல முடியாது."

**பேய் இருக்கிறது எனும் பட்சத்தில் நாம் அதோடு தொடர்புகொள்ள முடியுமா? ஆவிக்கும் மனிதனுக்கும் இடையில் செயல்படும் மீடியம் போன்றவற்றில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா?**

"உங்களைப் போலவே நானும் இதைப் பற்றி பத்திரிகைகளில் படித்திருக்கிறேன். ஆனால் இதுவரை அது போன்ற ஒரு இடத்துக்கு நான் சென்றதில்லை. மீடியம் போல செயல்படும் ஆட்களையும் அந்தத் துறையில் ஈடுபடுபவர்களையும் சந்தித்தது கிடையாது. இதைப்பற்றி எனக்குத் தெரியாது."

**- மருதன்**

# வழிமறித்த யானை!

போன வருஷம் ஒரு இசை நிகழ்ச்சிக்காக சிலோன் போயிருந்தேன். நிகழ்ச்சி நடக்குற இடத்துக்கு கார்ல போனோம். போற வழி முழுக்க காட்டுப் பகுதி. போய்க்கிட்டே இருக்கறப்போ திடீர்னு தூரத்துல ஒரு யானைக் கூட்டம். அப்பவே எனக்குப் பயம் வந்துடுச்சி. கார்ல என்கூட வந்தவங்ககிட்ட விசாரிச்சா, 'இங்க அப்பப்போ யானைக் கூட்டம் வரும்... சில சமயம் நம்மளைத் தாக்கும்... சில சமயம் அமைதியாப் போயிடும்'னு ரொம்ப கேஷுவலாச் சொல்ல... அவ்ளோதான்... எனக்கு மூச்சே நின்னுடும் போல ஆயிடுச்சி... சரி... காரை விட்டு கீழே இறங்கி, மறைவான பகுதிக்குப் போயிடலாம்னா அதுக்கும் வழி இல்ல... ஏன்னா வழியில எங்க வேணும்னாலும் கண்ணி வெடி இருக்கலாம்னு வேற சொல்லியிருந்தாங்க.

ஒரு வழியாக எல்லா யானைகளும் அமைதியா போயிடிச்சுங்க... அந்த அரை மணி நேரம்... என் வாழ்க்கைல மறக்க முடியாத திகில் நேரம்....!

- பாடகி மாலதி





• ஜெமினி, திரிலோக்குடன் நான்...

# ஜெமினி கேட்ட

'குழந்தையும் தெய்வமும்' படத்தை ஹிந்தியில் தயாரிக்கும் வேலை தொடர்பாக நான் பம்பாயில் இருந்தபோது, ஒருநாள் அங்கிருந்த எங்கள் அலுவலகக் கிளை மேனேஜர் சின்னான் மேனனோடு காரில் போய்க் கொண்டிருந்தேன். வழியில் ஒரு தியேட்டரில் காணப்பட்ட பேனர் என்னைக் கவர்ந்தது. நடிகர் கிஷோர்குமாரும் அவருடன் ஒரு சிறிய பையனும் இருப்பது போன்ற பேனர் அது.

"இது என்ன படம்?" என்று சின்னான் மேனனைக் கேட்டேன்.

"இது வேணாம் ஸார். படம் சுமாராத்தான் போவுது" என்று பதில் வந்தது. அந்தப் படம் 'தூர் கஹன்கி சாவோன் மே!'

எனக்கென்னமோ அந்த பேனரைப் பார்த்ததும், ஏதோ ஒரு வித்தியாசமான கதை இருக்கக் கூடும் என்று பட்டது.

பிறகு இன்னொரு நாள் எனக்குக் காரோட்டிக் கொண்டு வந்த யஷ்வந்த் என்ற மராட்டிய டிரைவரிடம் அந்தப் படம் பற்றிக் கேட்டேன்.

"படம் எப்படிப் போவுதுன்னு தெரியாது. ஆனா இது ஒரு மூங்கா கதை. அது மட்டும் தெரியும்" என்றார் யஷ்வந்த். 'மூங்கா' என்றால் ஊமை.

• கிருஷ்ணன், பஞ்சு



அந்தப் படத்தின் பிரிண்ட்டை வாங்க வேண்டும் என்று நான் சின்னான் மேனனிடம் சொன்னேன். ஆனால் அவர் அதை சீரியஸாக எடுத்துக்கொள்ளாமல் விட்டுவிட்டார்.

இதற்கிடையில் அந்த பிரிண்ட்டை வீனஸ் பிக்சர்ஸ் மேனேஜர் சுப்பிரமணியம் வாங்கிவிட்டதாகத் தகவல் கிடைத்தது. அதை அவர் தமிழில் படமாக எடுக்கப் போவதாகவும், அதற்கு வீனஸ் பிக்சர்ஸ் உதவி செய்யப் போவதாகவும் கேள்விப் பட்டேன்.

23 திரையுலக நினைவுகள்
அந்த நாள் ஞாபகம்

'வீனஸ்' கிருஷ்ணமூர்த்தி, ரத்னம் ஆகியோர் அந்த பிரிண்ட்டைப் போட்டுப் பார்த்த போது கிருஷ்ணமூர்த்தி சொன்னாராம்... "எம்.ஜி.ஆரை வச்சி எடுத்தாலும் ஒரு படம் ஓடாதுன்னா அது இந்தப் படமாகத்தான் இருக்கும்."

கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அப்படி உண்மையிலேயே சொன்னாரா என்று எனக்குத் தெரியாது. ஆனால் அப்படிச் சொன்னதாகச் சொன்னார்கள். அந்தப் படம் தமிழில் எடுக்கத் தகுதியில்லாதது என்ற தன் கருத்தை வலியுறுத்த அவர் அப்படிச் சொல்லியிருக்கலாம். எப்படியோ அந்தப் படத்தை வீனஸ் பிக்சர்ஸ் தமிழில் எடுக்கப் போவதில்லை என்பது புரிந்துவிட்டது.

அந்த நிலையில், நான் அந்த பிரிண்டை வாங்க ஆசைப்பட்டேன் என்ற விவரம் அவர்களுக்கு எப்படியோ தெரிய வந்தது. வீனஸ் மேனேஜர் சுப்பிரமணியம் என்னிடம் வந்தார்.

"பத்தாயிரம் ரூபாய் கொடுத்து நாங்கள் இதை வாங்கி விட்டோம். ஆனால் யாருக்கும் படம் திருப்தியில்லை. வீனஸ் பிக்சர்ஸ் உதவி ஏதும் கிடைக்கும் என்ற நம்பிக்கையில்லை. ஆகவே இதைத் தமிழில் எடுக்கப் போவதில்லை. மேலே ஐயாயிரம் போட்டு பதினையாயிரம் ரூபாய் கொடுத்தால் நாங்கள் இந்த பிரிண்ட்டை உங்களுக்குத் தந்துவிடத் தயாராக இருக்கிறோம்" என்றார்.

'சரி' என்று வாங்கி விட்டோம்.




# ஏவி.எம்.சரவணன்

# கேள்வி!

நான், என் சகோதரர்கள் முருகன், குமரன், அப்பச்சி, கிருஷ்ணன் - பஞ்சு, ஜாவர் சீதாராமன், ஏ.சி. திரிலோக சந்தர் எல்லோரும் ஒன்றாக அமர்ந்து அந்தப் படத்தைப் போட்டுப் பார்த்தோம்.

"சுத்த வேஸ்ட்" என்று ரத்தினச் சுருக்கமாகக் கருத்துச் சொன்னார்கள் கிருஷ்ணனும், பஞ்சுவும்.

"ஒரு குழந்தை சினிமாவில் பேசறான்னா அவன் அதிகமாப்


• ஏவி.எம். குமரன்


• ஜாவர் சீதாராமன்

# கதை கந்தல்!

எண்பத்தஞ்சாம் வருஷம் மதுரைக்கு டிராமாவுக்காகப் போனோம். அப்போ எங்க ஆர்ட்டிஸ்டுகளை மூணு கோச்ல பிரிச்சுப் போட்டுட்டாங்க. எல்லாரையும் அவங்கவங்க கோச்ல ஏத்தி விட்டுட்டு, நான் டிரெயின்ல ஏர்றதுக்குள்ள டிரெயினை எடுத்துட்டாங்க. எல்லாருடைய டிக்கெட்ஸூம் என் கையில இருக்கிறதால நான் அந்த டிரெயின்ல ஏறியே ஆகணும்ங்கற கட்டாயம்... ஓடி வந்து ரயில்ல தொத்தி ஏறிட்டேன். ஆனா என் துரதிர்ஷ்டம்! கதவை லாக் பண்ணிட்டாங்க... ஜன்னல் கம்பியைப் பிடிச்சிக்கிட்டே படியில தொத்திக்கிட்டு வர்றேன்... நெஞ்சு படபடக்குது... ஹெவியான ஸ்வெட்டிங் வேற... அவ்ளோதான் நம்ம கதைன்னு நினைச்சுட்டேன்... இதுல டிரெயின் ஆக்சிடெண்ட் பத்தின பேப்பர் நியூஸெல்லாம் வேற ஞாபகத்துக்கு வந்து மிரட்டுது. அடுத்த ஸ்டேஷன்ல வண்டி நின்ன பிறகுதான் கதவைத் திறந்து கோச்சுக்குள்ள போனேன்... அந்த அரை மணி நேர படிக்கட்டுப் பயணத்தை, சத்தியமா என்னால இன்னும் மறக்க முடியல.

– எஸ்.வி. சேகர்



பேசணும். 'எக்ஸாஜரேட்' பண்ணி குழந்தை கேரக்டர் இருந்தாத்தான் எடுபடும். "இவ்வளவு பெரிய வீட்ல நீங்க ரெண்டே பேர் தானா இருக்கீங்க.... நாங்க எங்க அனாதை ஆசிரமத்திலிருந்து எல்லாரும் இங்கே வந்துடறோம்... நீங்க ரெண்டு பேரும் அங்கே போயிடுங்க..." என்று களத்தூர் கண்ணம்மாவில் வயசுக்கு மீறிய பேச்சு பேசியதால்தான் அந்தக் காட்சி எடுபட்டது. நம்ம ஆடியன்ஸூக்கு அப்படித்தான் இருக்கணும். ஆனா இதில ஊமைப் பையனா காட்டினா எப்படி எடுபடும்?" என்று ஜாவர் சீதாராமன் கேட்டார்.

"எனக்கொரு ஐடியா! தோன்றுகிறது" என்று நான் ஜாவரிடம் கூறிவிட்டுத் தொடர்ந்தேன்.

"இந்த ஊமைப் பையனுக்கு நாம் ஒரு பின்னணியை உருவாக்க வேண்டும். ஏன் இவன் ஊமையானான் என்று ஒரு கிளைக்கதை உருவாக்கினால் சரியாகி விடும்."

சில வினாடிகள் யோசித்த ஜாவர், "அடடே... அற்புதமான ஐடியா... எனக்கு இது தோன்றவேயில்லையே... ஹாட்ஸ் ஆஃப் டு யு" என்று எழுந்து என் கைகளைப் பிடித்துக் குலுக்கினார்.

அருமையாக திரைக்கதை அமைப்பதில் ஜாவர் சீதாராமனை மிஞ்சியவர் இன்று வரை யாருமில்லை என்பது தான் என் கருத்து.

நான் சொன்ன ஒரு மெல்லிய யோசனையை அவர் தன் பாணியில் விரித்து, மிக அழகாகத் திரைக்கதை அமைத்தார். என் சகோதரர் குமரனும், ஜாவரோடு விவாதித்து திரைக்கதை சிறப்பாக உருவானதில் பெரும் பங்கு வகித்தார். அதே போல் ஏ.சி. திரிலோகசந்தரும் இந்த விவாதங்களில் கலந்துகொண்டு சிறப்பாகப் பணியாற்றினார்.

படத்துக்கு 'ராமு' என்று பெயர் வைத்தபோது, அதற்கு சில ஆட்சேபங்கள் கிளம்பின.

"ஏதோ டப்பிங் படத்தின் பெயர் போல இருக்கிறது" என்று சில நண்பர்கள் சொன்னார்கள். ஆனால் 'ராமு' என்ற பெயரையே வைப்பதில் நாங்கள் உறுதியாக இருந்தோம். அப்பச்சியிடம் இந்த விவாதம் போனபோது, 'நான்

உங்க விருப்பத்துக்கே விட்டுவிடுகிறேன். 'டப்பிங்' படம் போல தோணாதபடிக்குப் பேர் வையுங்க" என்றார்.

'ராமு' என்ற பெயரே முடிவானது.

படத்தின் பெயரை 'ராமு' என்று பெரிதாகப் போட்டு, கீழே 'ஒரு சின்னஞ்சிறு உள்ளத்தின் சோகக் கதை!' என்று விளம்பரப்படுத்தினோம்.

இந்தப் படத்தில் ஜெமினிகணேசன் மிகவும் விரும்பி ஆர்வத்துடன் நடித்தார்.



• 'ராமு' படத்தில்...

'ராமு' படத்தை நாங்கள் தயாரிப்பதற்குச் சில மாதங்கள் முன்பு என்னைச் சந்தித்த ஜெமினி கணேசன், "இப்போதெல்லாம் ஏன் என்னை உங்க படங்கள்ல போடமாட்டேங்கிறீங்க?" என்று உரிமையுடன் கேட்டார்.

"நீங்க 'களத்தூர் கண்ணம்மா'வின் போதே தொண்ணூறாயிரம் சம்பளம் கேட்டு, அப்புறம் பேரம் பேசி எழுபத்தையாயிரம் எங்ககிட்ட வாங்கின ஆர்ட்டிஸ்ட். இப்பல்லாம் நாங்க எங்க ஹீரோக்களுக்கு பத்தாயிரம், இருபதாயிரம்தான் தர்றோம். உங்க சம்பளம் எங்களுக்குக் கட்டுப்படியாகாது" என்றேன்.

"நீங்க இப்ப என்ன தர்றீங்களோ, அதையே எனக்கும் கொடுங்க... நான் நடிக்கிறேன்" என்று ஜெமினி தாமாக முன் வந்தார்.

அட்வான்ஸ் கொடுக்க நான் தயாரானபோது, "இன்னிக்குச் செவ்வாய்க்கிழமை, பரவாயில்லையா? இல்ல, நாளைக்குத் தர்றீங்களா?" என்று கேட்டார்.

பொதுவாக செவ்வாய்க்கிழமைகளில் பணம் வெளியே போகக்கூடாது என்று சென்ட்டிமென்ட் உண்டு.

'எனக்கு அதெல்லாம் பரவாயில்லை' என்றேன். அப்போது ராகு காலநேரம். ஜெமினி அதைச் சுட்டிக் காட்டியபோதும் 'பரவாயில்லை' என்று சொன்னேன்.

"எனக்கும் பரவாயில்லை. பணம் வரும் எந்த நேரமும் எனக்கு நல்ல நேரம்தான்" என்று அட்வான்ஸை வாங்கிக் கொண்டார்.

உண்மையிலேயே அது அவருக்கு நல்ல நேரமாகவே அமைந்தது. 'ராமு'வுக்காக அவர் அட்வான்ஸ் வாங்கியதும், தொடர்ந்து எட்டுப் படங்கள் அவருக்கு வேக வேகமாக 'புக்' ஆயின.

வாய்ப்பில்லாததால் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் மேக்அப் போடாமல் இருந்த பின்னர், ராமு படம் அவருக்குக் கிடைத்தது. அதில் தன் மிகச் சிறந்த நடிப்பை ஜெமினி வெளிப்படுத்தினார்.

குறிப்பாக, தமது மகன் ஊமை என்பது தெரிய வந்ததும் அப்படியே ஸ்தம்பித்துப் போய் சிலை மாதிரி நின்று ஒரு ரியாக்ஷன் தர வேண்டும் என்று டைரக்டர் திரிலோக் சொன்னதும் மிகச் சரியாக உள்வாங்கி ஜெமினி காட்டிய ரியாக்ஷனைப் பார்த்து நான் அங்கேயே அழுதுவிட்டேன்.

(தொடரும்)



# "சிங்கத்துக்

டிஸ்கவரி, நேஷனல் ஜியோகிராபி சேனல்களில் கலக்கிக் கொண்டிருக்கும் நம் ஊர்க்காரர் அல்போன்ஸ் ராய். இந்தியாவில், வனவிலங்குகள் குறித்த டாகுமெண்டரி எடுக்க வேண்டுமா? 'கூப்பிடு அல்போன்ஸ்ராயை' என்கிறார்கள். யானை, புலி, சிங்கம், சிறுத்தை என்று இவர் தனது மூவி கேமராவில் சுடாத மிருகமில்லை. தமது திகில் பயண அனுபவங்களை நம்மிடம் விவரித்தார் ராய்...

"பீகார் மாநிலத்தில், வனப் பகுதிகள் விளைநிலங்களாக்கப்பட்டதன் விளைவாக, அந்த வனப்பகுதிகளில் வசித்த ஏராளமான யானைகள், பீகாரை ஒட்டிய மேற்கு வங்காள நிலப்பகுதிக்கு வந்துவிட்டன. அங்கிருந்த பயிர்களை யானைகள் துவம்சம் செய்தன; கிராம மக்களுக்குத் தொல்லை கொடுத்தன. எனவே மேற்கு வங்காள அரசாங்கம், அந்த யானைகளைப் பிடித்து, வேலைக்குப் பழக்கி, பயன்படுத்தத் திட்டமிட்டது. அந்தப் பணியை, தமிழ்நாட்டைச் சேர்ந்த 'யானை டாக்டர்' என்று பிரபலமாக அறியப்பட்ட டாக்டர் கிருஷ்ணமூர்த்தியிடம் ஒப்படைத்தது.

யானைகளின் அட்டகாசம், யானைகளைப் பிடிப்பது, பழக்குவது எல்லாவற்றையும் படம் பிடித்துத் தரும் பணி எனக்குத் தரப்பட்டது. ஊர் மக்களிடம் முன் கூட்டியே தகவல் சொல்லி வைத்ததன் பலனாக, ஒருநாள் இரவு யானைகள் பயிர்களை நாசம் செய்து கொண்டிருப்பதாகத் தகவல் வந்ததையடுத்து, அந்த இடத்துக்கு விரைந்தோம். ஒரு பெரிய யானை வயல் வெளியில் கம்பீரமாய் நடந்து வந்து கொண்டிருந்தது. எங்கள் யூனிட்டின் இயக்குனரும், கேமரா உதவியாளரும் இரண்டு பிரகாசமான லைட்களைப் பிடித்துக்கொள்ள, நடுவே நான் கேமராவுடன் யானையைப் படம் பிடிக்கத் தயாரானேன். வெளிச்சம் பரவியதும், யானை எங்களைத் திரும்பிப் பார்த்தது. நான் கேமராவை ஓட விட்டேன். அடுத்த விநாடி, யானை எங்களை நோக்கி வேக

# "ஹலோ' சொன்னேன்!"

மாய் ஓடி வந்தது. யூனிட்காரர்கள் பயந்து ஓடினார்கள். நான் பின்னோக்கி நடந்த படியே படம் பிடித்துக் கொண்டிருந்தேன்.

யானை நெருங்கி வர, லைட்டைப் பிடித்துக் கொண்டிருந்த இருவரும் பயந்து ஓடிவிட்டனர். சேறும் சகதியுமான வயல் வெளியில் கால்கள் சிக்கிக்கொள்ள, நான் நடக்க மிகவும் சிரமப்பட்டேன். ஒரு கட்டத்தில் பின்னால் இருந்த வேலி என்னைத் தடுத்து நிறுத்த, நான் பக்கவாட்டில் நகரத் தொடங்கினேன். யானையோ முன்னேறிக்கொண்டே வந்தது. திடீரென்று கால்கள் சில்லிட்டன. பார்த்தால், குளம் போல தண்ணீர். கேமராவை அப்படியே மூடி, வேலிக்கு அப்பால் போட்டுவிட்டு, தண்ணீரில் சப்தமில்லாமல் நடந்து, கழுத்தளவு தண்ணீரில் நின்று கொண்டேன். பக்கத்தில் பார்த்தால், இயக்குனர். யானைக்குப் பயந்து ஓடி வந்தவர், தண்ணீரில் விழுந்து தடுமாறிக் கொண்டிருந்தார்.

மெல்லிய குரலில் சத்தம் போடாதிருக்கும்படி அவரை எச்சரித்துவிட்டு, படபடப்புடன் தண்ணீரிலேயே நின்றிருந்தேன். திடீரென்று மின்னல் வெட்டினாற்போல வெளிச்சம். ஆனால் அது மின்னல் அல்ல. டைரக்டர் கையில் இருந்து, கீழே விழுந்துவிட்ட லைட், ஷார்ட் சர்க்யூட் ஆகி, மின்னல் வெட்டினாற் போல எரிந்து அணைந்தது. திடீரென்று வெளிச்சம் வந்ததால் தடுமாறிப் போன யானை, திரும்பி ஓட ஆரம்பித்தது. எங்களுக்குப் போன உயிர் திரும்பி வந்தது.

படம் பிடித்த ஃபிலிமை போட்டுப் பார்த்தபோது, யானை பயிர்களைத் துவம்சம் செய்யும் காட்சி அற்புதமாய்ப் பதிவாகி இருந்தது. அந்த டாகுமெண்டரியின் துவக்கக் காட்சியாக அதை வைத்தோம்.

**பா**ந்தர்கார் காட்டுப் பகுதி மத்தியப் பிரதேசத்தில் இருக்கிறது. அந்தக் காலத்தில் மகாராஜாக்களின் வேட்டையாடும் பகுதியாக அது இருந்தது. புலிகள் குறித்த டாகுமெண்டரிக்காக அங்கே போயிருந்தோம். படத்தின் இயக்குனர், அப் பகுதியை நன்கு அறிந்த யானைப் பாகன் குட்டப்பன், நான், மூவரும் யானை மீது ஏறி காட்டுக்குள் சென்றோம்.

பலநாட்கள் முயற்சி செய்து, ஒரு புலி குட்டி போட்டிருப்பதைக் கண்டுபிடித்து, அடுத்து புலிக்குட்டிகளை எங்கே வைத்திருக்கிறது என்று கண்டுபிடிக்கும் முயற்சியில் இறங்கினோம். சிலநாட்கள் பொறுமையோடு காத்



■ அல்போன்ஸ்ராய்



இருந்த பின், பாறைகள் நிறைந்த ஒரு பகுதியில் புலியும் குட்டிகளும் இருப்பது தெரிய வந்தது. யானையின் மீதிருந்து பார்த்தால், பாறைகளின் மறு பக்கம் இருப்பது தெரியாது என்பதால், யானை மீதிருந்து இறங்கி, மெதுவாக நாங்கள் மூவரும் சுற்றும் முற்றும் பார்த்தபடி நடந்தோம். திடீரென்று ஓர் உறுமல் சத்தம். ஒரு பாறையின் பின்னாலிருந்து புலியொன்று வெளிப்பட்டு, எங்களை நோக்கி ஓடி வந்தது.

யானைப் பாகன் குட்டப்பன், வன விலங்குகளின் குணாதிசயங்களை நன்கு அறிந்தவர். எங்கள் இரண்டு பேரையும் இறுகப் பற்றிக் கொண்டு, நெருக்கமாக நின்று கொள்ளும்படி சொன்னார். அசையாமல் அப்படியே நாங்கள் நின்றோம். எங்கள் அருகில் வந்த புலி, ஒரு பார்வை பார்த்துவிட்டு, திரும்பிப் போய் விட்டது.

"மூன்று சிறிய உருவம் கொண்ட மனிதர்கள் என்று புலி புரிந்து கொண்டிருந்தால் ஆபத்து. மூவரும் நெருக்கமாய் நின்று கொண்டதால், ஏதோ பெரிய விலங்கு போலும் என்று பயந்துகொண்டு, புலி விலகிப் போய் விட்டது" என்று புலியின் சைக்காலஜியை விளக்கினார் குட்டப்பன்.

குஜராத்தின் கிர் காட்டுப் பகுதியில் சிங்கங்களைப் பற்றிய டாகுமெண்டரிக்காக முகாமிட்டிருந்தேன். ஒரு குளத்தை ஒட்டி, ஐந்தடிக்கு ஐந்தடி அளவில், காய்ந்த இலைகள், கிளைகளைக் கொண்டு கட்டப்பட்ட மறைவிடத்துக்குள் கேமரா சகிதம் உட்கார்ந்து, காத்துக் கொண்டிருந்தேன். மத்தியான நேரம். எப்படியும் தண்ணீர் குடிக்க சிங்கம் வரும் என்பது எனது நம்பிக்கை. வெகுநேரம் காத்திருந்த பின், ஒரு சிங்கம் தூரத்தில் வந்து கொண்டிருப்பதைக் கவனித்தேன். ஆனால், தண்ணீர் குடிக்காமல், வேறு திசையில் சிங்கம் சென்றுவிட, ஏமாற்றமடைந்தேன்.

மறைவிடத்திலிருந்து வெளியே பார்க்க முடியாது என்பதால், சிங்கம் மீண்டும் கண்ணில் படுமா என்று காத்திருந்தேன். இலேசான சலசலப்பு. தலையைத் திருப்பிப் பார்த்தேன். மறைவிடத்தின் பக்கவாட்டுப் பகுதியிலிருந்த இலைகளை விலக்கிவிட்டு உள்ளே தலையை நீட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது சிங்கம். எனக்கும் சிங்கத்தின் முகத்துக்கும் இடையே ஒரு அடி இடைவெளி. எனது சப்த நாடியும் ஒடுங்கிப் போனது. என்னையும் அறியாமல் சட்டென்று "ஹலோ!" என்று உரக்கச் சொன்னேன். பயந்து போன சிங்கம் உள்ளே விட்ட தலையை, வேகமாய் பின்னுக்கு இழுத்துக் கொண்டு, பிடித்தது ஓட்டம். அது தலையை இழுத்த வேகத்தில் நான் அமைத்திருந்த தாற்காலிகமான மறைவிடம் சிதறி, அப்படியே கீழே வந்தது.

'ஹலோ' சொன்னதும் சிங்கம் ஏன் பயந்தது என்று யோசித்தேன். ஆடு, மாடு எதையோ எதிர்பார்த்து உள்ளே தலை நீட்டிய சிங்கம், திடீரென்று வந்த சத்தத்தில் பயந்து போயிருக்கும் என்ற முடிவுக்கு வந்தேன்.

இதுபோல ஏராளமான திகிலான அனுபவங்கள்; ஆனால் எல்லாவற்றிலும் ஒரு த்ரில் உண்டு.

**- எஸ். சந்திரமௌலி**



''இந்த அலுவலகத்தில் யார், யாரெல்லாம் எவ்வளவு லஞ்சம் வாங்கறாங்கன்னு ஒரு பட்டியலே தயார் பண்ணிட்டேன்!''

''எப்படி முடிஞ்சது உங்களால?''

''ஆபீஸ் பியூனுக்கு நூறு ரூபாயைத் தள்ளினேன். எல்லாத்தையும் புட்டு புட்டு வச்சுட்டான்!'' - ஜி. சுந்தரராஜன்



''முடிவா கல்யாணத்தை பத்தி என்னதான் சொல்றீங்க ரமேஷ்?''

''உன் கல்யாணத்துக்கு என்னால அம்பது ரூபாதான் மொய் வைக்க முடியும். அதுக்கு மேல எதிர்பார்க்காதே!''

- கொங்கணாபுரம் வே. செந்தில்



''என்னங்க... நம்ம பையன் இலக்கணம் படிக்கிற அழகைப் பாருங்க...!''

''நேர், நேர் மீனா
நிரை, நேர் நீனா
நேர், நிரை கரீனா!''

- நாமக்கல் பாலு

# நேர் நேர் மீனா!



''போலீஸ்காரரைக் காதலிச்சிருக்கக் கூடாது!''

''ஏன்?''

''மனசைத் திருடினதுக்கு மாமூல் கேட்கறார்!''

- அம்பை தேவா



# காட்டிக் கொடுக்கும் கண்கள்!

தேர்வு வந்துவிட்டால் போனஸாகப் பலருக்குத் திகிலும் வந்துவிடுகிறது. கண் விழித்துப் படித்தால் கண்வலி, கண்களில் சோர்வு, எரிச்சல், தாரை தாரையாகக் கண்ணீர், உச்சபட்சமாகத் தலைவலி என்று பல மாணவர்கள் அவஸ்தைப்படுகிறார்கள். தங்களுக்குப் பார்வை தொடர்பான பிரச்னை இருக்கிறதா இல்லையா என்ற குழப்பத்தோடும், கூச்ச உணர்வோடும் இருந்து விடுகிறார்கள். நிலைமை தீவிரமாகி, பெற்றோர்களுக்குத் தெரிய வரும்போது - பெரும்பாலானோர் அழைத்துச் செல்வது கண்ணாடிக் கடைக்கு. அங்கே கம்ப்யூட்டர் வழி கண் பரிசோதனை செய்து, கடைக்காரரே கண்ணாடியை வழங்கிவிடுவார். இது சரிதானா? உமா கண் மருத்துவமனையின் தலைவர் டாக்டர் என்.வி. அருள்மொழிவர்மனிடம் கேட்டோம்.

"இளவயதில் கண்ணாடி அணிதல் என்பது மைனஸ், ப்ளஸ் பவர் எனப்படும் தூரப்பார்வை மற்றும் கிட்டப்பார்வை ஆகிய இரண்டு பிரச்னைகளுக்காக. இவை இளவயதில் வருவது. பொதுவாக நமது ஐபால் (eyeball), பந்து வடிவம் கொண்டது. சராசரியாக நன்கு வளர்ந்து முடிந்த ஐபால், இருபத்திரண்டு மில்லிமீட்டர் நீளம் இருக்கும். இந்த சராசரி அளவிலிருந்து ஒரு மில்லிமீட்டர் (23 மிமி) அதிகமிருந்தால் 'மைனஸ் த்ரீ' பவர் கொண்ட கண்ணாடி அணிய வேண்டி இருக்கும். ஒரு மில்லி மீட்டர் குறைவாக இருந்தால் 'ப்ளஸ் த்ரீ' பவர் அணிய வேண்டி இருக்கும். ஐபால் என்பது மற்ற உறுப்புகளைப் போல பரம்பரை சார்ந்த ஒன்று, வியாதியல்ல. பிறந்த குழந்தைக்கு ஐபால் கொஞ்சம் சின்னதாக இருக்கும். வயது ஆக ஆக, மெல்ல மெல்ல வளர்ந்து ஒன்பது வயதுக்கு சராசரி வளர்ச்சியை எட்டி விடும். பலருக்கு பத்து வயதுக்குப் பிறகும்கூட வளர்ச்சி இருக்காது. இன்னும் பலருக்கு பத்து வயதுக்குப் பிறகும் வளர்ச்சி இருந்துகொண்டே இருக்கும். இப்படி வளரும்போது மைனஸ் ஆறு, மைனஸ் ஏழு வரை கூட போட வேண்டி வரலாம். மைனஸ் பவர் வருவது பத்து முதல் பன்னிரண்டு வயதுக்குள்தான். உடல் வளர வளர ஐபாலும் வளர்ந்து கொண்டே செல்வதால், பவரும் வளரும். பிறகு பதினாறு வயதில் இருக்கும் பவர் நிரந்தரமாக அப்படியே இருந்துவிடும்.



மைனஸ் பவருக்கு நேர் எதிரிடையானது ப்ளஸ் பவர்.

சராசரி ஐபால் அளவுக்குக் கீழேயே வளர்ச்சியானது தேக்கமடைந்து, மிக மெல்ல நிகழ்ந்தால் அல்லது 20 மில்லிமீட்டரில் தேங்கி விட்டால் ப்ளஸ் த்ரீ, ப்ளஸ் ஃபோர் கண்ணாடி அணிய வேண்டி வரும். இதில் ஐபால் பதினாறு வயதுக்குள் மேலும் கொஞ்சம் வளர வாய்ப்புள்ளதால், ப்ளஸ் பவரும் குறைய வாய்ப்புண்டு" என்கிறார்

**மைனஸ் அல்லது ப்ளஸ் பவர் இருக்கும் பட்சத்தில் கட்டாயம் கண்ணாடி அணிந்தால்தான் இயங்க முடியுமா?**

"பவர் இருந்தால் கண்ணாடி அணியலாம். 'போடாவிட்டால் கண் கெட்டுப் போய்விடும். பார்வை மங்கி விடும்' என்பதெல்லாம் மூட நம்பிக்கை. அதேசமயம் கண்ணாடி அணியாமல் பள்ளிக்குப் போனால், கரும் பலகையில் எழுதுவது சரிவரத் தெரியாது. தேர்வு எழுதுவதில் சிக்கல் வரலாம். புத்தகத்தைத் தூக்கினாலே எரிச்சலும் கோபமும் வரலாம். தலைவலி வரலாம். உறுதியும், தன்னம்பிக்கையும் குறைந்து விடலாம்."

**சரி! பவர் இருக்கிறது அல்லது இல்லை என்பதை எப்படித் தெரிந்துகொள்வது?**

"புள்ளி ஐந்து (.5), ஒன்று புள்ளி ஐந்து (1.5) போன்ற மிகக் குறைந்த பவர் அளவுகள் இருந்தால் பெரிய வித்தியாசம் தெரியாது. எனவே வளரும் வயதில் உள்ள சிறுவர், சிறுமியருக்கு பள்ளியில் சேர்க்கும்போதே கண் மருத்துவரிடம் பரிசோதனை செய்வதே சாலச் சிறந்தது. முறையான கண் பரிசோதனைகள்தான் ஐபால் குறைபாடுகளை காட்டிக் கொடுக்கும். அனுபவமோ, கண் மருத்துவமோ பயிலாத கடைக்காரர், கம்ப்யூட்டர் வழியே கண்டறிவது ஒருபோதும் துல்லியமாக இருக்க முடியாது. முக்கியமாக ஐபாலின் மையப்புள்ளியை துல்லியமாகக் கண்டறிந்து, அதன் சராசரி நீளத்தை அளவிட வேண்டும். இது கண் மருத்துவருக்கு மட்டுமே சாத்தியம்".



* என்.வி. அருள்மொழிவர்மன்

**பதினாறு வயது வரை பவரே இல்லையென்றால் மீண்டும் எப்போது கண் பரிசோதனை செய்து கொள்ளலாம்...?**

"நாற்பது வயதில் செய்துகொண்டால் போதும். நாற்பது முதல் 45 வயதில் உலகின் எந்த இனத்தில் பிறந்தவருக்கும் வருவது ரீடிங் கிளாஸ் எனப்படும் 'பிரஸ் பயோபியா'. இதுவும் வியாதி இல்லை. இளவயதென்றாலும் சரி, முதுமை என்றாலும் சரி, கண்ணாடி அணிய வேண்டிய அவசியத்தை இல்லாமல் செய்துவிட்டது ப்ரிலெக்ஸ் (PRELEX) அறுவை சிகிச்சை. கண்ணாடி அணிய விரும்புகிறவர்கள் இப்போது தடிமனே இல்லாமல் அணியலாம். கண் மருத்துவ அறிவியலின் பார்வை விசாலமாகிவிட்டது" என்கிறார் டாக்டர் அருள்மொழிவர்மன்.

**- ஸ்ரீ சக்கரம்**



# திருக்குறளும் திகில் நாவலும்!

**எது இலக்கியம் என்கிற சர்ச்சை தமிழில் நீண்ட காலமாகவே இருந்து வரும் நிலையில், மர்மக் கதைகள் இலக்கிய அந்தஸ்துக்கு உரியவையா என்று மூன்று எழுத்தாளர்களிடம் கேட்டோம்...**

**இந்திரா பார்த்தசாரதி:**

“இவையும் ஒரு வகை இலக்கியம் தான். அதில் சந்தேகம் வேண்டாம். புத்தகங்களை எடுத்துக் கொண்டோமானால் நன்றாக எழுதப்பட்ட புத்தகங்கள், நன்றாக எழுதப்படாத புத்தகங்கள் என்கிற இரண்டு வகையாகத்தான் அவற்றைப் பிரிக்க முடியும்.

இப்பொழுது எழுதப்படும் திகில், மர்மக் கதைகளில் மிகுதியான அளவில் வன்முறை இடம் பெறுகிறது. அதேபோல் ஆங்கிலப் புத்தகங்களின் தழுவல்களும் பெரிய அளவில் காணப்படுகின்றன. மேலும், பரபரப்பாக எழுதப்படும் இது போன்ற பல படைப்புகளில் எந்தவொரு கதாபாத்திரமும் நம் நினைவில் தங்குவதில்லை. இதில் விதிவிலக்காக இருப்பது கல்கி போன்றோரின் நாவல்கள். கள்வனின் காதலியில் வரும் கல்யாணியை எளிதில் மறக்க முடியுமா? அவை போல வடுவூர் துரைசாமி ஐயங்காரின் அப்போதைய கதைகள் குறிப்பிடத்தக்கவை.

ஆங்கில எழுத்தாளர்களான ஜி.கே. செஸ்டர்டன், எட்கர் அலன் போ போன்றவர்களின் படைப்புகள் முக்கியமானவை. அவர்களைப் போல் தமிழில் இப்பொழுது யாராவது எழுதுகிறார்களா என்பது கேள்விக்குறி.”

**சாரு நிவேதிதா:**

“நமது சமூகம் மாசடைந்த ஒன்றாக இருக்கிறது. எங்கு பார்த்தாலும் அழுக்கும், குப்பைகளும் தான் பெருகியிருக்கின்றன. இப்படிப்பட்ட நமது சமுதாயத்தை, நமது வாழ்க்கையை பிரதிபலிப்பதாலோ என்னவோ நமது இலக்கியமும் குப்பையாகவே காட்சியளிக்கிறது. இதுதான் எனது அபிப்பிராயம்.


• மனக்குகை ரகசியம்!

தமிழில் இப்பொழுது எழுதப்படும் திகில், மர்மக் கதைகள் ஆங்கிலம் அல்லது பிற அயல் மொழிகளில் எழுதப்படும் படைப்புகளைப் போல் வளர்ச்சியடைந்த நிலையில் இல்லை என்றுதான் சொல்ல



வேண்டும். ஆர்தர் சி கிளார்க் போன்றோரின் கதைகளைப் படித்தால், அவற்றிலிருந்து நாம் நிறையத் தெரிந்துகொள்ள முடியும். தமிழில் அப்படி ஒரு வாய்ப்பு கிடைக்குமா? யோசித்துப் பார்த்தால் அதிருப்திதான் மிஞ்சுகிறது. இந்நிலையில் தமிழில் எழுதப்படும் திகில், மர்மக் கதைகள் இலக்கியமா என்ற கேள்விக்கே இடமில்லை."



வாய்ப்பு கிடைக்குமா?



* மறக்க முடியுமா?

**பிரபஞ்சன்:**

"திகில், துப்பாக்கி, துப்பறிதல், கொலை முதலான சமாசாரங்களை உள்ளடக்கிய கதைகள், தமிழில் மட்டுமல்லாமல் உலகம் முழுவதும் தொடர்ந்து வாசிக்கப்பட்டு வருகின்றன. அவற்றை எழுதுவதோ, படிப்பதோ அருவருப்பான காரியம் என்று எனக்குத் தோன்றவில்லை. மனிதர்கள் அவரவர் ரசனைக்கும் தேவைக்கும், சூழலுக்கும் ஏற்ப, வாசிக்கும் பொருளைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இதைத்தான் படிக்க வேண்டும், இதைப் படிக்கக் கூடாது என்று சொல்வது ஒருவகை வன்முறை ஆகும்.

துப்பறியும் கதைகள், குற்றம் செய்பவன் தண்டிக்கப்படுபவான் எனும் பேருண்மையை விளம்புகின்றன. இலக்கியம் வேறு வகைப்பட்டது. அது வாழ்க்கையை நுட்பமாக, ஆழமாகப் பரிசீலிக்கிறது. உலகத்தின் தன்மையை, மண்ணை, வாழ்வை, மனிதர்களின் மனக்குகை ரகசியங்களை கலாபூர்வமாக எடுத்துச் சொல்கிறது.

இரண்டும் எழுத்துதான் என்றாலும் திகில், துப்பறியும் கதைகளை யாரும் இலக்கியம் என்று சொல்வதில்லை. உலகம் முழுக்க ஷேக்ஸ்பியரையும், கம்பனையும், காளிதாசரையும் மற்றும் டால்ஸ்டாய், தாஸ்தாயெவ்ஸ்கி, காப்கா, புதுமைப்பித்தன் போன்றவர்களையும்தான் கொண்டாடுகிறார்கள்.

**- கங்கா**

**இது குறித்து மர்மக் கதைகள் எழுதி வரும் எழுத்தாளர்கள் சுபா என்ன சொல்கிறார்கள்?**

"மனிதனுக்குப் புரியாத விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன. நம்முடைய ஐந்து புலன்களால் எல்லாவற்றையும் நம்மால் புரிந்துகொள்ள முடியும் என்று சொல்ல முடியாது. பேய், பிசாசு நம்பிக்கைகள் இந்த வகையைச் சார்ந்தவை. அவைகள் உண்மையிலேயே இருக்கின்றனவா, இல்லையா என்பது விவாதத்திற்குரிய கேள்வி. ஒருவகையில் பார்த்தால் கடவுள் நம்பிக்கையைப் போலத்தான் அவற்றின் நம்பிக்கைகளும். நம்புபவர்களுக்கு அவை இருக்கும். நம்பாதவர்களுக்கு அவை இருக்காது.

இத்தகைய நம்பிக்கையை களமாக அமைத்து எழுதும் திகில் கதை எழுத்தாளர்கள், உண்மையோடு கற்பனையையும் கலந்து வாசகர்களை ஈர்க்கும் விதமாக எழுதி வருகிறார்கள். இதில் தவறு கிடையாது.

இத்தகைய புத்தகங்கள் இலக்கியமா என்ற கேள்விக்குள் நாங்கள் நுழைய விரும்பவில்லை. வாசகர்கள் விரும்பிப் படிக்கும் புத்தகங்கள் எல்லாமே இலக்கியம்தான். அது திருக்குறளாக இருந்தாலும் சரி, திகில் நாவலாக இருந்தாலும் சரி."

# மகுட வைரம்

## 37. வைகுந்தன் அருள்!

மண்ணிலும் மனங்களிலும் ஏற்படும் காயங்களை ஆற்றவும், மாற்றவும், மனங்களைத் தேற்றவும் சக்தி படைத்த காலம், சோழ மண்ணிலும் பல மாற்றங்களை ஏற்படுத்தியிருந்தது. காலங்கள் மாறிய வேகத்தில் மனித வாழ்விலும் மாற்றங்கள் பல ஏற்பட்டதால், சோழ நாட்டு மக்கள் முகங்களில் மகிழ்வும், நிறைவும் தெளிவாகவே புலப்பட்டன. அவை சோழர் தலைநகரிலும், குடந்தை போன்ற பெரும் ஊர்களிலும், சிற்றூர்களிலும், கிராமங்களிலும்கூட நிறைந்தே கிடந்தன.

அந்த கிராமத்தின் மேலே கூடி மகிழ்ச்சியுடன் முழங்கியபடியிருந்த மேகங்கள் உச்சிப் பொழுதை மாலைப்பொழுது போலத் தோன்றச் செய்துகொண்டிருந்தன. வயல் வெளியெங்கும் நிறைந்து கிடந்த நெற்கதிர்கள் மட்டுமின்றி, அரிசிலாற்றங்கரையோரமாகச் சென்ற அந்தப் பாதையும் உற்சாகமாக மழையில் நனைந்து கிடந்தது. அரிசிலாற்றிலோ, கரையோர மரக் கூட்டங்களிலோ அதிகம் மாற்றமேதுமின்றி, பட்சிகளின் அதே கூச்சல் நிறைந்து கிடந்தது. பாதையோரம் நின்ற அந்தச் சிறு மண்டபத்திலும் அதிக மாற்றம் தென்படவில்லை. மண்டபத்தை அடுத்திருந்த மர நிழலில் ஒதுங்கி நின்ற காளைகளும், கலப்பையும், நனைந்து கொண்டிருந்தன.

மண்டபத்தின் உள்ளே அமர்ந்து பாத்திரமொன்றிலிருந்து உணவை எடுத்து உருட்டி உருட்டி கணவனின் கரத்தில் வைத்துக் கொண்டிருந்தாள் கிராமத்துப் பெண்ணொருத்தி. அந்த உணவை விழுங்கியபடி அவளை ஆசையுடன் பார்த்துக் கொண்டே ஏதோ கூறிக் கொண்டிருந்தான் அவள் கணவன். அவர்களது வாழ்வு தந்திருக்கும் மன நிறைவை அந்தப் பெண்ணின் பூரித்த முகமும், நாணமும் ஆசையும் நிரம்பி வழிந்த விழிகளும் தெளிவாகப் புலப்படுத்தின. அவள் உடலமைப்பும் சற்றுப் பூசினாற்போல் சந்தனமும் குங்குமமும் கலந்த வண்ணமாகத் தெரிந்தது. மெலிந்து கிடந்த இடை சற்றுப் பருத்து, அந்தக் கொடியில் மலரொன்று பூத்திருப்பதையும் அறிவித்தது.

ஏதோ கூறிக் கொண்டிருந்த கணவன் சட்டென்று நிறுத்திவிட்டதைக் கண்டவள் "ஏன் நிறுத்தி விட்டீர்கள்? எத்தனை முறை கூறினாலும் கேட்டாலும் நமக்கு அலுக்கவே அலுக்காது - மேலே கூறுங்கள்" என்றாள்.

அவன் தொடர்ந்தான். "ஆம் குமுதவல்லி. அன்றைக்கும் இதே சாரல்தான், வலுத்து பெரு மழையாகப் பொழிந்துகொண்டிருந்தது. குடந்தைக்குச் செல்ல வேண்டியவன் இங்கு



## விஷ்வக்ஸேனன்

வந்து ஒதுங்கினேன். அப்போது தான் மழையில் நனைந்தபடி புரவி மீது அந்தச் சோழ வீரன்..." அவன் வார்த்தைகள் பாதியில் நின்றன.

சட்டென்று எழுந்தவன் சற்றுத் தூரத்தில் புரவியொன்றின்மீது நனைந்தபடியே ஒருவன் வந்து கொண்டிருப்பதைக் கண்டான். ஆனால் அதன்மீது வந்தவன் புரவியின் மீது படுத்துக் கிடக்கவில்லை. ஆனந்தமாக நனைந்தபடி ஏதோ உற்சாகப் பாட்டொன்றும் இசைத்தபடி வந்து கொண்டிருந்தான். மண்டபத்தை நெருங்கியவன் அடுத்திருந்த மர நிழலில் புரவியை நிறுத்திவிட்டு, தலை குனிந்தபடியே ஓடிவந்து மண்டபத்தினுள் நுழைந்து நிமிர்ந்தான்.

மழைநீருடன் விஷமமும் வழிந்த அந்த முகத்தைக் கண்டதும் குமுதவல்லியின் முகத்தில் அபரிமிதமான மகிழ்ச்சி கூடி, கொற்கை முத்துக்களின் வரிசை பளிச்சிட்டது.

"வா முகுந்தா, ஒரு திங்களாக ஏன் வரவில்லை? நலமாக இருக்கிறாயா? தந்தை வரவில்லையா? எப்போது வருவார்? அவரிடம் முக்கியச் செய்தியொன்றைக் கூற வேண்டுமே, ஏன் அவர் வரவில்லை? என்னைக் காண வராமல் அப்படியென்ன பணி அவருக்கு?" - என்றாள் படபடவென்று.

முகுந்தன் இரு கரங்களையும் உயர்த்தி அவள் வார்த்தைகளைத் தேக்கிவிட்டு, பராந்தகனை நோக்கினான் "பராந்தகரே, நலம்தானா? இளவரசியார் கேள்விகளைத் தொடங்கினால் அடுக்கடுக்காக வருமே, எப்படிச் சமாளிக்கிறீர்கள்?" என்றான்.

"அதை ஏன் கேட்கிறாய் முகுந்தா. உங்கள் இளவரசிக்கு கேள்வி ஞானம் அபாரம். எனக்குத்தான் பதில் கூறத் தெரியாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறேன்."

"கவலைப்பட வேண்டாம் பராந்தகரே. உங்களுக்கு ஆதரவாகத்தான் இன்னொருவர் வரப் போவதாகத் தெரிகிறதே. வந்தபின் பதிலளிக்கும் பொறுப்பை அவர் ஏற்றுக் கொள்வார். அதுவரை எப்படியேனும் சமாளித்துக் கொள்ளுங்கள்."

"போதும் நிறுத்து முகுந்தா" குமுதவல்லியின் குரலில் பொய்க்கோபம் ஒலித்தது. "நான் கேட்டவற்றுக்கு முதலில் பதில் கூறு."

"என்ன கேட்டீர்கள்? ஒவ்வொன்றாய்க் கேட்டால் பதில் கூறலாம். ஒட்டுமொத்தமாகக் கேட்டால் எப்படி பதில் கூறுவதாம்?"

"சரி, ஏன் நீ ஒரு திங்களாக வரவில்லை?"

"ஒரு முக்கியப் பணியாக காஞ்சிக்குச் சென்றிருந்தேன்."

"என்ன அத்தனை முக்கியப் பணி?"

"அதைக் கூற முடியாது. இது போன்ற ராஜாங்க விஷயங்களை சாதாரண மக்களிடம், அதுவும் வேற்று நாட்டு கிராமத்துப் பெண்களிடம் பேசக் கூடாதென்று மன்னர் உத்தரவு."

குமுதவல்லி அவனை விழித்துப் பார்த்தாள். பராந்தகன் பலமாக நகைத்தான்.

"சரி போகட்டும். தந்தை ஏன் வரவில்லை?"

"அவர் வரக்கூடிய நிலையில் நேற்று வரை இல்லை. என்னுடன் காஞ்சியில் தான் இருந்தார்."

"எப்போது என்னைக் காண வருவார்?"

"எப்போது வேண்டுமானாலும் வரலாம். அவர் விருப்பம். இதுவரை அந்த விருப்பமில்லையென்று நினைக்கிறேன்."

குமுதவல்லிக்கு உண்மையிலேயே கோபம் வந்தது. "என்னைக் காண வரப் போகிறாரா இல்லையா, சொல் முகுந்தா."

"வருவார். நிச்சயம் வருவார்."

"எப்போது?"

"இப்போதேகூட வரலாம்."

"என்ன சொல்கிறாய்?"

"ஆம் இளவரசி. மன்னர் இங்கேதான் வந்து கொண்டிருக்கிறார். உங்களையல்ல, பராந்தகரைக் காணும் ஆவலில் நான்தான் முன்னதாக வந்துவிட்டேன்."

"உண்மையாகவா?"

"ஆம். சந்தேகமிருந்தால் நேரில் பாருங்கள்" என்ற முகுந்தன், நின்ற இடத்திலிருந்து விலகினான்.

அவனுக்கு நேர் பின்னால் குடந்தைப் பாதையில் முன்னால் புரவி வீரர்கள் வர, பின்னால் இரண்டு மூன்று ரதங்கள் வந்து கொண்டிருந்தன. சாரல் மெல்ல மட்டுப்படத் தொடங்கியது. மண்டபத்தருகில் வந்து நின்ற ரதங்களிலிருந்து பாண்டிய வரகுணனும், நந்திவர்மனும் இறங்கி உள்ளே நுழைந்தார்கள். வரகுணனை நோக்கித் தாவிய குமுதவல்லியின் முகம் அவன் அகன்ற மார்பில் புதைந்தது. மகளின் கூந்தலைத் தடவிய மன்னன் முகத்தில் வாத்ஸல்யம் ததும்பியது. பராந்தகனை நெருங்கி அவன் தோளில் தன் வலிய கரத்தைப் பதித்த நந்திவர்மனின் பெருவிழிகள் அன்பைப் பொழிந்தன. "பராந்தகா, காஞ்சிக்கு ஒருமுறையேனும் வந்து செல்லலாமல்லவா?" என்ற அவன் கேள்வியிலும் அன்பும் ஆதங்கமும் ஒலித்தன.

"நிச்சயம் வருகிறேன் மன்னா."

உடன் வந்த வீரர்களுக்கு ஏதோ உத்தரவிட்டுக் கொண்டிருந்த விக்கிரமவரையரும், உடன் அநிருத்தரும் பகதத்தனுடன் உள்ளே நுழைந்தார்கள். பகதத்தனைக் கண்ட பராந்தகன் "பகதத்தா, நண்பனை மறந்த துருபத ராஜனைப் போல் என்னை மறந்து விட்டாயா? ஏன் நீயும் ஒரு திங்களாக வரவில்லை?" என்றான்.

சற்றுத் திகைத்த பகதத்தன் பலமாக நகைத்தான்.

படைத் தலைவரை வணங்கிய பராந்தகன், "தங்கள் ஓலை கிடைத்தது படைத் தலைவரே, சித்தமாகவே வந்து காத்திருக்கிறேன்" என்றான்.

சட்டெனத் திரும்பி நோக்கிய குமுதவல்லி, "இவர்கள் இன்று வரப்போவதை முன்னமே அறிவீர்களா? ஏன் என்னிடம் கூறவில்லை?" என்றாள் சற்று வேகத்துடன்.

நந்திவர்மன் குறுக்கிட்டான். "குமுதவல்லி, நான்தான் தெரிவிக்க வேண்டாமெனக் கூறியிருந்தேன், உனக்கு மகிழ்ச்சியான ஆச்சரியத்தை அளிக்க, வேறொன்றுமில்லை."

நந்திவர்மனை நெருங்கிய குமுதவல்லி வணங்கினாள். அவளை வாழ்த்திய பல்லவ மன்னன், "பராந்தகா, மிக முக்கியப்பணி காரணமாகவே அனைவரும் வந்திருக்கிறோம் என்பதை அறிவாய். நாம் இல்லத்துக்குச் சென்று பேசலாமல்லவா?" என்றான்.

"வேண்டாம் மன்னவா, இந்தப் பணிக்கு இந்த மண்டபத்தை விடச் சிறந்த இடம் இருக்க முடியாது. பணியை முடித்தபின்பு நமது இல்லத்துக்குச் செல்லலாம்" என்றான்

## உதவிக்கு ஆளில்லை!

ஒரு வருஷம் பொங்கலுக்கு நாலு நாள் முன்னால ஃப்ரெண்ட்ஸ் மற்றும் ஃபேமிலியோட கொடைக்கானலுக்கு டூர் போயிருந்தேன். எல்லா இடத்தையும் சுத்திப் பார்த்துட்டு, நானும் என் மனைவியும் மட்டும் திருப்பூர் போய் டிரஸ் எடுத்துட்டு வரலாம்னு முடிவு பண்ணி போனோம். பர்ச்சேஸ் எல்லாம் முடியறதுக்கு நைட் பத்து மணி ஆயிடிச்சு. திருப்பூர்ல இருந்து புறப்பட்டு மலை

யடிவாரத்துக்கு வர்றதுக்கே பதினோரு மணி. இதுக்கு மேல கார்ல மலை யேறணும். அதுக்கு முன்னால நான் நைட்ல மலை மேல கார் ஓட்டுனதே இல்ல... அடர்த்தியான மலை... கும்மிருட்டு... பக்கத்துலயோ, எதிர்லயோ ஒரு வாகனமும் தென்படல. ரொம்ப பய மாயிடிச்சு... இந்த லட்சணத்துல என் செல்ஃபோனுக்கு சிக்னல் வேற கிடைக்கல... திடீர்னு எதுனா ஆபத்து வந்தா ஹெல்ப்புக்குக்கூட ஆள் இல்ல. மலையேறி லாட்ஜ் வந்து சேர்ந்தப்போ மணி 1.30. அந்த இரண்டரை மணி நேர மலைப் பயணம் என்னால மறக்க முடியாத திகில் பயணம்.

**- இசையமைப்பாளர் தினா**



பராந்தகன்.

"என்ன பேசிக் கொள்கிறீர்கள்? எனக் கேதும் விளங்கவில்லை" என்றாள் குமுத வல்லி குழப்பம் நிறைந்த குரலில்.

பாண்டிய மன்னன் விளக்கினான். "மகளே, செங்கட் சோழரின் புதல்வன் ஸ்ரீ வல்லபனை சோழ அரியணையில் அமர்த் தும் காலம் கனிந்துவிட்டது. விக்கிரமவரை யன் அதற்குரிய நாளும் குறித்து, நானும் பல் லவ மன்னரும் உரிய ஏற்பாடுகளைச் செய்து முடித்து விட்டோம். மணிமகுடம் வடிக் கவும் நான் குறித்தாயிற்று. அதற்காகவே வந்திருக்கிறோம்."

பராந்தகன் விக்கிரமவரையரை நெருங் கினான். "படைத் தலைவரே, இதே மண்ட பத்தில்தான் நம் சோழ வீரன் உக்ரோதயம் பதித்த பொன்னாரத்தை என்னிடம் அளித்து உயிர் துறந்தான். பின்பு அது என்னிடமே இருக்கவும், தக்க சமயத்தில் அதைப் பெற்றுக் கொள்வதாகவும் உத்தர விட்டீர்கள். இப்போது அந்த மாணிக்கம் இருக்க வேண்டிய இடம் நிச்சயிக்கப்பட்டு விட்டது. இதைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றவன், கச்சையிலிருந்து முடிந்து வைத் திருந்த உக்ரோதயத்தை எடுத்து நீட்டினான்.

கதிரவன் ஒளி அத்தனை பிரகாசமாக இல்லாத அந்தப் பொழுதிலும் பளீரென்று சிவந்த கதிர்களை மண்டபம் முழுதுமின்றி, சுற்றி நின்ற வீரர்களின் முகங்களிலும் வீசி செக்கச் செவேலென்று அடித்த அந்த உக் ரோதயத்தை, அனைவருமே கண் கொட் டாமல் பார்த்தனர்.

இரு கரங்களையும் நீட்டி அதைப் பெற் றுக் கொண்ட விக்கிரம வரையரின் முகம் உணர்ச்சிப் பிழம்பாக ஜொலித்தது. அவர் குரலும் உணர்ச்சி நிரம்பி ஒலித்தது. "இனி இந்த உக்ரோதயம் சோழர் மணி மகுடத்தை என்றென்றும் அலங்கரிக்கும். பராந்தகா, எத்தனையோ இன்னல்களிலும், இக் கட்டிலும் இதைக் காத்து, திரும்ப அளித்த உன் பெயர் சோழர் சரித்திரத்தில் என்றும் நிலை பெற்றிருக்கும்."

"படைத் தலைவரே, இந்தச் சோழ மண் ணுக்காக தாங்களும், அரியணையில் அமரப் போகும் சோழ மன்னரும் இடும் எந்தப் பணியையும் நிறைவேற்ற, நான் மட்டுமல்ல, என் சந்ததியினரும் என்றும் காத்திருப் போம்" என்ற பராந்தகன் குமுதவல்லியை நோக்கி முறுவல் பூத்தான்.

"ஆம் மன்னவா, அர்ச்சுனனுக்கு அபி மன்யுவாக, அடுத்து சந்ததியினர் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். உங்கள் மகளை விசாரித்துப் பாருங்கள்" என்றான் பகதத்தன் வரகுணனிடம்.

அவன் வார்த்தைகளிலும், பொருளிலும் தொனித்த மகிழ்ச்சி, அனைவர் முகங் களிலும் பரவியது.

நந்தவர்மன் வாய்விட்டு நகைத்தான். "வைகுந்தன் உனக்கு அருள்புரியட்டும்" என்று குமுதவல்லியை வாழ்த்தவும் செய்தான்.

பாண்டிய வரகுணன் மகளை நெருங்கி மீண்டும் அணைத்துக் கொண்டு "அப் படியா செய்தி, மகளே?" என்றான் குரலில் பரிவும் அன்பும் பூரணமாகத் தொனிக்க.

குமுதவல்லியின் குமுதமுகம் நாணத்தால் சிவந்து, உக்ரோதயத்தையும் மிஞ்சி ஜொலித் தது.

**(நிறைவடைந்தது)**

சென்னையிலேயே மிகப் பெரியது கீழ்பாக்கம் கல்லறைத் தோட்டம். கிட்டத்தட்ட ஐம்பதாயிரம் கல்லறைகள் கட்டுவதற்கு இடவசதி கொண்ட இத்தோட்டத்தில், இன்றைக்கு இட நெருக்கடி ஏற்பட்டு, 'புதிதாக எந்த உடலையும் புதைக்க இடமில்லை' என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. என்னதான் பிரச்னை என்றறிய புறப்பட்டோம்.

"ஒரு உடலைப் புதைத்து பதினான்கு ஆண்டுகள் கழித்துத்தான் அந்த இடத்தில், அடுத்த உடலைப் புதைக்க முடியும் என்பது சட்டம். முந்நூறு ஆண்டுகள் பழைமை வாய்ந்த இந்தக் கல்லறை தோட்டத்தில், ஏற்கெனவே ஐம்பதாயிரம் கல்லறைகள் எழுப்பப்பட்டுவிட்டதால், இப்போது இறப்பவர்களின் உடலைப் புதைக்க இடமில்லாமல் போய்விட்டது. எனவேதான் இத்தகைய அறிவிப்பினை வெளியிட்டோம்" என்றார் சென்னை கல்லறைத் தோட்ட அமைப்பின் செயலாளர் டாக்டர் போஸ்கோ அலங்காரராஜ்.



• பிரதாப்குமார்



• போஸ்கோ அலங்காரராஜ்

**சரி, இதற்கு மாற்று ஏற்பாடாக என்ன செய்யப்பட்டுள்ளது?**

"இப்பகுதியில் இறப்பவர்களது சடலம் பட்டினப்பாக்கம், காசிமேடு பகுதிகளுக்கு எடுத்துச் சென்று புதைக்கப்படுகிறது. ஆனால் எல்லோராலும் அப்படி எடுத்துச் செல்ல முடியாது என்பதால், இங்கு ஒரு மின்தகன மேடை அமைக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதற்கு மாநகராட்சி உதவும் பட்சத்தில் தாற்காலிகமாக இப்பிரச்னைக்குத் தீர்வு ஏற்படலாம்"

**நிரந்தரத் தீர்வு ஏதும் இல்லையா?**

"பதினான்கு வருட சட்ட காலத்தை ஐந்து வருடங்களாகக் குறைக்கலாம். இன்னொன்று, சென்னையைச் சுற்றி நான்கு இடங்கள் தேர்வு செய்யப்பட்டு ஒவ்வொரு இடத்திலும் 5 முதல் 10 ஏக்கர் வரை நிலம் ஒதுக்கித் தர வேண்டும். இதனை மாநகராட்சி மற்றும் தமிழக அரசின் முன் கோரிக்கையாக வைத்துள்ளோம். இருந்தாலும் மின் தகன மேடை அமைப்பதில் கிறிஸ்தவர்கள் பலருக்கு உடன்பாடு இல்லை.

குறிப்பாக 'பெந்தெகொஸ்தே' மற்றும் 'அசெம்பிளி ஆஃப் காட்' ஐச் சேர்ந்தவர்கள், மின் தகன மேடைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். அதற்குக்




- அம்பை தேவா




பப்பட்டு, விரைவில் மாமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றப்படும். அதேபோல, மின் தகன மேடை அமைப்பதற்கு மாசுக் கட்டுப்பாடு வாரியம் தடையில்லாச் சான்றிதழ் தர வேண்டும். இதற்கு மாநகராட்சி தேவையான உதவிகளைச் செய்யும்'' என்றவர், ''தகன மேடைகளில் இருவகை உள்ளன. ஒன்று முழுக்க முழுக்க மின்சாரத்தில் இயங்குவது.

# இறந்தவனுக்கு இடமில்லை!

காரணம் கிறிஸ்தவ முறைப்படி இறந்தவர் உடலை புதைப்பதுதான் மரபு. இருந்தாலும், இருக்கின்ற சூழ்நிலையை அனுசரித்து ரோமன் கத்தோலிக் மற்றும் சி.எஸ்.ஐ. யைச் சேர்ந்தவர்கள் ஆதரவு தெரிவிக்கின்றனர்'' என்றார் போஸ்கோ.

இந்த விவகாரத்தில் அதிக ஆர்வம் காட்டி வரும் மாநகராட்சி மண்டலக் குழுத் தலைவர்களுள் ஒருவரான பிரதாப் குமாரிடம் பேசினோம்...

"மின் தகன மேடை அமைப்பது குறித்து மாநகராட்சியின் அனுமதி கோரி கல்லறைத் தோட்ட அமைப்பிலிருந்து கோரிக்கை வந்தது. இவ்விவகாரம் நிதிக் குழு மற்றும் பணிக்குழுவிற்கு அனுப்

இதை பராமரிக்கவும், உபயோகிக்கவும் அதிக செலவாகும். இன்னொரு தகன மேடை மரத்தூள் மூலம் எரியூட்டி, வருகின்ற வெப்பத்தின் மூலம் தகனம் செய்வது. இந்த இரண்டில் மரத்தூள் தகன மேடைக்கு அதிகப் பணம் செலவாகாது. எப்படியும் எந்த முறையைத் தேர்ந்தெடுத்தாலும் முப்பத்தைந்து லட்சம் வரை செலவாகும்'' என்றார்.

- கலை

படங்கள் : ராஜன்

''சார்! உங்க பையனை கண்டிச்சு வைங்க!''

''ஏன் சார்?''

''பின்ன என்னவாம்! 'ஏட்டு' சுரைக்காய் கறிக்கு உதாவதுன்னா, அப்ப 'இன்ஸ்பெக்டர் சுரைக்காய், கான்ஸ்டபிள் சுரைக்காய் கறிக்கு உதவுமா சார்?'ன்னு பதிலுக்குக் கேட்கிறான்.''

- ஆர். செந்தில் முருகன்



வானதி பதிப்பகத்துக்கு இது பொன்விழா ஆண்டு. இலக்கியம், அறிவியல், ஆன்மிகம், வரலாறு, திறனாய்வு, சுயமுன்னேற்றம், ஆரோக்கியம் என்று இவர்கள் தொட்டு அச்சிடாத துறைகளே இல்லை. ஐந்தாயிரம் புத்தகங்களுக்கு மேல் வெளியிட்டிருந்தும், வெற்றியின் சாயல் சிறிதும் படியாமல், அமைதியுடன் இருக்கிறார் வானதி திருநாவுக்கரசு.

# "வெற்றிக்குத் தேவை

**பதிப்புத் துறையில் நுழைந்த பொழுது நீங்கள் சந்தித்த வாசகர்களுக்கும் தற்போதைய வாசகர்களுக்கும் இடையில் ரசனை எந்த அளவுக்கு மாறுபட்டிருக்கிறது?**

"நிறைய மாற்றங்கள். நான் வந்த புதிதில் துப்பறியும் நாவல்கள்தான் வாசகர்களை அதிகமாகக் கவர்ந்தன. நிறைய துப்பறியும் நாவல்கள் வெளியிட்டோம். பிறகு வாசகர்களின் மோகம் சரித்திர நாவல்கள் பக்கம் திரும்பியது. கல்கி, சாண்டில்யன் போன்றோரின் படைப்புகள் மிகுதியாக வெளிவரத் தொடங்கின. அதன் பின் சமூக நாவல்கள் அதிக அளவில் ரசிக்கப்பட்டன.

இப்பொழுதும் சரித்திர நாவல்களும் சமூக நாவல்களும் தொடர்ந்து நல்ல வரவேற்பைப் பெற்று வருகின்றன. இருப்பினும் தற்போதைய சூழலில் சுயமுன்னேற்றம், அறிவியல், தொழில் நுட்பம் தொடர்பான புத்தகங்கள் மீது அதிக ஈர்ப்பு ஏற்பட்டிருக்கிறது."

**இந்த மாற்றத்துக்கு என்ன காரணம்?**

"கால மாற்றம்தான் காரணம். இன்றைய காலகட்டத்தில் பலவிதமான புதிய பிரச்னைகள் நம்மைச் சூழ்ந்துள்ளன. உடல் சார்ந்த பிரச்னைகள், தொழில் சார்ந்த பிரச்னைகள், மனம் சார்ந்த பிரச்னைகள்... இப்படி பலவற்றை சொல்லிக்கொண்டே போகலாம். இவ்வாறு ஏற்படும் பிரச்னைகளிலிருந்து விடுபடுவதற்கும், அதற்கான வழிகளைத் தெரிந்துகொள்வதற்கும் மக்கள் புத்தகங்களை நாடுகிறார்கள். அவர்களது தேவைகளைப் பூர்த்தி செய்யும் விதமாக புத்தகங்களும் தம்மைப் புதிதாக மாற்றியமைத்துக் கொள்கின்றன. இந்த மாற்றம் தேவையான ஒன்று."

**புத்தகங்களால் சமூகத்தில் மாற்றங்களை ஏற்படுத்துவது சாத்தியமா?**

"சாத்தியம்தான். அனைத்து வகையான மாற்றங்களையும் புத்தகங்களால் ஏற்படுத்த முடியும். எனக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது. இன்றைய சமூகத்தில் சுய ஒழுக்கம் குறைந்து வருகிறது. இது ஒரு ஆரோக்கியமற்ற போக்கு. இந்த நிலை மாற வேண்டுமானால், புத்தகங்களின் உதவி இன்றியமையாதது."

**பதிப்பகத் துறை லாபகரமான துறைதானா...? உங்களது வெற்றி சாத்தியமானது எப்படி?**

"பிற தொழில்களைப் போல இன்று இவ்வளவு பணத்தை முதலீடு செய்தால், நாளை இவ்வளவு லாபம் அடையலாம் என்கிற முறையில் பதிப்புத் துறையில் ஈடுபட முடியாது. இதில் பொறுமை மிக அவசியம். இலாபத்தை மட்டும் கணக்கில் கொள்ளாமல், மெய்யான ஈடுபாட்டோடு செயல்பட வேண்டிய துறை இது.

நான் இப்பொழுது அடைந்திருக்கும் வெற்றிக்கு, எனது ஐம்பது வருட பொறுமைதான் காரணம். மிக முக்கியமான மற்றொரு விஷயம், எழுத்தாளர்களின் பங்களிப்பு. எழுத்தாளர்களின் உதவியும் நல்லுறவும் இன்றி இந்தத் துறையில் பணியாற்ற முடியாது. எனது வெற்றிக்கு அவர்கள்தான் முக்கிய காரணம். தேசியமும், தெய்வீகமும் எனக்கு இரு கண்களைப் போல. அவைதான் என்னை வழிநடத்திச் செல்கின்றன."

**தொலைக்காட்சி, சினிமா போன்ற ஊடகங்களின் வரவால் வாசிக்கும்**



## வானதி - 50

# பொறுமை!"

**பழக்கம் வெகுவாகக் குறைந்து வருகிறதே?**

"உண்மைதான். ஆனால் வாசிப்பதில் கிடைக்கும் இன்பம் அலாதியானது. வேறு எந்த ஊடகங்களாலும் வாசிப்பிற்கு இணையான ஓர் அனுபவத்தை அளிக்க முடியாது. இது எனது திடமான நம்பிக்கை. தொலைக்காட்சிகளும், திரைப்படங்களும் கதைகளை மையமாகக் கொண்டு இயங்கி வருகின்றன. ஆனால் புத்தகங்கள் கருத்துக் களை மையமாகக் கொண்டவை.

இந்தக் காரணத்தினால்தான் வானதி பதிப்பகம் சிறுகதைகள், நாவல்கள் போன்ற படைப்பிலக்கியங்களைக் குறைத்துக் கொண்டு கட்டுரை, வரலாறு, திறனாய்வு, அறிவியல் போன்ற பிற பகுதிகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வருகிறது. எங்களது முயற்சி கட்டாயம் வாசிக்கும் பழக்கத்தை மக்களிடையே அதிகப்படுத்தும் என்று நம்புகிறேன்."

**எழுத்தாளர்கள் பதிப்பகத்தாருக்கு பணம் அளித்து தமது புத்தகங்களை அச்சிட்டு வரும் வழக்கம் தற்பொழுது இருக்கிறது. இது பற்றி உங்களது கருத்து என்ன?**

"அவ்வாறு செயல்படுபவர்களைப் பற்றி நான் எதுவும் கருத்துச் சொல்ல இயலாது. வானதியைப் பொறுத்த வரையில் பணம் பெற்றுக் கொண்டு புத்தகங்களை வெளியிடுவதில்லை என்பதை ஒரு கொள்கையாக இன்று வரை கடைப்பிடித்து வருகிறேன். நாம் ஈடுபடும் ஒரு துறையில், நாம்தானே முதலீடு செய்ய வேண்டும்? அதுதானே நியாயம்!"

**எழுத்துத் துறையில்தான் நீங்கள் முதல் முதலில் காலடி எடுத்து வைத்தீர்கள். இப்பொழுதோ முழுக்க முழுக்க பதிப்புத் துறையிலேயே கவனம் செலுத்தி வருகிறீர்கள். தொடர்ந்து எழுத முடியாததில் உங்களுக்கு வருத்தமில்லையா?**

*(சிரிக்கிறார்)* "எழுத்துலகம் வேறு. பதிப்புலகம் வேறு. இரண்டு துறைகளிலும் ஒரே சமயத்தில் ஒருவன் செயல்படுவது கடினம். எழுதுவதிலேயே நான் முழுவதுமாக கவனம் செலுத்தியிருந்தால், இத்தனை சிறந்த புத்தகங்களை வெளிக்கொண்டுவர முடிந்திருக்குமா? அது மட்டுமின்றி, பதிப்புத்துறை எனக்கு மிகுந்த திருப்தியை அளிக்கிறது. பல இளம் எழுத்தாளர்களை ஊக்குவிக்கவும் முடிகிறது.

ஆனால், அதற்காக எழுதுவதை நான் முற்றிலுமாக நிறுத்திக்கொண்டு விட்டேன் என்று சொல்ல முடியாது. சமீபத்தில் கூட 'வெற்றிப் படிகள்' எனும் சுய வாழ்க்கை வரலாற்று நூலொன்றை எழுதியுள்ளேன்."

**வேறு திட்டங்கள்?**

"வானதி அறக்கட்டளை எனும் அமைப்பு ஒன்றை உருவாக்க வேண்டும் என்பது எனது ஆசை. அதற்கான முயற்சிகளில் இறங்கியுள்ளேன். ஏழை மாணவர்களுக்கு கல்வியறிவு ஊட்டுவது, இந்த அறக்கட்டளையின் முக்கியப் பணியாக இருக்கும்."

**- இன்பா**

# மாடமாளிகை

கிரஹப்பிரவேசத்துக்கு மூர்த்தியும், அவன் மனைவி ராதிகாவும் வந்திருந்தனர். முக்கியமான விருந்தினர். தெரு முனைக்கே போய் எதிர்கொண்டு அழைத்தான் பாலா.

"எங்கே வராமல் இருந்திருவீங்களோன்னு நினைச்சேன்."

"அதெப்படி வராமலிருப்பேன்..."

"ஆக்சுவலா நாங்க அப்பா வீட்டுக்குப் போறதா இருந்தோம். ரொம்ப நாளாச்சு அவரைப் பார்த்து. நீங்க ரொம்ப வற்புறுத்தினீங்க. தவிர்க்க முடியல..." என்றாள் ராதிகா, புது நெக்லஸ் தெரியும்படி சரி செய்து கொண்டு.

பாலா குடும்பத்தினர் அனைவரையும் நலம் விசாரித்தான் மூர்த்தி.

கணவனுக்கும், மனைவிக்கும் கூல் ட்ரிங்க்ஸ் கொடுத்தனர். ராதிகா ஒப்புக்கு கொஞ்சம் உறிஞ்சிவிட்டு, வைத்துவிட்டாள். மூர்த்தி ருசித்துக் குடித்தான்.

ராதிகாவிற்கு அங்கு ஏதும் சுவாரஸ்யமாகப் படவில்லை. அவள் அந்தஸ்துக்கு அந்தக் குடும்பத்தில் யாரும் ஈடாக இல்லை.



சுற்றிப் பார்த்து வியக்கிற அளவுக்கு வீடும் அந்தஸ்தாய் இல்லை. பெட்டி பெட்டியாய் இரண்டு அறைகள். பின்புறம் சிறிய உறை கிணறு. சினிமா தியேட்டர் டிக்கெட் கௌண்டர் போல், குறுகலாக பக்கவாட்டில் ஒரு பாதை. மொட்டை மாடிக்குப் போக ஒரு மரப்படி.

மூச்சுமுட்டியது அவளுக்கு. சீக்கிரம் வெளியேறினால் தேவலாம் போலிருந்தது.

பாலா, மூர்த்தியை வீடு முழுக்கச் சுற்றிக் காட்டினான்.

மூர்த்தி, கதவுகளைப் பார்த்தான்.

"நல்ல மரம்தான். யார் செலக்ஷன்?"

"தெரிஞ்ச கார்பென்ட்டர் ஒருத்தர்..."

"வேலைப்பாடும் நல்லா இருக்கு. நல்லா இழைச்சு, ஷைனிங் கொடுத்து, வார்னிஷ் கோட்டிங் கொடுத்திருக்காரு. அஞ்சு வருஷத்துக்கொருமுறை வார்னிஷ் பண்ணா போதும். சில வீடுகள்ல ஃபேஷன்னு சொல்லி பிளைவுட் போட்டுடுறாங்க. அது சரியில்ல. ஒரு வருஷத்துலயே பீஸ் பீஸா வந்துடுது... இதுதான் கரெக்ட்" என்றான்.

சுவரையும், உத்தரத்தையும் பார்த்து வியந்தான்.

"மெஷின் வேலை மாதிரி க்ளீனா பண்ணியிருக்காங்க. ஆச்சர்யந்தான். இன்ஜினீயர் வச்சு செஞ்சாலும் அங்க இங்க பிசிறு தட்டும். இது பிரமாதமான ஃபினிஷிங்..." என்றான்.

கிணற்றில் நிறைய தண்ணீரைப் பார்த்து சந்தோஷப்பட்டான். மொட்டை மாடியில் காற்று நன்றாக வீசியதைக் கண்டு, "நல்ல எடமாத்தான் பார்த்து வாங்கியிருக்கே பாலா. என் வீடுகூட இப்படி அமையல. இருபது லட்சம் பணம் கொட்டினோமே தவிர, செட்டா அமையல..." என்றான்.

பாலாவுக்குப் பெருமையாகவும், கூச்சமாகவும் இருந்தது.

பந்தியில் உட்கார்ந்து சாப்பிட்டான். ஒரு ஜோடி கேரளபாணி பித்தளை குத்து விளக்குகள் பிரசண்ட் பண்ணிவிட்டுப் புறப்பட்டான். ஒட்டாமலே நின்ற ராதிகா, விடுதலை பெற்றவள் போல வெளியேறினாள். வரும் வழியில், "உங்க ஃப்ரெண்ட் பெருசா, மாடிவீடு கட்டியிருப்பார்னு நினைச்சேன். ஒண்டுக்குடித்தன சைசுக்கு, அரைகுறையா கட்டியிருக்காரு. நீங்களும் அதை ஆஹா ஓஹோன்னு புகழ்ந்ததோடில்லாம, நம்ம வீட்டைப் பத்தி குறைவா பேசினீங்க. எனக்குக் கொஞ்சமும் பிடிக்கலை, நீங்க பேசினதும்

நடந்துக்கிட்டதும்..'' என்றாள் ராதிகா.

மூர்த்தி சிரித்தான்.

"சொல்லுங்க, உங்க நண்பரை குஷிப்படுத்தத்தானே அப்படிப் பேசினீங்க...?''

"இல்லே...''

"பின்னே.. நம்ம வீட்டை விட இந்த வீடு எப்படி ஒசத்தியாப் போச்சுன்னு கேட்கறேன்...''

"நம்ம வீடுங்கறது, நம்ம வீடில்லை ராதிகா. அந்த வீட்டுக்கு நான் ஒரு பைசா கூட செலவழிக்கலை. அப்பா இடம் வாங்கிப் போட்டிருந்தார். பாங்க்ல பணம் சேர்த்து வச்சிருந்தார். அவர் காலமானதும் அந்தப் பணத்தையெடுத்து பெருசா வீட்டைக் கட்டிட்டேன். நோகாம நோம்பு கும்பிடறதுன்னு சொல்வாங்களே, அது மாதிரி. தவிர, நான் ஒரே வாரிசுங்கறதால நிலமும், பணமும் மொத்தமா கைக்கு வந்தது. அதைக் கொண்டு ஆடம்பரமா ஒரு வீடு கட்டினதுல நம்ம சாமர்த்தியம் என்ன இருக்கு? ஆனா பாலா அப்படியா? ஒரு பேக்ரவுண்டும் இல்லை. அவன் அப்பா தினக்கூலிக்குப் போய்தான் குழந்தைகளைக் காப்பாத்தினார். பாலா தலையெடுத்தான். அவன் வேலைக்குப் போய் சம்பாதிச்சு, ரெண்டு சகோதரிகளுக்கும் கல்யாணம் பண்ணி, அவனும் கல்யாணம் பண்ணிக்கிட்டு, பாடுபட்டு பழைய கடன்களை அடைச்சு, புதுக் கடன் வாங்கி அந்த வீட்டைக் கட்டியிருக்கான். அதை சாமான்யமாய் நினைச்சுடாத ராதிகா. சொல்லப்போனால் அதுதான் மாளிகை'' என்று உடல் சிலிர்த்தான் மூர்த்தி. ●



## படுதலம் சுகுமாரன்



# சின்னன் செய்திகள்

'அந்த ஊர்ல நரித்தலையோட ஒரு சாமியார் வந்திருக்காராம்', 'அந்த பிள்ளையார் கோயில் அரச மரம், பக்திப் பாட்டு பாடுதாம்' - இப்படி என்னத்தச் சொன்னாலும் நாங்க மூளையே இல்லாம நம்புவோம்னு நாட்டுல ஒரு கூட்டம் அலையுது. போன வாரம்தான் டெல்லியில கிஸ்லி அடிச்ச சூனியக்காரி வதந்தி பத்தி சொன்னேன். இந்த வாரம் பள்ளிச் சிறுமி ஒருத்தி பல்லியா மாறிட்டாள்னு மும்பையில வதந்தி வகையா விளையாண்டிருக்கு. 'புனே நகர்ல டி.வி பார்த்துக்கிட்டிருந்த ஒரு சிறுமியை அவங்க அம்மா, தொழுகை பண்ணச் சொன்னாங்களாம். அதைக் கேட்காம அந்தச் சிறுமி புனித நூலை அவமதிச்சதால, பாதி உடம்பு பல்லியா மாறிடுச்சாம். அந்தப் பொண்ணை மும்பை ஜே.ஜே மருத்துவமனைல தான் சேர்த்திருக்காங்க'ன்னு வதந்தி பரவி, மக்கள் கூட்டம் கூட்டமா மருத்துவமனைக்கு படையெடுத்தாங்களாம். அவங்களை திருப்பி அனுப்புறதுக்குள்ள திண்டாட்டமாப் போயிடுச்சாம். அடப்பாவிகளா... பல்லிச் சிறுமி, பாம்புச் சிறுவன் இதெல்லாம் ராமநாராயணன் படத்துல மட்டும்தான்டா வரும். உண்மையில வராதுங்கடா சாமி!

குடும்ப வறுமை காரணமா 'கோக்கு - மாக்கா' யோசிச்சதால கம்பி எண்ணுறாரு அரவிந்த். இவரு ஒரு டெய்லரோட பையன். ஒரு பொண்ணோட (சாப்ட்வேர் இன்ஜினியர்) நட்பு கிடைச்சிருக்கு. பத்தாப்பு கூட முடிக்காத நம்மாளு, டாக்டர்னு சொல்லி தேக்கா ஊசில நூலைக் கோத்திருக்காரு. பொண்ணோட தம்பிக்கு இருக்கிற சர்க்கரை வியாதியை குணமாக்குறேன்னு 'சர்க்கரையா' பேசி, கிலோ கணக்குல பணத்தைக் கறந்திருக்காரு. அப்புறமென்ன, சர்க்கரை (பொய்) கரைஞ்சு போயி, அந்த 'வசூல் ராஜா' ஜெயில்ல 'இன்பேஷண்டா' அட்மிட் ஆயிருக்காரு.



• தீபா ராஜன்

மிஸ். சென்னை போட்டி 'கும்'முனு முடிஞ்சிடிச்சு. வாயை கைகளால பொத்தி, விழிகள் 2 செ.மீ விரிய ஆச்சரியப்பட்ட அழகி (இதானப்பா வழக்கமான ரியாக்‌ஷன்?) தீபா ராஜன். இந்த கேட் வாக் திலகத்துக்கு பூர்விகம் கேரளா. (அட, மிஸ். சென்னையில் பிற மாநிலப் பெண்கள் கலந்துக்கக் கூடாதுன்னு யாராவது கிளப்புங்கப்பா!) 'சினிமாவில் வாய்ப்புக் கிடைத்தால் நடிப்பேன்னு தீபாவும் வழக்கம் போல சொல்லியாச்சு. (அட, அதான குறிக்கோளே!) 'என் ஆறடி உயரத்துக்கு ஏற்ற ஒரே ஜோடி அபிஷேக் பச்சன்தான். கோலிவுட்ல யாரும் இல்ல'ன்னு தீபா சொல்லியாச்சு. அய்யகோ, இந்தக் களங்கத்தைப் போக்க கோலிவுட்டில் யாருமே இல்லையா... ஷேம்! ஷேம்! பப்பி ஷேம்! ○

# வளமான வாழ்க்கைக்கு தரமான அபார்ட்மெண்ட்கள்

**Rs. 4.80* 10.50* லட்சம் வரை**

ஒன்று, இரண்டு மற்றும் மூன்று படுக்கை அறை கொண்ட டீலக்ஸ் அபார்ட்மெண்ட்கள்




இராஜகீழ்பாக்கம்






மேற்கு தாம்பரம்

Also New Projects at Thiruvanmiyur, Arumbakkam

 **98404 64567 / 98407 08073**

## ஹன்ஸா எஸ்டேட்ஸ்

கிவ்ராஜ் எஸ்டேட், 4ஆம் தளம், 624, அண்ணாசாலை, சென்னை - 600 006.
போன் : 2829 2323 / 2829 3135 / 2829 2315
E-mail : hansaestates@vsnl.com

---

# J.C. முதியோர் இல்லம்

**(A Unit of Janakiammal Trust) Regd.**

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு
(I.T. Act 80G excemption) உண்டு.

இயற்கை சூழ்நிலை, படுக்கை வசதிகள், சுவையான சைவ உணவு, இலவச மருத்துவம், தூய்மையான பராமரிப்பு, குறைந்த கட்டணம், அன்பான கவனிப்பு, மனம் குளிரும் சேவை.

ஊனமுற்றவர்களுக்கும், படுத்தபடுக்கையில் உள்ளவர்களுக்கும் சேவை செய்ய எங்கள் இல்லம் காத்திருக்கிறது!

## ENJOY YOUR SECOND CHILDHOOD DAYS AT :

Plot No.30 & 31, D.No.4, Murugan Kovil First Street, (Near Jain Temple) Vivekananda Nagar, Kolathur, Chennai - 99. Phone : 55171667, 26208400 Mobile : 9282173089

**Donations accepted for Home under Public Charitable Trust**

உடலைத் தின்னும் தீயின் வெளிச்சம் மட்டும் பரவிய சுடுகாடு. நள்ளிரவு. ஆந்தையின் அலறல். ஊஊஊ... எனச் சத்தம். காற்றில் இரத்த வாடை. மண்டை ஓடுகள் சிதறிக் கிடக்கும் சாம்பல் வெளி யின் நடுவே, பேய்த்தனமாய் சினிமாவை நேசிக்கும் கமல், இரத்தக் காட்டேரியைக்கூட கவர்ச்சியாகக் காண்பிக்கும் எஸ்.ஜே. சூர்யா, ஆவி துடிக்கக் கவிதை படைக்கும் வைரமுத்து. அட, இவங்க இந்நேரத்துல இங்க என்னப்பா பண்றாங்க? பயப்படாம வாங்க, போய் எட்டிப் பாப்போம்!

**எஸ்.ஜே. சூர்யா:** தமிழ்ப் பாதுகாப்பு இயக்கத்தோட டார்ச்சர் தாங்க முடியலை. பேரை மாத்து, இனிஷியலை மாத்துன்னு வேதாளமா துரத் துறானுங்க. சுடுகாட்டுல தலைமறைவா ஸ்டோரி டிஸ்கஷன் பண்ண வேண்டியதாயிடுச்சு. என்னை மாதிரியே ரொம்ப பாதிக்கப்பட்டது நீங்கதான் கமல்ஜி. அதான் உங்களை வைச்சு படம் பண்றேன்.

**கமல்:** ஆங்... வெல்... சூர்யா, சப்ஜெக்ட் என்னன்னு சொல்லுங்க.

**எஸ்.ஜே.:** க்ரைம் + கிளாமர் ரெண்டையும் சரிசமமா இண்டி, கிழங் கெடுத்துடலாம்ஜி.

# கொடுக்கட்டுமா முத்தம்

**வைரமுத்து:** மயானம்... மனிதனின் இறுதி நியானம்... பொதுவாக கதை முடியும் இடம்... இங்கே மெதுவாக ஒரு கதையைத் தொடங்க வந்துள்ளோம்... அருமை! எங்கே இசைத்தும்பி... என் தம்பி... ஏ.ஆர். ரஹ்மான். அவரும் இரவுப் பறவைதானே! வரவில்லையா?

**எஸ்.ஜே.:** அவரு எத்தியோப்பியாவுல 'எக்குத்தப்பா'ன்னு ஒரு ஆதிவாசிகள் ஆல்பத்துக்கு மியூசிக் மேய்க்கப் போயிருக்காரு. அப்பப்ப செல் வழியா வர்றேன்னு சொன்னாரு.

**கமல்:** ம்... வெல் சூர்யா, என்னோட கெட்-அப்பை சொல்லுங்க. அதை வைச்சு கேரக்டரை டெவலப் பண்ணிக்கலாம். சுவர் இருந்தாத்தான் ஆணி அடிக்க முடியும்னா, சுத்தியலோட பங்கை சும்மா விட முடியாது. ஏன்னா, கெட்-அப்ங்கிறது என்னோட பரிணாமத்துல ஒரு பரிமாண வளர்ச்சி.

**எஸ்.ஜே.:** (மனத்திற்குள்) ஆஹா ஆரம்பிச்சிட்டாரு... அவரு நம்மளை டாமினேட் பண்றதுக்குள்ள, நாம முந்திக்கணும். (சிரித்துக் கொண்டே) சார், நீங்க படத்துல, எக்ஸ்பயரி ஆன இஞ்சி ஜாமைத் தின்னுடுறீங்க. அது இரத்த அணுக்கள்ல இல்லாததும், பொல்லாததும் பண்ணிடுது. அதனால இரவுல ஆணா இருக்கிற நீங்க, பகல்ல பொண்ணா மாறிடுறீங்க.

**வைரமுத்து:** வீரியமான கதை சூர்யா. புதுமையான வரிகள் என்னுள் பொசுக் கென்று பூத்துவிட்டன. பூட்டி வைக்காமல் கொட்டி விடுகிறேன்.

*பகலில் நீ மெல்லினம்! இரவில் நீ வல்லினம்!*
*மொத்தத்தில் நீ தமிழினம்! நடிப்பதிலோர் இலக்கணம்!*

**கமல்:** யெஸ்... குட்... கவிஞரே! ஒப்பனிங்ல வைச்சுக்கலாம். ம்... சூர்யா, பாத்திரம் சூடா இருந்தாப் போதாது. உள்ள பதார்த்தமும், யதார்த்தமா, ஆத்மார்த்தமா சூடா கொதிக்கணும். ஐ மீன், இதுல க்ரைமை எப்படிக் கொண்டு வருவீங்க?

**எஸ்.ஜே:** சொல்றேன் சார். இரவுல ஆணா இருக் கற உங்களால, பகல்ல பொண் ணாகிற

விஷயத்தை உணர முடியாது.

ஒரு கட்டத்துல, ஆணாகிய நீங்க பெண்ணாகிய உங்களையே காதலிக்க ஆரம்பிக்கறீங்க. இதுல, ஆணாகிய உங்களைக் காதலிக்கிற ஒரு இரத்தக் காட்டேரி, காதல் பொறாமைல, பெண்ணாகிய உங்க இரத்தத்தைக் குடிச்சுக் கொன்னுடுது. அப்புறம் நார்மலான ஆணாயிடுற நீங்க, எப்படி காட்டேரிகிட்ட இருந்து, ரயிலேறி தப்பிச்சு, ராவோட ராவா ரஷ்யாவுக்குப் போறீங்கன்னு இரத்தம் கக்க, கக்க சொல்றோம்.

**கமல்:** அமானுஷ்யமான கதை. ஐ லைக் இட். எதுவுமே இல்லாததை 'சூன்யம்'னு சொல்லலாம். எதுவுமே இல்லாத இடத்துல 'சூன்யம்' இருக்குனா, அதை எப்படி எதுவுமே இல்லாததுன்னு சொல்ல முடியும்? இதைத்தான் 'நோம் டி குய்ர்ரி' அப்படிங்கிற ப்ரெஞ்ச் படத்துல சொல்றாங்க. அதைத்தான் நீங்களும் சொல்றீங்க. உங்களுக்கும் என்னை மாதிரி 'தழுவல்'னா, ரொம்பப் பிடிக்கும் போல!

# குடிக்கட்டுமா இரத்தம்!



**வைரமுத்து:** ப்ரெஞ்ச். கேட்கவே ப்ரெஷ்ஷாக உள்ளது. ஆங்கிலம் கலந்து எழுதி அலுத்துவிட்டது. இனி தமிழோடு ப்ரெஞ்ச்சை பிசைந்து தருகிறேன். கேளுங்கள்.

*Gamine பெண்ணே நீ யாரோ! Creme கண்ணே ஆராரோ!*
*Cerise கன்னம் Cuisine சிற்பம் நீயே!*

**கமல்:** ம்..ஓ.கே சூர்யா, உதட்டளவில் இளா



மர் கலந்த படம்னு சொல்லிட்டீங்க. 'உதட்டளவில்' ஏதாவது ஸீன் சொல் லுங்க!

**எஸ்.ஜே:** இரத்தக் காட்டேரியா மல்லிகா ஷெராவத்தைப் போட்டுடலாம். இரத்தக் காட்டேரியோட முத்த ஸீன் வைச்சு மிரட்டிடலாம்.

**வைரமுத்து:**

*மல்லிகை நீயா?*
*கொள்ளிவாய்ப் பேயா?*
*கொடுக்கட்டுமா முத்தம்!*
*குடிக்கட்டுமா இரத்தம்!*

- இப்படி திகிலா சொட்டச் சொட்ட எழுதி விடுகிறேன்.

**எஸ்.ஜே:** படத்துக்கு டைட்டில் இரண் டெழுத்துல 'பேய்'னு வைச்சுடலாம்.

**கமல்:** இல்ல... வேண்டாம் சூர்யா. 'பேய்'ங்கிறது தமிழ் வார்த்தையான்னு சந் தேகம் வரலாம். வளர்றது தேகமா இருந்தா விட்டுடலாம். சந்தேகமா இருந்தா வெட்டிடணும். டைட்டில் வேணும்னா, 'உஷ்'னு வைச்சுக்கலாம். ஏன்னா, 'உஷ்' மொழிகளுக்குள் அடங்காத வார்த்தை. வார்த்தைகளுக்குள் அடங்காத அர்த்தம்!

*(அப்பொழுது ஒரு சிறு புயலடிக்க, திகிலான சத்தங்கள் கேட்க, இரு ஆவிகள் என்ட்ரி ஆகின்றன)*

**எம்.ஜி.ஆர் ஆவி:** என் இரத்தத்தின் இரத்தங்களே! தமிழ் சினிமா எடுப்பவரை, தடுக்க நினைப்ப வரை தாய் தடுத் தாலும் விடாதீர் கள். ஆங்கிலத் தைக்கூட நாம் தமி ழில்தானே உச்சரிக் கிறோம். அதற்காக நச்சரிப்பது பாட் டாளிகளின் உரிமை என்றால், விடாமல் உச் சரிப்பது படைப்பாளிகளின் உரிமை. நான் ஆணையிடு கிறேன். நீதியை சாக விடாதீர்கள்.

**சிவாஜி ஆவி:** ஏம்ப்பா...நான்கூட 'ஒன்ஸ்மோர்'னு நடிச்சிருக்கேன். 'தேவர் மகன்'னு நடிச்சிருக்கேன். அப்பல்லாம் ஒண்ணும் சொல்லாதவங்க, இப்ப என் புள்ளைங்கள வாட்டுறப்போ, என்னால தாங்க முடியலப்பா, தாங்க முடியல. இதோ பாரு. கத்தியால குத்தினா நமக்கு இரத்தம் வரும். ஆனா கத்தியால கத்தி யைக் குத்தினா இரத்தம் வராதே... அது கத்தியோட தப்பா, சொல்லுப்பா.

**எஸ்.ஜே:** *(மனத்துக்குள்)* அய்யய்யோ? வரிசையா வசனம் பேச வந்துட்டாங் களே, இப்ப என்ன பண்ண? *(கிசுகிசுப் பாக)* கமல் சார், வைரமுத்து சார், சுடு காட்டுல சுதந்திரமா டிஸ்கஸ் பண்ண லாம்னு வந்தா, சூழ்நிலை வேற மாதிரி போகுது. நாம நாளைக்கு நைட்டு, ஊருக்கு வெளிய இருக்குற பாழடைஞ்ச வீட்டுல பதுங்கிப் பதுங்கி சந்திக்கலாம். கிளம்புவோமா?

*(அப்போது சூர்யாவின் உதவியாளர் தலை தெறிக்க ஓடி வருகிறார்)*

**உதவியாளர்:** *(படபடப்போடு)* சார், அந்தப் பக்கமா ஓடிருங்க. இந்தப் பக்கத் துல மருத்துவரும், சிறுத்தையும் கையில கபால ஓட்டோட, கும்பலா வர்றாங்க. ஏதோ ஆவிகளுக்கு எல்லாம் தமிழ் சொல் லிக் கொடுக்க, 'இடுகாட்டுத் தமிழ் அக ராதி'ன்னு போர்டைத் திறந்து வைக்கப் போறாங்களாம். இப்படிக்கா ஓடிருங்க. இல்லாட்டி திகிலா ஏதாவது ஆயிடும்.

*(அப்புறமென்ன, அனைவரும் பேய்த் தனமா எஸ்கேப் ஆகுறாங்க!)*

**கற்பனை: முகில்**

# கடல் தரும் திகில்!





• சித்திரவேல்



• முத்து

**கா**த்து. கருப்பு கேள்விப்பட்டிருக்கிறோம். 'கடல் கருப்பு' பற்றி அறிந்ததுண்டா?

"சுனாமிக்குப் பிறகு இப்பத்தான் ஏதோ கடலுக்குப் போறோம். அதுலயும் மண்ணள்ளிப் போட்டு, எங்க பொழப்பையே நாறடிச்சுடுச்சி கடல் கருப்பு" என்று சோக ராகம் பாடுகின்றனர் நாகப்பட்டினம், நம்பியார் நகர் மீனவ மக்கள்.

கடலில் காணப்படும் கரும் பாறைகளைத்தான் கருப்பு என்கிறார்கள் இவர்கள்.

"கடல்ல இதுங்க இங்கதான் இருக்கும்னோ, இங்க இருக்காதுன்னோ சொல்ல முடியாதுங்க. படிப்படியா வளர்ந்துட்டுப் போற தன்மை கொண்டதுங்க. ஒழுங்கில்லாம கூரா, கன்னா பின்னான்னு இருக்கும்" என்று கருப்பின் தன்மை பற்றி கூறுகிறவர்கள்,

"மீன் பிடிக்கப் போறப்போ கடல்ல விழுதுவிட்டு எத்தனை பாகத்தில கருப்பு இருக்குன்னு கண்டுபிடிச்சுடுவோம். அந்தக் குறிப்பிட்ட இடத்தை விட்டுட்டு மத்த பகுதிகள்ல மீன் பிடிப்போம்" என்கிறார்கள்.

இப்படியிருக்க, கருப்பால் இவர்களுக்கு ஆபத்து வந்ததெப்படி?

"சுனாமிக்குப் பிறகு கடலோட தன்மை மாறிப் போச்சுங்க. எங்க என்ன இருக்குன்னே தெரியல. நாங்களும் மாசக் கணக்குல கடலுக்குப் போகாததால சட்டுனு அடையாளம் கண்டுக்க சிரமப் படறோம். போன வாரம் தொழிலுக்குன்னு இல்லாம, சமையலுக்கு மீன் பிடிக்க ஒரு குரூப் போனோம். எப்பவும் கருப்பு கடலுக்கு ரொம்ப தொலைவுல, ஆழத்துலதான் இருக்கும்கிறதால, எங்களுக்கு கருப்பு பத்தின பயம் இல்ல. இருநூறு மீட்டருக்குள்ளதான் மீன் பிடிச்சோம். ஆனா வலை விரிச்ச உடனேயே, எல்லாமே கருப்புல மாட்டிக்கிச்சி. மீட்டெடுக்கறதுக்குள்ல வலை மொத்தமா அறுந்துடுச்சி. கருப்புங்களை இத்தனை கிட்டக்க இதுவரைக்கும் நாங்க பார்த்ததில்ல. இது ரொம்ப அதிசயமான விஷயம். சுனாமிக்குப் பிறகு என்னென்னமோ மாற்றமெல்லாம் நடக்குது. அதுல இதுவும் ஒண்ணு போல" என்று பயத்துடன் பேசினார் மீனவர் முத்து.

"எங்கள்ல 'முளுக்காளுகள்'னு சிலரு இருப்பாங்க. கருப்புல வலை சிக்கறப்போ, படகுல இருந்து அவங்க கடல்ல குதிச்சு, வலைய எடுத்து விடுவாங்க. அப்போ கருப்பால அடிபட்டு காயங்க ஏற்படும். அதைப் பார்த்தா முடியுமா, வயிறுன்னு ஒண்ணு இருக்கே!" என்றார் மீனவ கிராம பஞ்சாயத்தைச் சேர்ந்த சித்திரவேல்.

சுனாமிக்குப் பிறகு மீனவர்கள் இன்னும் முழு வீச்சில் கடலில் இறங்கவில்லை. அப்படிப் போகும்போது இந்தக் கருப்புகள் அவர்களுக்கு மிகப்பெரும் சவாலாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. **- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# குறையொன்றுமில்லை

ஆண்டாள், பகவானின் கேள்விக்குப் பதில் சொல்கிறாள்: "உன்னால் முடியாத காரியம் என்றுகூட ஒன்று இருக்கிறதா...? ஆலின் இலையாய்! ஆலிலையில் படுத்துக் கொண்டிருக்கிறாயே... அந்த ஆலமரத்தின் முழு பீஜம் நீதான் - ஆலமர வித்து. அதிலிருந்து இவ்வளவு பெரிய விருக்ஷம் உண்டாகியிருக்கிறது... அந்த மாதிரி, எல்லாவற்றுக்கும் மூல காரணம் நீயல்லவோ! உன்னால் முடியாததுகூட ஒன்று உண்டோ!" என்று சொல்லி முடிக்கிறாள்.

அகடிதகடனா சாமர்த்தியம் என்று பெயர் அதற்கு. அந்த எம்பெருமான் ஆல இளந்தளிரிலே சயனித்துக் கொண்டிருக்கிறானே... அவன் 'மஞ்சாடு வரையேழும் கடல்கள் ஏழும் வானகமும் மண்ணகமும் அஞ்சாமல் வயிற்றடக்கி' காக்கும் பிரான். சமஸ்த பூத பாண்டங்களையும் தன் உதர பந்தத்துக்குள்ளே அடக்கி வைத்துக் கொண்டிருக்கிறான் பரமாத்மா.

அந்த எம்பெருமான் எவ்வளவு பளு உடையவன்! அப்படிப்பட்ட பளு உடைய பரமாத்மா, அந்த இளம் தளிரின் மேலே படுத்துக் கொண்டிருக்கிறான், என்றால் அந்தத் தளிரால் அவனைத் தாங்க முடியுமா...? அதைப் பார்த்துத்தான் மார்க்கண்டேய மஹரிஷி ஆச்சர்யப்படுகிறார்: "சர்வத்துக்கும் ஆதார பூதன் நீ... நீ தாங்குகிறாயா? அந்த இளந்தளிர் உன்னைத் தாங்குகிறதா?" என்று.

பார்க்கிறபோது நமக்கு அந்த இளந் தளிர் பகவானைத் தாங்குவதாகத்தான் தோன்றுகிறது.

'வடஸ்ய பத்ரஸ்ய புடே சயனம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி'

என்று தியானம் பண்ணுகிறோம்.

அந்த சின்ன இளம் தளிர் தாங்குகிற மாதிரி தெரிகிறதேயொழிய, அந்தத் தளிரையும் தாங்கிக் கொண்டு சமஸ்தத்தையும் தாங்குபவன் அவன்தான். - இதையே மார்க்கண்டேய மஹரிஷி எடுத்துக் காட்டுகிறார்.

பெரிய யக்ஞம் நடக்கிற இடத்திலே தொன்னையில் நெய் வைத்திருப்பார்கள். அந்த நெய்க்கு தொன்னை ஆதாரமா? தொன்னைக்கு நெய் ஆதாரமா என்றால், நெய்க்கு தொன்னைதான் ஆதாரம்.

ஹோமத்தில் எதைச் சேர்க்கிறார்கள்...? தொன்னையையா சேர்க்கிறார்கள்? நெய்யைத்தானே சேர்க்கிறா/

கள்! நெய்க்கு இங்கே வேலை இல்லை என்று ஆனால், தொன்னைக்கு என்ன வேலை?!

ஆகையினால் நெய்தான் தொன்னையைத் தாங்குகிறது. தொன்னை தாங்குகிற மாதிரி தெரிந்தாலும், உள் கண் கொண்டு நாம் நோக்கினோமானால், நெய்தான் தொன்னையைத் தாங்குகிறது.

அந்த மாதிரி ஆலம் இளந்தளிரிலே எம் பெருமான் படுத்துக் கொண்டிருந்தாலும், இளந்தளிர் அவனைத் தாங்குவது போல் காட்சியளித்தாலும், உட்கண்ணால் பார்க்கக்கூடிய மகான்களுக்கு, சமஸ்தத்தையும், அந்தத் தளிரையும் தாங்கிக் கொண்டிருக்கக்கூடிய ஆதாரபூதன் அவன்தான் என்பது ஸ்பஷ்டமாகப் புலப்படும்.

அதனால்தான் பூத ப்ருதே நம:, பூத ப்ருத் பாவ: என்று அவனைத் துதிக்கிறோம். பாவயதீதி பாவ: - அவனே எல்லாமாய் விளங்குகிறான். அதனால்தான் நாம் பஞ்ச பூதங்களையும் ஆராதித்துப் பூஜை செய்கிறோம். தனியே பகவானுக்குப் பூஜை பண்ணுகிறபோது, இந்த அக்னிக்கு ஹோமம் எதற்கு? அக்னியைப் பிரதிஷ்டை பண்ணி ஹோமம் வேறு பண்ண வேண்டுமா? என்பது கேள்வி. அக்னி ரூபியாய் பகவான் இருப்பதனாலே, அப்படிப் பண்ணுகிறோம். அக்னியாய் இருந்து பலன்னைக் கொடுப்பதனாலே, வாயுவாய் இருந்து பலனைக் கொடுப்பதனாலே, அந்தந்த ரூபமாய் அவன் இருப்பதனாலே, அத்தனை தேவதைகளுக்கும் நாம் பூஜை பண்ண வேண்டும். அந்தந்த தேவதைகளைத் திருப்திப் படுத்துகிறபோது, திருப்தி யாருக்கு ஏற்படுகிறது...? அந்த எம் பெருமானுக்குத்தான் ஏற்படுகிறது... வேதாந்தர்யாமியாய் அக்னிக்கு விசேஷ சக்தியை பகவான் கொடுக்க, அந்த அக்னியினிடத்திலிருந்து பெறுகிற சக்தியை நாம் உணர்கிறோம், பெறுகிறோம், பயன் பெறுகிறோம்.

ரிக் வேதத்தில் முதல் மந்திரமானது அக்னியைப் புரோகிதன் என்று கொண்டாடுகிறது. புரோகிதன் என்றால் யார்...? மேல் வரும் காலத்தில் நமக்கு க்ஷேமத்தை உண்டாக்கக்கூடியவர். அதனால் அக்னியிலே கர்மாவை நாம் பண்ணுகிறோம். இந்த அக்னியைப் பார்த்தால்



எல்லா தேவதைகளுக்கும் சந்தோஷம். ஏனென்றால், தேவர்களுக்கெல்லாம் ஹவிஸைக் கொண்டுபோய் அவன்தான் கொடுக்கிறான். ஆகவே அக்னி என்றால் எல்லா தேவதைகளுக்கும் ரொம்ப இஷ்டம். அக்னி கடைக்கோடி தேவதை. விஷ்ணு பரம: அதனால்தான் நக்ஷத்திரேஷ்டி என்கிற மந்திரத்தில் முதல் நக்ஷத்திரமாக கிருத்திகா நக்ஷத்திரத்தைச் சொல்லியிருக்கிறது. லௌகீகமாய் அஸ்வினி, பரணி, கிருத்திகை என்று. மூன்றாவது நக்ஷத்திரமாக கிருத்திகையைச் சொல்கிறோம். ஆனால், வேதத்தில் எங்கு பார்த்தாலும் கிருத்திகை நக்ஷத்திரத்தைத் தான் முதலில் சொல்லியிருக்கிறது. அந்த நக்ஷத்திரத்துக்கு அதிஷ்டான தேவதை அக்னி ஆனதனாலே, முதல் தேவதை ஆனதனாலே, கிருத்திகையை முதலில் வைத்து, வேதமே நமக்குக் கற்றுக் கொடுக்கிறது. அந்த அக்னியை உபாஸனை பண்ணி, வைஷ்வானர வித்யா என்றொரு வித்யை, அந்த வித்யையைக் கொண்டு அக்னியை உபாஸனை பண்ணுகிறபோது, அந்த ஔபாஸனாக்னியிலே எம் பெருமான் உயர்ந்த ரீதியிலே காட்சியளிக்கிறான்.

அதே மாதிரி திரேதாக்னி என்று யக்ஞத்திலே மூன்றுவித அக்னிகளைச் சொல்லியிருக்கிறது. அவை உயர்ந்த

'காருகபத்யம்
ஆகவமனீயம்
தக்ஷிணாக்னி'

திரேதாக்னிக்கு மத்தியிலே இருந்தபடி, அக்னிஹோத்ரம் பண்ணக் கூடிய மகான்கள் உபாஸனை பண்ண வேண்டும்.

இந்த மூன்று அக்னிகளுள் காருகபத்யம் என்பது பிரதான ஹோம குண்டம். மூன்று அக்னி குண்டங்களிலும் அக்னி ஜொலிக்கிறது. அக்னிக்கு நடுவிலே எம் பெருமான் லக்ஷ்மியோடு காட்சியளிக்கிறான்.

இப்படி, அந்தந்த தேவதையாய் இருந்து, அந்த தேவதைக்குரிய சக்தியாகவும் இருந்து, பலனைக் கொடுக்கிறான் பரமாத்மா. அதனால்தான் ஹோமாதிகளெல்லாம் நடக்கின்றன. ஹோமங்களையெல்லாம் பண்ணும்படி சாஸ்திரமும் விதிக்கிறது.

அக்னியைக் கொண்டு வருவதும் அதைப் பிரதிஷ்டை பண்ணுவதும் - எல்லாமே பகவத் அவதார க்ரியை என்கிறார் சுவாமி தேசிகன்.

யாதவாப்த்யுதயம் என்கிற கிரந்தத்திலே ரொம்ப அழகாகச் சொல்கிறார்.

யக்ஞத்துக்காக தீக்ஷை வகிப்பவர்கள், அத்வர்யு, ஹோதா, உத்காதா, ஆக்னித்ரன், அர்ச்சாவாகன், மைத்ராவருணன் போன்ற எல்லா ரித்விக்குகளையும் அழைத்துக் கொண்டு காட்டுக்குப் போக வேண்டும். அங்கே போய் அரணிக் கட்டையைக் கடைந்து, அக்னியை எடுக்க வேண்டும். இப்படி எடுத்த அக்னியை ரொம்ப ஜாக்கிரதையாக, அணையாமல் சம்ரக்ஷித்து, சிரஸிலே ஜாக்கிரதையாக எழுந்தருளப் பண்ண வேண்டும். அப்புறம் சத்ர சாமராதிகள் வீச, ஸ்வஸ்தி வாசகம் சொன்னபடியே, வாத்ய கோஷம் - முழக்கங்களுடன் நதியைக் கடந்து வந்து, அதன் உத்தர பாகத்திலே அதை எடுத்து வர வேண்டும். நதிக்கு உத்தர பாகத்திலே



# தடுமாற்றம்!

'தூள்' பட நடனக் காட்சிக்காக ஸ்விட்சர்லாந்து போயிருந்தோம். ரொம்ப குளிர்ச்சியான பகுதி. மலை உச்சியில் வைத்து ஷூட் செய்வதாகத் திட்டம். ஹெலிகாப்டரில் விக்ரம், ஜோதிகாவை மலை உச்சிக்குக் கொண்டு சென்று நிற்க வைத்துவிட்டு, நானும் கேமராமேனும் ஹெலிகாப்டரில் இருந்தபடி ஷூட் செய்தோம். திடீரென்று காற்று கீழ் நோக்கி இழுப்பது போல் இருந்தது... சட்டென்று ஹெலிகாப்டர் நிலை தடுமாறி விட்டது... பைலட் கொஞ்சம் பேலன்ஸ் செய்யாமல் இருந்திருந்தால் இப்போது உங்களிடம் பேசிக் கொண்டிருந்திருக்க முடியாது. அந்த திகிலை என்றைக்கும் மறக்க மாட்டேன்.

- நடன இயக்குநர் **கல்யாண்**

தொகுப்பு: **முத்து**



காருகபத்யம் என்ற ஹோம குண்டம் இருக்கும். அதில் அக்னியைப் பிரதிஷ்டை பண்ண வேண்டும். அதற்கு ஹோமம் பண்ணிய பிற்பாடு, அதிலிருந்து எடுத்து ஆகவமனீயம் தக்ஷிணாக்னி - மற்ற ஹோம குண்டங்களில் சேர்த்து ஹோமம் பண்ண வேண்டும்.

மூன்று ஹோம குண்டங்களிலேயும் அக்னி ஜ்வலித்து, ஹோமம் நடந்து முடிந்ததானால், அந்த மூன்று ஹோம குண்டங்களுக்கும் நடுவிலே எம் பெருமான் பிரதிஷ்டாபனமாகி, நல்ல முறையிலே நம்மை அனுக்கிரஹம் பண்ணுகிறான். இவ்வாறு மூன்று அக்னி ரூபமாய் பகவானே இருக்கிறான் என்று வேதமானது இங்கே காட்டுகிறது.

இது யக்ஞப்ரகரணம். கிருஷ்ணாவதாரமே இப்படித்தான் தோன்றிற்று என்று காண்பிக்கிறார்.

தேவகி - வசுதேவர் என்கிற அரணிக் கட்டையிலிருந்து கிருஷ்ணனாகிற அக்னி உண்டானான். உண்டான அந்த கிருஷ்ணனாகிற அக்னியை வசுதேவர் என்கிற அத்வர்யு, தலையிலே எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வருகிறார்.

'மாயனை மன்னும் வடமதுரை
மைந்தனை
தூயப் பெருநீர் யமுனைத்
துறைவனை

என்று ஆண்டாள் இதை வர்ணிக்கிறாள்.

கம்பீரமாக ஓடக்கூடிய யமுனா நதி, பகவானின் அவதார காலத்திலே முழங்கால் அளவுக்கு வற்றிக் கொடுத்ததாம்! இப்படி உபகாரம் பண்ணியதாலே, தூயப்பெருநீர் என்று யமுனா நதியைக் கொண்டாடுகிறார்கள்.

அந்நதியைக் கடந்து குழந்தை கிருஷ்ணனை எடுத்துக் கொண்டு வருகிறார் வசுதேவர். கோகுலத்தில், நந்தகோபனின் கிருஹத்தில் காருகபத்ய அக்னியாகப் பிரதிஷ்டை பண்ணுகிறார். அவன் அங்கே ஜ்வலிக்கிறான்.

கோகுலத்தில் நடந்த கிருஷ்ண லீலைகள் மொத்தம் காருகபத்ய அக்னியிலே பண்ணுகிற மந்திரார்த்தம்தான். அந்த மந்திரங்களுக்கு என்ன பொருளோ, அதைத்தான் பகவான் லீலையாக அங்கே காட்டியிருக்கிறான். அதற்கப்புறம் தக்ஷிணாக்னி, ஆகவமனீயம் என்று இரண்டு ஹோம குண்டங்களாயிற்றே... என்று கேட்டால், ஆகவமனீயம் என்பது பிருந்தாவனம்; துவாரகை என்பது தக்ஷிணாக்னி.

கிருஷ்ணாவதாரத்தை நினைத்து, கோகுலம், பிருந்தாவனம், துவாரகை ஆகிய மூன்று இடங்களிலும் பகவான் இருந்ததை, அவன் பண்ணிய லீலைகளை நினைத்தால், சர்வ யக்ஞங்களும் முடிந்து போய்விடுகின்றன. இந்த யக்ஞத்தினுடைய பெருமையைக் காட்டித்தான் பகவான் கிருஷ்ணாவதாரம் பண்ணி, மூன்று இடங்களிலும் ஜ்வலித்தான்.

(வளரும்)

# ஜோசப்

ஐம்பத்தேழு வயதான ஜோசப், கீழ்பாக்கம் கல்லறை தோட்டத்தின் வெட்டியான். தமது தொழிலில் தினம்தோறும் திகிலைச் சந்தித்து வரும் இவரிடம், எவ்வளவு பெரிய மனிதராக இருந்தாலும் கொஞ்சம் அடக்கியே வாசிப்பார்களாம். 'காரியம்' ஒழுங்காக நடக்க வேண்டுமென்பதுதான் காரணம். கேஷுவலாக கல்லறை ஒன்றின் மீது உட்கார்ந்து கொண்டு பேசத் தொடங்கினார்.

"நீ படிச்ச படிப்புக்கு வெட்டியான் வேலைக்குத்தான் லாயக்குன்னு சொல்லி எங்கம்மா பெரிய இடத்து சிபாரிசு மூலமா இந்த வேலையை வாங்கித் தந்தாங்க. அப்படி இப்படின்னு முப்பத்தஞ்சு வருஷம் ஓடிப் போச்சு. இத்தனை வருஷத்துல என்னிக்கும் பேய், பிசாசுக்கு பயந்து வேலை செய்யாம ஒதுங்கினது இல்ல... ஆனா இதெல்லாம் இருக்குங்கற நம்பிக்கை எனக்கு இருக்கு. வெளில போயிட்டு ராத்திரி நேரத்துல சுடுகாட்டுக்குள்ள வருவேன்... திடீர்னு யாரோ நம்மள பின் தொடர்ற மாதிரி சரக்... சரக்னு சத்தம் வரும்... திரும்பினா ஏதோ நிழலாடுற மாதிரி தெரியும்... டக்குன்னு



# இளவரசி

மயிலாப்பூர் மருத்துவமனை வட்டாரத்தில் இளவரசுவைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. ஆபத்து என்றவுடன் 'சைரன்' முழங்க ஓடிவந்து நிற்கும் ஆம்புலன்ஸ் டிரைவர். தமது பதினைந்து வருட த்ரில் அனுபவத்தை பத்தே நிமிடத்தில் கூறினார்...

"திடீர்னு அவசரம்னு போன் வரும்... நேரா ஸ்பாட்டுக்குப் போவேன். சம்பந்தப்பட்ட ஆள் ரொம்ப சீரியஸான நிலைமையில இருப்பாங்க. அவங்க சொந்தக்காரங்களுக்கு படபடப்புல ஒண்ணுமே புரியாது... ஆனா நாம சொல்றதையும் கேட்க மாட்டாங்க... ஒருதடவை இப்படித்தான் ஒரு ஹார்ட் பேஷண்டுக்கு ஆக்சிடென்ட் ஆயிடிச்சு. பக்கத்துல இருக்கற ஹாஸ்பிட்டலுக்குப் போகலாம்னு நான் சொன்னதைக் கேட்காம, அவங்க சொல்ற ஹாஸ்பிட்டலுக்குத்தான் கூட்டிப் போகணும்னு பிடிவாதம் பிடிச்சாங்க... ஆனா அதுவரைக்கும் உயிர் தாங்காதுன்னு எனக்குத் தெரியும்.

வேற வழியில்லாம வண்டியை ஓட்டறேன். வழி நெடுக அந்த ஆள் மூச்சு விடத் திணர்றதும், அதைப் பார்த்துட்டு அவங்க சொந்தக்காரங்க அலர்றதும், அப்பப்பா... இப்ப நினைச்சாலும் திகிலா இருக்கு. இதே மாதிரி ஒரு தடவை ஹார்ட் பேஷண்டை எடுத்துக்கிட்டு ஹாஸ்பிட்டலுக்குப் போறோம்... கத்திப்பாரால ஹெவி டிராஃபிக் ஜாம்... வண்டியை நகர்த்தக்கூட முடியல... நேரம் கூடிக்கிட்டே போகுது. சிக்னல் கிளியர் ஆகற மாதிரி தெரியல... எனக்கா டென்ஷன் ஏறிக்கிட்டே போகுது... ஒருவழியா சிக்னல் கிள



மறைஞ்சிடும்... கொஞ்ச தூரம் போனா எதிர்ல யாரோ வர்ற மாதிரி தெரியும்... அந்த மாதிரி நேரத்துல என்னையே அறியாம உடம்பு சிலிர்க்கும். அப்படி சிலிர்த்ததுன்னா நிச்சயமா அது ஏதோ பேய், பிசாசுன்னு எனக்குப் புரிஞ்சுடும்... ஆனா அதைப் பத்தி அலட்டிக்காம நேரா வீட்டுக்குள்ள போய், ஒரு குளியல் போட்டுட்டு, சாமி கும்பிட்டுட்டு, தூங்கப் போயிடுவேன். இது மாதிரி எப்பவாவது நடக்கும். ஆனா அதையெல்லாம் நினைச்சுப் பயந்தா தொழில் நடக்குமா..." என்று கேட்கும் ஜோசப்பின் வீடும் சுடு காட்டுக்குள்ளேயே இருக்கிறது. இங்கு வந்துதான் இவருக்கு ஏழு குழந்தைகள் பிறந்தனவாம். "என் குழந்தைகளோட விளையாட்டு மைதானமே இந்த சுடுகாடுதான்" என்கிறார் ஜோசப்.

யர் ஆயிடுச்சி... ஆனா எங்களோட துரதிருஷ்டம்.. பேஷண்ட் அப்பவே இறந்துட்டாரு... இந்த மாதிரி சமயத்துல அடுத்து என்ன நடக்கப் போகுதோன்னு மனசு பதறும் பாருங்க... அப்பப்பா..." என்ற இளவரசு, "என் வாழ்க்கை இப்படித்தான் திகிலாவே கழியணும்னு ஆண்டவன் எழுதியிருக்கான் போல... இருந்தாலும் ஆபத்துக்கு உதவ முடியுதேங்கிற சந்தோஷமும் இருக்கத்தான் செய்யுது" என்றார் புன்னகையோடு.

# மணி

"நாங்க கடலுக்குள்ள காலடி எடுத்து வைக்கிற நொடியிலிருந்து, திரும்ப தரையில காலடி எடுத்து வைக்கிற வரைக்கும் ஒவ்வொரு செகண்டும் திகில் தாங்க" என்றார் மீனவர் மணி. கட்டுமரம், ஃபைபர் போட், விசைப்படகு என்று எல்லாவற்றிலும் கடலுக்குச் சென்று மீன் பிடித்து வந்திருக்கும் மணி, சென்னை நொச்சிக்குப்பத்தைச் சேர்ந்தவர்.

"மீன் பிடிக்கக் கடலுக்குள்ள போறப்ப, ரெண்டு விஷயம்தாங்க ரொம்ப ஆபத்தானது... ஒண்ணு கட்டு மரத்துல போகும்போது விசைப்படகு வந்து மோதறது... இன்னொண்ணு சுறா மீன்... பெரும்பாலும் ராத்திரி ரெண்டு மணி சுமாருக்குத்தான் கடலுக்குள்ள போவோம்... கண்ணுக்கெட்டின தூரம் வரைக்கும் கும்மிருட்டா இருக்கும். பக்கத்துல யார் இருக்காங்கங்கறது கூடத் தெரியாது... இந்த மாதிரி நேரத்துல கட்டுமரத்துல போகும்போது, எப்போ வேணும்னாலும் விசைப் படகு மோத வாய்ப்பிருக்கு... விபத்து சாதாரணமா நடக்



கறதுதான். ஆனா இந்த விசைப் படகு மோதினா கட்டுமரத்துல போன யாருமே மிஞ்சறது சிரமம்... அந்த பீதியோடதான் கடலுக்குள்ள போவோம். அதுல கொஞ்சம் கூடக் குறையாம திரும்புவோம்... அடுத்து சுறாமீன்... ஆழ்கடலுக்குப் போகும்போது திடீர்னு 29 அடி, 30 அடி கொண்ட சுறா வரும். பட்டுன்னு நம்ம காலையோ, கையையோ கவ்வி இழுத்துடும். இழுத்துடிச்சின்னா அவ்ளோதான், அதோ கதி... இதனாலதான் உயிரையே பணயமா வச்சு செய்யற தொழில்னு இதைச் சொல்றாங்க...'' என்றவர், ''ஒரு தடவை சுறாமீன் எங்க போட்டுக்குப் பக்கத்துல இருக்குன்னு அசைவை வச்சு தெரிஞ்சுக்கிட்டேன்... என்ன செய்யறதுன்னே புரியலை... நல்லவேளை போட்ல ஒரு இரும்புக்கம்பி இருந்தது. அதை எடுத்து சரமாரியா மீனைக் குத்திட்டு, வேக வேகமா தப்பிச்சேன். இருந்தாலும் திரும்பி வர்றப்போ அது என்னைத் துரத்தற மாதிரி ஒரு பயம்... உடம்பெல்லாம் வெடவெடத்து கரைக்கு வந்து சேர்ந்தேன்...'' என்றார் மூச்சிரைக்க.

# சாரதி

ஐம்பது, அறுபது பேர் கொண்ட சுற்றுலாக் குழுக்களுக்குத் தலைமை தாங்கி அடிக்கடி பத்ரிநாத், ராஜஸ்தான், பீகார் என்று டூர் செல்வதுதான் சாரதியின் பிரதான பணி. 'சந்தோஷத்தைத் தரும் அளவுக்குச் சங்கடங்களையும் தரு பவை பயணங்கள்' என்றவர், தமது திகில் அனுபவங்களை விவரித்தார்.

''பத்ரிநாத்திலிருந்து கீழே இருபத்தைந்து கிலோமீட்டர்ல 'பண்டுகேஷ்வர்'னு ஒரு இடம் இருக்கு. ரொம்ப ஆபத்தான இடம். மலைச்சரிவு அடிக்கடி நடக்கற பகுதி அது... அங்க வர்றவங்க திடீர்னு 'பாரி... பாரி'ன்னு சத்தம் போடுவாங்க. அப்படி அவங்க சத்தம் போட்டா, அங்க மலைச்சரிவு ஏற்பட்டு பெரிய பெரிய கற்கள் கீழே விழப் போகுதுன்னு அர்த்தம். உடனே அந்த ஏரியாவுக்கு வந்தவங்க எல்லாரும் தலை தெறிக்க ஓடுவாங்க... எப்போ வேணும்னாலும் கல் தலைல விழுந்து உயிர் போகும்ங்கிற நிலைமை... ஆனா அதுக்காக பயந்துக்கிட்டு யாரும் போகாம இருக்கறதில்ல...'' என்றவர், கொஞ்ச நேரம் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு தொடர்ந்தார்.

''ஒருதடவை கயாவில் இருந்து பனாரஸ் போறதுக்காக, இருபத்தஞ்சு பேர் கயா ரயில்வே ஸ்டேஷன்ல நிக்கறோம். வண்டி அங்க ஏழு நிமிஷம்தான் நிக்கும். அதுக்குள்ள எல்லா லக்கேஜையும் ஏத்திட்டு நாங்களும் ஏறிடணும். வண்டி வர்றதுக்கு அஞ்சு நிமிஷத்துக்கு முன்னால அந்த பிளாட்ஃபார்ம்ல ஒரு கூட்ஸ் வண்டி வந்து நின்னுடுச்சி. அடுத்த பிளாட்ஃபார்ம்ல நாங்க போக வேண்டிய வண்டி... குறுக்கே கூட்ஸ் வண்டி இருக்கறதால, மேல்படி வழியா ஏறி அடுத்த பிளாட்ஃபார்முக்கு எல்லா லக்கேஜையும் ஏத்தி முடிச்சு, நாங்க ஏர்றதுக்குள்ள இருபத்தஞ்சு நிமிஷம் ஆயிடுச்சு. வெறும் ஏழே நிமிஷம் நிக்கற வண்டி அன்னிக்கு ஏன் அவ்ளோ நேரம் நின்னது தெரியுமா...? நாங்க எல்லோரும் ஒரு வித திகிலோட அங்கயும், இங்கயும் ஓடறதைப் பார்த்த அந்த ஊர் தாதா ஒருத்தர்தான் அந்த டிரெயினை நிறுத்தி வச்சிருந்திருக்காரு...''



- இரா. முத்துக்குமார்

படங்கள்: ராஜன்

DR. REDDY'S

# மதில் மேல் பூனை!



சென்ற இரண்டு வருடங்களாக உலகின் கையிருப்பு நாணயம் (World Reserve Currency) எனக் கருதப்பட்டு வந்த அமெரிக்க டாலர், மற்ற நாடுகளின் நாணயத்துக்கு எதிராக பலவீனமாகவே இருந்து வருகிறது. அமெரிக்காவின் இறக்குமதியின் மதிப்பு, ஏற்றுமதியைவிட கூடுதலாகவே இருக்கிறது. இதனால் அமெரிக்காவின் பொருளாதாரமும் ஓரளவுக்கு பாதிப்புக்கு உள்ளாகியிருக்கிறது. இதைத் தொடர்ந்து அமெரிக்கா தனது பொருளாதாரத்தில் பல சீர்திருத்த நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறது. அதில் ஒரு முக்கிய அம்சமாக, தனது வட்டி விகிதத்தை ஓரளவுக்கு ஏற்ற திட்டமிட்டிருப்பதாக செய்திகள் வந்திருக்கின்றன. அப்படி வட்டி விகிதம் ஏறினால் அமெரிக்க டாலரின் மதிப்பு ஓரளவுக்கு ஏறும். டாலருக்கான தேவையும் கூடும். அப்போது அமெரிக்க முதலீட்டு நிறுவனங்கள் வெளிநாடுகளில் முதலீடு செய்யும் டாலரின் அளவு கொஞ்சம் குறையக்கூடும். இது ஓரளவுக்கு உலகிலுள்ள எல்லா நாடுகளின் பங்கு மார்க்கெட்டுகளையும் பாதிக்கக்கூடும். ஆனால் நிச்சயமாக இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை. மதில் மேல் பூனை கதைதான். இன்னும் ஓரிரு மாதங்களில் நிலைமை தெளிவாகலாம்.

ஒரு சுவையான செய்தி... நமது மத்திய நிதி மந்திரி சமீபத்தில் தமது பட்ஜெட்டைப் பற்றிப் பேசும்போது, தனிப்பட்டவர்களுக்குத்தான் அளித்துள்ள வரிச் சலுகைகளினால் அவர்கள் கையில் பணப் புழக்கம் அதிகமாக இருக்கும் என்று தெரிவித்திருக்கிறார் (இது ஓரளவு உண்மை. - ஆனால் இந்தச் சலுகை விஷயம் மூத்த குடிமகன்களுக்குப் பொருந்தாது). இந்த அதிக பணப் புழக்கத்தில் 60 சதவிகிதத்தை நுகர்பொருள்கள் வாங்குவதற்கும், மீதி 40 சதவிகிதத்தை சேமிக்க எடுத்து வைக்க வேண்டுமென்றும் சொல்லியிருக்கிறார். இது மிக நல்ல யோசனை. சேமிப்பினால்தான் நாட்டின் பொருளாதார வளர்ச்சி கூடும்.

பங்கு மார்க்கெட் இறங்குமுகமாக இருப்பதைப் பற்றி குறிப்பிட்டிருந்தோம். இருந்தாலும் ஏதாவது பங்கில் முதலீடு செய்யலாம் என்று நினைப்பவர்கள், டாக்டர் ரெட்டீஸ் லேபரட்டரீஸ் (Dr. Reddy's Laboratories) பங்குகளை வாங்கலாம். இது பிரசித்தி பெற்ற மருந்து உற்பத்தி நிறுவனம். நன்றாகச் செயல்பட்டு வருகிறது. தொலைநோக்கில் இது நல்ல முதலீடாக இருக்கும்.

**- வி. கோபாலன்**



# சர்ச்சை சர்வே 2 ரிசல்ட்!

ரூ.100 பரிசு பெறும் வாசகர் கருத்துகள்

## ஸ்டாலின் அரசியல் பணிகளால் தி.மு.க.வின் இமேஜ் உயர்ந்திருக்கிறதா?

**49%** ஆம்

**51%** இல்லை

### ஆம்!

அ.தி.மு.கவில் ஜெயலலிதாவுக்குப் பிறகு யார்? என்ற கேள்விக்கு விடை காண்பது கஷ்டம். ஆனால், தி.மு.கவில் 'கலைஞருக்குப் பிறகு ஸ்டாலின்' என்று அக்கட்சியின் மூத்த தலைவர்களே முன்மொழிந்து ஏற்றுக்கொள்ளும் வகையில், தமது அரசியல் பணிகள் மூலம், தமது இமேஜையும், கட்சியின் இமேஜையும் ஸ்டாலின் உயர்த்தி வருகிறார்!

**- கே.கஸ்தூரி கதிர்வேல், வேலூர்**

### இல்லை!

ஆதரவாளர்களிடையே தி.மு.க. இமேஜ் எவரெஸ்டை எட்டியிருக்கலாம்... ஆனால், எதிரிகளிடையே தி.மு.க. இமேஜ் பாதாளத்தைத் தொட்டுவிட்டது. ஸ்டாலின் அரசியல் பணிகளால் தி.மு.க. இமேஜ் உயர வழியில்லை... காரணம், ஸ்டாலின் கூட்டிக் கொடுத்த சோறு சொல்லிக் கொடுத்த வார்த்தை!

**- என்.பாலு, அக்ரஹாரம்-639 11**

## பிரசுரத்துக்குத் தேர்வானவை...

### ஆம்!

கடும் உழைப்பு, சிறைவாசம், கட்சிக்குக் கட்டுப்பட்டு நடப்பது, தகுதியை வளர்த்துக் கொண்டு படிப்படியாக மேலே வருவது போன்றவற்றால் ஸ்டாலின் இமேஜ் உயர்கிறதே தவிர, கெடவில்லை.

**- பி.பத்மா, அரங்கநாதபுரம்**

தலைவரின் மகன் என்றாலும் போராட்டங்களில் பங்கேற்பு, சிறைவாசங்கள் என்று பழுக்கக் காய்ச்சிய இரும்பென்றால்தான் கட்சிக்கு இமேஜ் கூடும். ஸ்டாலின் அத்தகைய இரும்பாகத்தான் உருவாகியுள்ளார்.

**- எஸ்.திருமலை, கோவை**

ஐந்தாண்டு காலம் சென்னை மேயராக இருந்தபோது ஸ்டாலின் ஆற்றிய பணிகள், வாகன நெரிசல் இல்லாமல் இருக்கக் கட்டிய மேம்பாலங்கள், கட்சியினரை அரவணைத்துச் செல்லுதல், சட்டமன்றத்தில் நடந்துகொள்ளும் விதம், அனைத்துக் கட்சி தலைவர்களையும் மதித்தல் போன்றவற்றால் அவர் இமேஜ் உயர்ந்திருக்கிறது.

**- ஏ.எஸ்.கணேசன், சென்னை**

### இல்லை!

கலைஞரையும், மகனையும் தராசில் வைத்தால், தந்தையின் பேச்சாற்றல், எழுத்தாற்றல், மதி நுட்பம், ராஜதந்திரம் இப்படி எந்தத் தகுதியையும் ஸ்டாலின் வளர்த்துக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. பிறகெப்படி இமேஜ் உயரும்?

**- இரா.இராஜேந்திரன், மயிலாடுதுறை**

ஸ்டாலின் அரசியல் பணிகள், கட்சிக் கண்ணோட்டத்தில் அமைந்துள்ளன. மக்களை ஈர்க்கும் தியாக அரசியல் பணிகள் அவரிடமில்லை. கருணாநிதி வரைதான் அவரின் இமேஜ்!

**- ஜவகர், மடிப்பாக்கம்**

ஸ்டாலினுக்கு இருப்பது தந்தையின் பின்னணிதான். ஆதலால் அவர் பின்னால் இருப்பது மக்கள் கூட்டம் இல்லை; வெறும் மாயைக் கூட்டம்தான்! தி.மு.க. இமேஜ் இதனாலெல்லாம் உயரப் போவதில்லை.

**- மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்**

# நடக்குமென்பார்; நடக்கும்!



மீன ராசிக்காரரான நடிகை சந்தியாவுக்கு புது முயற்சிகள் வெற்றி தரும்

**மேஷம்** : உங்க தெய்வ பலமும், தெய்வீக ஈடுபாடும் கூடறதால சகல காரியங்கள்லேயும் அனுகூலமான பலன்கள் கிடைக்கும். குலதெய்வப் பூஜை, பிரார்த்தனை நன்மை தரும். கொஞ்சம் சுபச் செலவுகள் காத்திருக்கு. ஆபீஸ்லயும் இது ஒரு அதிர்ஷ்டமான வாரம். எதிர்பார்த்திருந்த கோரிக்கைகள் நிறைவேறும். தொழில், வியாபாரத்தில் எதிர்பாராத அனுகூலமான திருப்பங்கள் உண்டாகும். குடும்பத்தில் ஒற்றுமை கூடி மகிழ்ச்சி தரும். சுப காரியங்கள் கூடி வரும். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் கிட்டும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**ரிஷபம்** : எல்லாக் காரியங்களும் எதிர்பார்த்தபடியே நல்லவிதமா முடிஞ்சு மகிழ்ச்சி தரும் வாரம் இது. தாராளமான பண வசதியும், எதிர்பாராத பயணமும் ஏற்படும். ஆபிசில் இதுவரை இருந்த குழப்பங்கள், பிரச்னைகள் ஓய்ஞ்சு நிம்மதியான சூழல் உருவாகும். புதிய பதவி, இடமாற்றம் சிலருக்கு உண்டாகும். தொழில், வியாபாரத்தில கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். குடும்பத்தில் புது வீடு, வாகனம், சொத்து சேருவதற்கான யோகம் கூடி வரும். ஒற்றுமை அதிகரிக்கும். பெண்களுக்கு எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து சேரும்.

**மிதுனம்**: தாராளமான பணவரவும், முக்கியமானவங்க, ஆதரவும் உங்களை சந்தோஷப்படுத்தும் வாரம் இது. எல்லாக் காரியங்கள்லேயும் முன்னேற்றமான போக்கு தொடரும். சிலருக்கு இடமாற்றம், புதிய உத்தியோகம் ஏற்படலாம். தொழில், வியாபாரத்தில கொடுக்கல் வாங்கல், ஜாமீன் விஷயங்கள்ல மட்டும் கவனமா இருங்க. குடும்பத்தில ஒற்றுமை கூடும், பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கை மகிழ்ச்சி கூட்டும்.

**கடகம்**: உங்க துணிவும் நம்பிக்கையும் சேர்ந்து சகல காரியங்களிலேயும் வெற்றி தேடித் தரும் வாரங்க இது. புது அறிமுகங்களும், சரளமான பண வசதியும் உற்சாகத்தைக் கூட்டும். ஆபீஸ்ல இதுவரை தடைப்பட்ட, தாமதமாகி வந்த உங்க கோரிக்கை, பதவி உயர்வு எல்லாம் நிறைவேறும். தொழில், வியாபாரத்தில கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். எதிர்பார்த்த உதவி கிடைக்கும். குடும்பத்தில உறவினர்கள், நண்பர்கள் ஆதரவு கூடும். சுபகாரிய முயற்சிகள் ஈடேறும். பெண்களுக்கு எண்ணம் போல எல்லாம் நடக்கும். புதிய பொருள் சேர்க்கை மகிழ்ச்சி கூட்டும்.

**சிம்மம்** : திருப்பத்துக்குத் திருப்பம் அனுகூலங்கள் காத்திருக்கு. நல்லவிதமா

**அக்னிசர்மா பக்கம்** 6.4.2005 முதல் 12.4.2005 வரை

பயன்படுத்திக்கிட்டா முன்னேற்றம் காணலாம். எதிர்ப்புகள் மறைஞ்சு சாதகமான சூழல் எல்லாக் காரியங்கள்லேயும் நிலவும். முக்கியமானவங்க ஆதரவும், தேவைக்கேற்ற பண வசதியும் உற்சாகமூட்டும். ஆபீஸ்லேயும் அனுகூலமான சூழல் உண்டாகும். தொழில், வியாபாரத்தில பணக்கஷ்டங்கள் நீங்கி முன்னேற்றம் ஏற்படும். குடும்பத்தில எதிர்ப்புகள், கருத்து வேறுபாடுகள் மறைஞ்சு ஒற்றுமையும், மகிழ்ச்சியும் ஏற்படும். பெண்கள் எதிர்பார்த்த சுப காரியங்கள் நிறைவேற ஆரம்பிச்சுடும்.

**கன்னி :** புதுப்புது அறிமுகங்களும், முக்கியமானவங்க ஆதரவும் உற்சாகப்படுத்துற வாரம் இது. எதிர்பாராத திருப்பங்கள் சிலது காத்திருக்கு. புத்திசாலித்தனமா பயன்படுத்திகிட்டா எதிர்பாராத அளவு முன்னேற்றம் காணலாம். ஆபீசிலயும் இது சிறப்பான வாரம். சிலருக்கு பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படலாம். தொழில், வியாபாரத்தில எதிர்பாராத லாபம் கிடைக்கும். புதிய தொழில் முயற்சி வெற்றி தரும். குடும்பத்தில சஞ்சலம், குழப்பம்னு இருந்த சூழ்நிலை மாறி தெளிவும், நிம்மதியும் கிடைக்கும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**துலாம் :** இதுவரை தாமதமாகி வந்த முக்கிய காரியங்கள் இனி மளமளன்னு முன்னேறி வெற்றி தேடித் தரும். எதிர்ப்புகள் மாயமாகும். முக்கியமானவங்க ஆதரவும், பண வசதியும் ஏற்படும். ஆபீஸ்லயும் சுமுகமான சூழல் ஏற்படும். தொழில், வியாபாரத்தில அனுகூலமான திருப்பங்கள் காத்திருக்கு. கொடுக்கல், வாங்கல்ல மட்டும் எச்சரிக்கையா இருங்க. வெளிநாட்டுத் தொடர்பு லாபம் தரும். குடும்பத்தில மகிழ்ச்சியும் சுபச் செலவும் கூடும். பொருளாதாரச் சிக்கல் விலகும். பெண்களுக்கு எல்லா வகையிலும் அனுகூலமான வாரம்.

**விருச்சிகம் :** குருவும் கேதுவும் சேர்ந்து சஞ்சாரம் பண்றதால தெய்வ பலமும் தெய்வீக ஈடுபாடும் கூடி உங்க காரியங்கள்ல வெற்றி தேடித் தரும். புதிய அறிமுகங்களும், ஆரோக்கிய மேன்மையும் ஏற்படும். ஆபீஸ்லயும் இதுவரை இருந்த தடங்கல், பிரச்னைகள் விலகி முன்னேற்றம் கிடைக்கும். உங்க கோரிக்கைகள் ஈடேறும். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். தொழில், வியாபாரத்தில முன்னேற்றமான திருப்பங்கள் காத்திருக்கு. குடும்பத்தில சுப காரியங்கள் கூடி வரும். கருத்து வேறுபாடுகள் மறைஞ்சு, ஒற்றுமை பலப்படும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான திருப்பம் காத்திருக்கு.

**தனுசு :** திட்டம் போட்டுப் போட்டு நிறைவேறாம நின்னு போயிருந்த உங்க முக்கிய காரியங்கள் எல்



"ஏண்டி, நான் இப்போ என்ன கேட்டுட்டேன்... என்னோட கறுப்புக் கலர் பேண்ட் எங்கேன்னுதானே கேட்டேன்... அதுக்குப் போய் இப்படி கரண்டியை கையில் எடுத்துக்கிட்டு வந்து நிக்கிற?"

"அதுதாங்க பழைய துணிக் காரன்கிட்ட போட்டு இப்படி ஆயிடுச்சு"

– களந்தை சு. ராஜகோபால்

## சூரியன் வருது!

சீயான் விக்ரம் ஆட்சி செய்யும் கோடம்பாக்கத்துக்கு 'த்ரிவிக்ரம்' என்ற நாமகரணத்தோடு ஒரு புதுமுக ஹீரோ வந்திருக்கிறார். வரும்போதே சர்ச்சைக்குரிய கதை, தலைப்பு எனக் களமிறங்கும் இவரது பெயருக்கு முன்னால் ஒட்டிக் கொண்டிருக்கும் அந்த 'த்ரி' சிவன், பிரம்மா, விஷ்ணு மூவரையும் குறிக்கிறதாம். ஒரு திராவிடக் கட்சியின் மூத்த தலைவர், அவருக்குப் பிறகு தலைமையைக் கைப்பற்ற நினைக்கும் இரண்டு மகன்கள் என்கிற அரசியல் நிஜத்தை அப்படியே குடும்பக் கதையாக மாற்றியிருக்கிறாராம் விக்ரமனிடம் பணியாற்றிவிட்டு இந்தப் படத்தை இயக்க வந்திருக்கும் சி.ஆர்.ராஜன். படத்தின் தலைப்பு, 'வரப்போகும் சூரியனே!'

- ஸ்ரீ



லாம் தடைகள் நீங்கி நிறைவேற ஆரம்பிக்கிற வாரங்க இது. தேவைக்கேற்ற பண வசதி வந்து கை கொடுக்கும். எதிர்பாராத சந்திப்புகள் சில நேரும். வி.ஐ.பி.க்கள் ஆதரவு கை கொடுக்கும். ஆபீஸ்ல அனுகூலமான திருப்பங்கள் ஏற்படும். பதவி உயர்வு, இடமாற்றம் சிலருக்கு உண்டாகலாம். தொழில், வியாபாரத்தில நிம்மதியான சூழலும், எதிர்பார்த்த உதவியும் வந்து சேரும். குடும்பத்தில தாமதமாகி வந்த சுப காரியங்கள், தடைகள் நீங்கி முன்னேறும். பெண்களுக்கு எண்ணம் போல எல்லாம் நடந்து மகிழ்ச்சி கூடும்.

**மகரம் :** மறைமுக எதிரிகளும், நேரடியா எதிர்த்தவங்களும் காணாமப் போயிடுவாங்க. எல்லாத் திசையிலிருந்தும் அனுகூலமான செய்திகள் வந்து சேரும். முக்கியமானவங்க ஆதரவும், தாராளமான பண நடமாட்டமும் உற்சாகத்தைத் தரும். ஆபீஸ்ல சுமுகமான சூழ்நிலை நிலவும். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். தொழில், வியாபாரத்தில முன்னேற்றமான திருப்பங்கள் நேரும். குடும்பத்தில திருமணம், குழந்தைப் பேறுன்னு எதிர்பார்த்திருக்கிறவங்களுக்கு சுபவேளை கூடி வந்து மகிழ்ச்சி தரும். பெண்களுக்கு, ஆடை, ஆபரணம்னு சேர்ந்து உற்சாகப்படுத்தும்.

**கும்பம் :** தெய்வ பலமும், தெய்வீக ஈடுபாடும் உங்க எல்லா காரியங்கள்லேயும் வெற்றியைத் தேடித் தரும். தேவைக்கேற்ற பணவசதி கை கொடுக்கும். பிரபு தனவான்கள் உங்களுக்கு உதவ முன் வருவாங்க. ஆபீஸ்ல எல்லார்கிட்டேயும் சுமுகமாகப் பேசிப் பழகுவது நல்லது. எதிலும் நிதானமான போக்கு பிரச்னைகளிலேருந்து காப்பாற்றும். தொழில், வியாபாரத்தில கொடுக்கல், வாங்கல்ல எச்சரிக்கையா இருக்கறது நல்லது. ஜாமீன் கையெழுத்து யாருக்கும் போட வேண்டாம். குடும்பத்தில எதிர்பாராத செலவுகள் சில காத்திருக்கு. பெண்கள் ஆரோக்கியத்தில் கவனமா இருப்பது நல்லது.

**மீனம் :** இதுவரை பொருளாதாரச் சிக்கல்கள் எல்லாக் காரியங்கள்லேயும் தடையா இருந்த நிலை மாறி, சுபிட்சமான நேரம் தொடங்குற வாரம் இது. வெளிநாட்டுத் தொடர்பு அனுகூலம் தரும். ஆபீஸ்லயும் சிறப்பான வாரம். புதிய பதவி, இடமாற்றம், சிலருக்கு ஏற்படும். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு எதிர்பார்த்த உதவிகள் வந்து சேரும். குடும்பத்தில மகிழ்ச்சி கூடும். சுபகாரியங்கள் நிறைவேறத் தொடங்கும். பெண்களுக்கு புது முயற்சிகள் வெற்றி தேடித் தரும். ○

# இளமை கல்கி

## இச்!

**இ**ந்திய உதடுகள் சென்ற வாரம் அதிகமாய் உச்சரித்த பெயர்... அம்ரிதா தாபர். மிஸ் இந்தியா - யூனிவர்ஸ் 2005.

இந்த 23 வயது புனே பதுமை, உடைகளில் புதுமை புகுத்தி வரும் ஃபேஷன் டிசைனராம்.

'கிக்'கான கேட் வாக்கால் க்ளிக்காகி இருக்கும் இந்த அழகிக்கு கிக்பாக்சிங்கும் தெரியுமாம். விளம்பரப் படங்கள், ஆல்பங்கள் என ஏற்கெனவே கேமராவும், லைட்டுகளும் பரிச்சயமாகி விட்டன. இன்னும் சினிமாவில் நடிக்க வேண்டியதுதான் பாக்கி. அதற்கும் ஆட்கள் தேடி வர ஆரம்பித்து விட்டனர்.

"அழகு பேச்சில் இருந்தால் மனதில் இருந்தால், உங்கள் தோற்றமும் அழகாகிவிடும். நான் இந்திய அழகியாக தேர்ந்தெடுக்கப்பட்டால், நிச்சயம் உலக அழகியாகத் திரும்பி வருவேன். இந்தப் போட்டியில் தோற்றுவிட்டால், ஒன்றுமில்லை. வெற்றி - தோல்வி என்ற விஷயங்களே கிடையாது. எல்லாமே அனுபவங்களே" - இவை போட்டியில் அம்ரிதா கூறிய பதில்கள். கேட்டு பழக்கப்பட்ட பதில்கள் என்றாலும்,

அழகிய உதடுகள் உச்சரித்தால் சாதாரணமான வார்த்தைகளும், சற்றே அழகாகிவிடும். உண்மைதானே!

**- ஷிவ்**



• ப்ரஜனுடன்...

## 'இது என் காதல் கதை!'

**இ**ளசுகளின் ராஜ்யம் சின்னத் திரையிலும் புகுந்துவிட்டது. கன்னடத்து இளம் பைங்கிளியான ஸ்ருதியின் டி.ஆர்.பி. ரேட்டிங் நாளுக்கு நாள் உச்சத்தில் போய்க்கொண்டிருக்க, படப்பிடிப்பில் எஸ்.சி.வி. ஹீரோ ப்ரஜனுடன் காதல் மொழி பேசிக் கொண்டிருந்தவரை 'இளமை'யாகப் பேசச் சொன்னோம்.

"ஹாய்! நான் பெங்களூர் பொண்ணு. அப்பா கன்னடம். அம்மா தமிழ். விரும்பியது பறவையாய் சிறகடிக்கும் விமானப் பணிப்பெண் வேலை. 'ஆபத்தைத் தேடாதே' என்ற அறிவுரைக்குப் பிறகு, சேஃபாக நடிப்புத் துறையை தேர்ந்தெடுத்துவிட்டேன்.

கன்னட சீரியல்களில் நடித்ததன் பலனாய் தமிழில் எதிர்நீச்சல், எங்கிருந்தோ வந்தாள் என பல சீரியல்கள். இப்போது முதன்முறையாக விஜய்




டீ.வி.யில் வரும் 'இது ஒரு காதல் கதை' யில் ஹீரோயின். எனக்கு ஜோடி ப்ரஜன்.

என் பெற்றோர், அக்கா எல்லோரும் காதல் திருமணம் செய்தவர்கள்தான். எனக்கு இந்த நிமிடம் வரை காதலில் நாட்டம் கிடையாது. ஆனால், என்னை நிறையப் பேர் உருகி உருகி லவ் பண்ணாங்க. ப்ச்... எனக்குப் பிடிக்கலை.

ஒருத்தன் என் முன்னாடி 'ஐ லவ் யூ' சொல்லிட்டே கையை பிளேடால கிறிட்டு சீரியஸா பேசினான். என்ன அநியாயம், எனக்காக ரெண்டு வருஷம் காத்திருந்தவன், கடைசியில என் கூடவே இருந்த ஃப்ரெண்டை லவ் பண்ணி கல்யாணம் பண்ணிக்கிட்டான். 'பொழச்சண்டா'ன்னு நினைச்சுக்கிட்டேன். காதல் நல்லதா, கெட்டதான்னு இன்னும் என்னால புரிஞ்சுக்க முடியல. அதோட தீவிரத்தை நினைச்சா பிரமிப்பா இருக்கு.

என்கூட நடிக்கிற ப்ரஜன் மேல இந்தப் பொண்ணுங்க எவ்ளோ பைத்தியமா இருக்காங்க! ரத்தத்துல எழுதின லெட்டர்ஸையெல்லாம் ப்ரஜன் காண்பிச்சாரு. அவருக்கு ஜோடியா நடிக்கிறதால கேர்ள்ஸ்லெல்லாம் பொறாமையில என்னை ஏதாவது பண்ணிடுவாங்களோன்னு கொஞ்சம் பயமாத்தான் இருக்கு! கூடவே இந்த ஹீரோயினை எந்தனை ரசிக ஹீரோக்கள் லவ்ஸ் விடப் போறாங்கன்னு அச்சமாவும் இருக்கு."

- ச.ந. கண்ணன்

# இளமை கல்கி

**ராகுல்காந்தி** : எம்.பியாகி பத்து மாதங்கள் நாடாளுமன்றத்தில் உரை நிகழ்த் தாமல் அமைதி காத்த ராகுல் காந்தி, ஒரு வழியாக கன்னி உரை நிகழ்த்தி விட்டார். அவர் தமது பேச்சில் உ.பி. அரசை கடுமை யாக விமர்சித்ததும், புள்ளி விவரங்களு டன் ஆக்ரோஷமாகப் பேசியதும், பலரது புருவங்களை உயர்த்திவிட்டது. எப்படி இத்தனை விவரங்களைச் சேகரித்தார் என்று பார்த்தால், ராகுலுக்கு உதவியாக கிட்டத்தட்ட பத்து இளம் எம்.பிக்கள் தகவல் சேகரித்துத் தரும் பணியில் ஈடுபட்டார்களாம்.

**ஜோதிர் ஆதித்ய சிந்தியா** : மாதவராவ் சிந்தியாவின் மகனும், காங்கிரஸ் எம்.பியுமான ஜோதிர் ஆதித்ய சிந்தியாவை, சக எம்.பிக்கள் சுறுசுறுப்புத் திலகம் என வாயாரப் புகழ்கின்றனர். நாடாளுமன்ற விவாதங்களில் ஆர்வத்துடன் பங்கேற்பதிலிருந்து, தொகுதிகளின் நலத் திட்டங் களுக்காக சக எம்.பிக்கள் மற்றும் மத்திய அமைச்சர்களை சந்தித்து வேண்டுகோள் விடுப்பது வரை, மனிதர் படு சுறுசுறுப்பாகச் செயல் படுகிறார். அதே சமயம் மற்ற எம்.பி.க்களுக்கும் யாரைப் பார்த்தால் தொகுதிக்கு உடனே வேலை ஆகும் என்று டிப்ஸ் வேறு தருகிறார்.

**உமர் அப்துல்லா** : வளர்த்த கடா மார்பில் பாயும் என்பதைப் போல, தேசிய மாநாட்டுக் கட்சியின் தலைவரான உமர் அப்துல்லா, பாகிஸ்தானுக்கு பேருந்து அனுப்பும் விவகாரத்தில், பரூக் அப் துல்லாவின் கருத்துக்கு கடுமையாக எதிர்ப்பு தெரிவித்து விட்டிருக்கிறார். அதே சமயம் பரூக்கின் கருத்துக்கும் கட்சிக்கும் தொடர்பில்லை என்று பேசியது, கட்சிக்குள்

## பாலிடிக்ஸ்

# 'ஹேய் பேய், ஹவ் ஆர் யூ?'

**சீ**னாவில் ஒவ்வொரு வருடமும் 'பேய் மாதம்' என்று ஒன்று உண்டு. இந்த மாதத் தில் பல ஊர்களிலிருந்தும் வெரைட்டி யான பேய்கள் கும்பல் கும்பலாக சீன வீதிகளில் இறங்கி வந்து (அல்லது பறந்து வந்து, அல்லது எழுந்து வந்து, அல்லது ஆட்டோ பிடித்து வந்து!) ஜாலியாக சீன இளைஞர்கள், இளைஞிகளோடு கூத் தடிக்குமாம். இந்த விழாவின் பெயர் 'கங் யுவான் புட்டு'. ஐய்யய்யோ! அப்படி யானால் சீனர்கள் எல்லோரும் விழுந் தடித்து ஓடுவார்கள்தானே? அதுதான் இடையாது.

ஏதோ ஓல்ட் ஃப்ரெண்ட்ஸ் பக்கத்து ஊருக்குப் போய் திரும்பி வந்ததைப் போல "ஹேய் பேய், ஹவ் ஆர் யூ?" என்றோ, "என் னப்பா ஆச்சு? லாஸ்ட் டைம் பார்த்ததுக்கு ஒரு சுத்து இளைச்சுப் போனா மாதிரி இருக்கியே, சாப்பாடு ஒத்துக்



பெருத்த அதிர்ச்சி அலைகளை ஏற்படுத்தியுள்ளது.

**கார்த்தி சிதம்பரம்** : பேரியக்கத்தில் இணைந்ததிலிருந்து, கார்த்தி சிதம்பரம் கட்சிக்காரர்களுடன் அதிக நெருக்கம் காட்டி வருகிறார். அதுவும் கட்சிப் பொதுக் கூட்டங்கள், கட்சிக்காரர்கள் வீட்டு நிகழ்ச்சிகள் என்று முடிந்தவரை கலந்து கொண்டு, தொண்டர்களைக் கவர்ந்து வருகிறார். "போகிற போக்கைப் பார்த்தால், வரும் சட்டமன்றத் தேர்தலில் காரைக்குடியை வளைத்து விடுவார் போலிருக்கிறதே" என்கிறார்கள் கதர்ச் சட்டைக்காரர்கள்.

**அன்புமணி** : தமது துறை தொடர்பான அரசு விளம்பரங்களில் தயாநிதி மாறனின் புகைப்படம் மிளிர்வதைப் போன்று, அன்புமணியின் துறை சார்ந்த விளம்பரங்களில் அவரது புகைப்படம் மிளிர வேண்டும் என்று அன்புமணியைத் தொடர்ந்து நச்சரித்த வண்ணம் உள்ளனராம் தொண்டர்கள். ஆனால், இவ்விஷயத்தில் கொஞ்சம் அடக்கியே வாசிக்க வேண்டும் என்பதில் தெளிவாக இருக்கிறதாம் அன்புமணி தரப்பு!

**- கலை**




* ராகுல்



* உமர் அப்துல்லா



* ஜோ.ஆ. சிந்தியா

கலையா?" என்றோ, 'உங்க 'ஊர்ல' ஏதாவது புதுப் படம் ரிலீஸ் ஆயிருக்கா?" என்றோ மனம்விட்டு சாட்டிங் செய்வார்களாம்.

பேய்களும் குஷியாக ஏதோ சம்மர் வெகேஷனுக்கு வீட்டுக்கு வந்ததைப் போல, ஒரு மாதம் முழுக்க சீனர்களோடு 'தங்கியிருந்து' கூத்தடிக்குமாம். கண்டதைச் சாப்பிட்டு 'நாக்கு செத்துப்போன' ஐயோ பாவம் பேய்களுக்கு, ஸ்பெஷலாக பல வெரைட்டி உணவு வகை பறிமாறப்படும்.

இந்தப் பேய்களுக்கு இளம் பெண்களின் நடனம் ரொம்பவும் பிடிக்குமாம். (பேய்களுக்குமா?). இதற்காகவே லேட்டஸ்ட் சீனப் படங்களிலிருந்து சூப்பர் டூப்பர் ஹிட் பாடல்களைப் பாடிக் கொண்டே சீனப் பெண்கள் டான்ஸ் ஆடுவார்களாம். பேய்களும் இரவு முழுக்க கொட்டக் கொட்ட கண் விழித்துப் பார்த்து கைதட்டி ரசிக்குமாம். (பாவம் கால் இருந்தால் டூயட் ஆடியிருக்கும்).

இளைஞர்கள் தம் பங்கிற்கு 'சும்மாங் காட்டி' சீன ரூபாய் நோட்டுகளை டன் டன்னாகக் கொண்டு வந்து போட்டு மொத்தமாகக் கொளுத்தி பேய்களுக்கு 'தாங்க்யூ' சொல்வது வழக்கம். ஆனால் பாருங்கள், இந்தப் பேய்களுக்கு இளைஞர்களை அவ்வளவாகப் பிடிக்காதாம். (அடப் பாவி பேயே!)

ஒரு முக்கிய எச்சரிக்கை... நம்முடைய கேர்ள் ஃப்ரெண்டைவிட இந்தப் பேய் எவ்வளவோ பெட்டர் என்று ஜொள்ளுவிட்டு யாரும் தப்பித் தவறிக்கூட ஒரு பேயைப் பார்த்து விசிலடிக்கவோ, 'பேய்' டீஸிங் செய்யவோ கூடாது. அப்படிச் செய்தால் அவர்கள் வீட்டிற்கு அந்தப் பேய் வந்து நிரந்தரமாக செட்டில் ஆகிவிடும்.

அது சரி, உண்மையில் பேய் இருக்கிறதா? கட்டாயம் இருக்கிறது. சந்தேகமிருந்தால் காதலிப்பவர்கள் யாரையாவது கேட்டுப் பாருங்கள். 'பேய் ஈஸ் ச்சோ ச்வீட்' என்பார்கள்.

**- ஒல்லியான்**

# சுடிதார் மாமி!

தமிழகத்து நடுத்
தரக் குடும்பங்களில் கல்கி ஒரு
உறுப்பினராகவே இருந்து வருகிறது.
கல்கிக்குப் பின்னால் வந்த பத்திரிகைகள்,
வியாபாரத் தந்திரத்தை மனதில் வைத்து பல
யுக்திகளைக் கையாண்டு விற்பனையைப்
பெருக்கும்பொழுது, கல்கி அந்தச் சவால்
களையும் மீறி, பத்தியத்தைக் கடைப்
பிடித்து, தொடர் நடைபோடுவது பாராட்
டுக்குரிய விஷயம்.

சமீப காலமாக கல்கியில் பல மாற்
றங்களைக் கண்கூடாகப் பார்க்கின்றேன்
ஒரே வரியில் சொல்ல வேண்டு
மென்றால், மடிசாரிலேயே நான் பார்த்த
மாமி, சுடிதாரில் தோன்றியதைப் போல
இருக்கிறது. உடை மாறினாலும், பண்
பாடு குன்றாமல் இருப்பதை மனதார
வரவேற்கிறேன்.

- இல.கணேசன்

படம் : ஸ்ரீஹரி